# இலங்கைத் தமிழரின்
# பண்டைய கால நாணயங்கள்



கலாநிதி பரமு. புஷ்பரட்ணம்

# இலங்கைத் தமிழரின்
# பண்டைய கால நாணயங்கள்

**கலாநிதி பரமு. புஷ்பரட்ணம்**
முதுநிலை விரிவுரையாளர்
வரலாற்றுத்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம். இலங்கை

பவானி பதிப்பகம்
யாழ்ப்பாணம்

2001



# பொருளடக்கம்

# 1. இந்திய நாணயங்களும் இலங்கைத் தமிழர்களும்

மனித நாகரிக வரலாற்றில் நாணயங்களின் தோற்றம் புதிய கால கட்டத்தைக் குறித்து நிற்கின்றது. இதன் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் மிகையான உற்பத்தியும், வணிக வளர்ச்சியும் அடிப்படைக் காரணங்களாக அமைந்தன. மனிதன் தனது தேவை போக மிகுதியை மற்றவனுக்குக் கொடுத்து தனக்குத் தேவையான பொருட்களைப் பெற்றுக்கொள்ளும் வர்த்தகப் பரிவாற்று முறையால் பண்டமாற்று முறை தோன்றியது (Barter System). இப்பண்ட மாற்று முறை உலகத்தின் பல பாகங்களில் வணிகத்தின் தொடக்க காலத்திலிருந்து ஏற்பட்டன. இலங்கையில் இம்முறை பெருங்கற்காலப் பண்பாட்டுடன் ஏற்பட்டிருக்கலாம் என்பதை அப் பாண்பாட்டில் பெறப்பட்ட தென்னிந்தியாவுக்குரிய சிலவகை மட்பாண்டங்கள், கல்மணிகள் மற்றும் அலங்காரப் பொருட்கள் உறுதிப்படுத்துகின்றன. இதற்கு மாற்றீடாக இலங்கையில் இருந்து முத்து, இரத்தினங்கள் பெறப்பட்டிருக்கலாம் என்பதனை கௌடலியனின் அர்த்தசாஸ்திரத்தில் வரும் குறிப்புக்கள் நினைவுபடுத்துகின்றன. இப்பண்டமாற்றின் இன்னொரு கட்ட வளர்ச்சியில் ஒவ்வொரு நாட்டிலும், வட்டாரத்திலும் எது மிகுதியாகக் கிடைக்கிறதோ அதை மையப்பொருளாகக் கொண்டு வர்த்தகம் நிகழ்ந்தது.

தென்னாசியாவைப் பொறுத்தவரை வர்த்தகத்தின் மையப் பொருளாகப் பசு விளங்கியது. இதில் பசுவுக்கு ஒரு விலை தீர்மானிக்கப்பட்டு அதன் பெறுமதிக்கு ஈடாக மற்றப் பொருட்கள் பெறப்பட்டன. பசுவுக்கு ஈடாக மற்றப் பொருட்கள் இருக்கும் போது,

இம்முறை இலகுவாக இருந்தாலும் மற்றப் பொருட்களின் விலை குறைவாக இருக்கும் போது பண்டமாற்று முறையில் பல சிக்கல்கள் ஏற்பட்டன. இதனால் காலப்போக்கில் பசுவுக்குப் பதிலாக வேறு பொருட்களை வணிகத்தின் மையப் பொருளாகப் பயன்படுத்த மக்கள் விரும்பினர். இதன் காரணமாக காலத்திற்கு காலம் சோழிகள் (Cowrie Shells), குன்று மணிகள் என்பன பசுவுக்கு மாற்றீடான வணிகத்தின் மையப் பொருட்களாக மாறின. இவற்றிலிருந்தே காலப் போக்கில் பொன், வெள்ளி, செப்பு, ஈயம் போன்ற உலோகங்களில் வார்க்கப்பட்ட நாணயங்கள் தோற்றம் பெற்றன(Gupta 1969).

## கல்வெட்டு, இலக்கியங்களில் நாணயங்கள்

ஆதிகாலத்தில் பண்டமாற்றுமுறையில் எழுந்த சிக்கல் நாணயத்தின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தது. அன்று தொட்டு பொருட்களின் அளவுகோலாக விளங்கும் நாணயங்கள் இன்று வரலாற்று ஆய்வில் முக்கிய மூலாதாரங்களில் ஒன்றாகக் கணிக்கப்படுகிறது. ஆனால் இந்நாணயங்கள் தென்னாசியாவில் எங்கே? எப்போது? எவ்வாறு? தோன்றின என்பதில் அறிஞர்களிடையே பொதுப்பட்ட கருத்தொற்றுமை காணப்படவில்லை. தெளிவான எடை, அளவு கொண்ட நாணயங்கள் சிந்துவெளி நாகரிக காலத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்பதற்கு அங்கு கிடைத்த முத்திரைகளை அறிஞர்கள் சிலர் சான்றாதாரம் காட்டு கின்றனர் (Devendra Handa 1985). ஆனால் சிந்துவெளி நாகரிக வீழ்ச்சிக்கும், பிற்கால நாகரிகத்தின் தோற்றத்திற்கும் இடையிலான தொடர்பை உறுதிப்படுத்த சான்றுகள் உறுதியாகக் கிடைக்கவில்லை. இந்நிலையில் சிந்து வெளி நாகரிக காலத்தில் நாணயங்கள் இருந்தனவா? என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாதிருக்கிறது. ஆனால் கி.மு. 6-ஆம் நூற்றாண்டிலிருந்து இந்தியாவில் பொதுவாக தென்னாசியாவில் பரவலாக நாணயம் புழக்கத்தில் இருந்திருக்கலாம் என்பதற்கு வடமொழி, பாளி, சிங்கள, தமிழ் இலக்கியங்களிலும், கல்வெட்டுக்களிலும் பல சான்றுகள் காணப்படுகின்றன. அவற்றின் பெயர்கள் மொழிக்கும், இடத்திற்கும் ஏற்ப பல பெயர்கள் கொண்டு

அழைக்கப்பட்டுள்ளன.

பாணினியின் *அஷ்டயாயி* என்னும் இலக்கண நூலில் *கார்ஷாபணம், நிஷ்கா, சதமானம், பாதம், விம்சதிக, தரிம்சதிக, கானா* ஆகிய நாணயங்கள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன (Gupta 1969:6). இதில் கார்க்ஷாபணம் என்பது பொன், வெள்ளி, செப்பு போன்ற உலோகங்களால் ஆக்கப்பட்டன. அத்துடன் இந்நாணயங்களின் பின்னங்களைக் குறிக்க கார்ஷாபாண, அர்த்த கார்ஷாபாண, பாதகார்ஷாபண என்ற சொற்றொடர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. நிஷ்கா என்பது உருவம் பொறித்த நாணயமாகும். இது ரூபா என்னும் சொல்லின் மூலம் சுட்டிக்காட்டப்படுகிறது. இந்நூலுக்குரிய பாணினியின் காலம் கிமு.6–ஆம் நூற்றாண்டெனக் கணிக்கப்பட்டுள்ளதால் இக்காலத்தில் நாணயத்தின் வெளியீடு இந்தியாவில் இருந்ததெனக் கூறலாம் (Gupta 1969:6).

இலங்கையைப் பொறுத்தவரை நாணயங்களின் தோற்றம், வளர்ச்சி இந்திய நாணயங்களின் வரலாற்றோடு இணைந்த ஒன்றாகும். இலங்கையின் ஆரம்பகால நாணயங்கள் (முத்திரை நாணயங்கள்) இந்தியாவிலிருந்தே கொண்டுவரப்பட்டவையாகும். காலப்போக்கில் இலங்கையில் வெளியிடப்பட்ட நாணயங்கள்கூடப் பெரும் அளவுக்கு இந்திய நாணய மரபை அடியொற்றித் தோன்றியவையாகும். இதனால் இலங்கை வரலாற்று மூலங்களில் நாணயத்தைச் சுட்டும் பெயர்கள் பலவும் இந்தியாவின் பெயர்களோடு பெருமளவு ஒற்றுமை கொண்டு காணப்படுகின்றன. வடமொழியில் *கார்ஷாபண* என்ற சொல் இலங்கைப் பாளி நூல்களில் *கஹவன* எனவும் (M.V.XX:3), கல்வெட்டுக்களில் *கஹபநெ* எனவும் (I.C. 1970:No.791), சிங்களத்தில் *கஹவனு* எனவும் (Codrington 1924:13) குறிப்பிடப்பட்டுள்ளது. கிமு.2–ஆம் நூற்றாண்டுக்கு முன் அநுராதபுரத்தில் ஆட்சிபுரிந்த *எல்லாளன்* என்ற தமிழ் மன்னன் இடிந்துபோன தாது கோபுரத்தைத் திருத்தியமைக்க 1500 நாண யங்களைக் (கஹபண) கொடுத்தான் என *மகாவம்சம்* கூறுகிறது (M.V.XXI:11-13). இக்காலத்திலிருந்துதான் நாணயப் புழக்கம்

இலங்கையில் ஏற்பட்டதற்கான செய்தி பெருமளவுக்கு இலக் கியங்களிலும், கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றன.

மேற்குறிப்பிட்ட சொற்களோடு இலங்கையில் *காலகஹபண* (Kala Kahapana), *சிசகஹபண* (Sisakahapana), *பத* (pada), *மசக* (Masaha), *ககநிக* (Kakanika) போன்ற சொற்களும் நாணயத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. அத்துடன் நாணயத்தின் உலோகத்தைக் குறிக்க அடக (adaha)–(வெள்ளி), ஜதருபா (Jatarupa)–(பொன்) போன்ற சொற்களும், நிறத்தை குறிக்க *கரிசம்* (Karisam) என்ற சொல்லும், எடைப் பெறுமதியைக் குறிக்க *பத* (Pada) என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளன (Codrington 1924:13). கொட்றிங்ரன் என்ற நாணயவியலாளர் இந்திய இலக்கியங்களில் நாணயத்தைக் குறிக்கப் பயன்படுத்தாத சில சொற்கள் இலங்கை வரலாற்று மூலங்களில் பயன்படுத்தப் பட்டுள்ளதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

தமிழ் இலக்கியத்தில் காசு என்ற சொல்லால் நாணயம் குறிப்பிடப்படுகிறது. ஆனால் பல இடங்களில் இச்சொல் பிறபொருள் குறித்த சொல்லாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் வரும் *பொன்செய்காசு* (நற் 274:4), *பொலங்காசு* (குறுந் 67:4), *மணிக்காசு* (நற் 66:9) என்ற சொற்றொடர்கள் அணிகலன்களைக் குறிக்கின்றன. சில இடங்களில் உவமைப் பொருளாகவும், குற்றம் என்ற பொருளிலும் கையாளப்பட்டுள்ளது. காசு என்ற சொல்லோடு *காணம், பொன், மணி* போன்ற சொற்களும் தமிழ் இலக்கியத்தில் நாணயத்தைக் குறிக்கின்றன. அவற்றுள் காணம் என்பது பிற்காலத்தில் வழங்கப்பட்ட சொல்லாகும். இடைக்காலத் தமிழ்க் கல்வெட்டுக்களில் *அக்கம், அச்சு, காசு, அன்றாடு நற்காசு, ஈழக்காசு, ஈழக்கருங்காசு, காணம், குளிகை, சின்னம், திரமம், பணம், பழங்காசு, பொன், மாடை, வராகன்* போன்ற சொற்கள் நாணயத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன (பவானி 2000: 133).

## வரலாற்றாய்வில் இலங்கை நாணயங்கள்

ஒருநாட்டின் வரலாற்றை ஆராய இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், வெளிநாட்டார் குறிப்புக்கள், நாணயங்கள், தொல்பொருள் சின்னங்கள் போன்றவை முக்கிய சான்றுகளாகப் பயன்படுத்தப்படுகின்றன. இதில் பண்டைய கால வரலாற்றை அறிய உதவும் நம்பகரமான வரலாற்று ஆதாரங்கள் என்ற வகையில் கல்வெட்டுக்களைப் போன்ற முக்கியத்துவத்தை நாணயங்களும் பெறுகின்றன. இவை இலக்கியங்கள் மற்றும் கல்வெட்டுக்களைப் போன்று தொடர்ச்சியான, நீண்ட வரலாற்றைக் கூற உதவாவிட்டாலும் இவற்றிலிருந்து நாணயங்களை வெளியிட்ட மன்னனின் பெயர், வம்சம், காலம், அவர்கள் பின்பற்றிய மதம், வணங்கிய தெய்வம், தெய்வ வடிவங்கள், கலை, ஆட்சிமொழி, மொழிவளர்ச்சி, எழுத்து, எழுத்துவடிவம், பொருளாதாரம், ஆட்சிப் பரப்பு, உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகம் ஆகிய அம்சங்களை அறிந்து கொள்ளப் பெரிதும் உதவுகின்றன.

தென்னாசியாவில் நாணயங்களை வரலாற்றாய்வில் பயன்படுத்தும் கலையானது கிபி.12–ஆம் நூற்றாண்டில் காஷ்மீரில் வாழ்ந்த *கல்கணர்* என்ற வரலாற்று ஆசிரியரால் ஆரம்பிக்கப்பட்டது. ஆயினும் நவீன வரலாற்றாய்வில் அதன் உபயோகம் மிக அண்மைக்காலத்திலேயே உணரப்பட்டது. மறுமலர்ச்சிக் கால ஐரோப்பாவில் அழகியலை அடிப்படையாகக்கொண்டு நாணயங்கள் சேகரிக்கும் ஆர்வம் தோற்றம் பெற்றாலும் கி.பி. 18–ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில்தான் அதன் முக்கியத்துவம் வரலாற்றாய்வில் உணரப்பட்டது. இம்முறை இந்தியாவிலும், இலங்கையிலும் கி.பி. 19–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிரித்தானியரால் கைக்கொள்ளப்பட்டது. இந்தியாவின் பண்டைய கால வரலாறு பற்றிய ஆய்வில் இன்று நாணயங்கள் தனியொரு துறையாக வளரும் நிலைமையை எட்டியுள்ளது. அந்நிலை இலங்கையில் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து இலங்கையில் கிடைத்த நாணயங்கள் ஆராயப்பட்டு வருகின்றன. இதைத் தொடக்கி வைத்தவர்களில் ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் இலங்கை அரச சேவையில் உயர் பதவி வகித்த ஆங்கிலேயர்களுக்கு முக்கிய பங்குண்டு. முதன் முதலில் பிறின்செப் (Prensop1858) என்ற அறிஞர்தான் 1858 இல் இந்தியத் தொல்பொருள் பற்றிய தொகுப்பில் இலங்கையில் கிடைத்த பல்வேறு காலப்பகுதிக்குரிய நாணயங்கள் பற்றி ஆராய்ந்துள்ளார். இதில் யாழ்ப்பாண அரசு கால நாணயங்கள் உட்பட சில தமிழ் நாணயங்களுக்குரிய புகைப்படங்களை கட்டுரையில் பிரசுரித்துள்ள போதிலும் தமிழ் மொழியில் பயிற்ச்சியில்லாத காரணத்தால் அவற்றை அவரால் அடையாளப்படுத்த முடியவில்லை. ஏறத்தாழ இதே காலப்பகுதியில் தான் ராய்டேவிட் (Rays Danids1877), பெல் (Bell), வில்லியம் கைகர் (Wilhem Geiger) ஸ்ரில் (Still) போன்ற அறிஞர்கள் இலங்கையின் பல வட்டாரங்களில் கிடைத்த பலவகை நாணயங்களை ஆராய்ந்து பல கட்டுரைகளை வெளியிட்டனர். இவற்றைத் தொடக்க காலத்தில் ஆராய்ந்த பலரும் ஐரோப்பியராக இருந்ததால் இவர்கள் இலங்கையில் கிடைத்த கிரேக்க, ரோம மற்றும் ஐரோப்பியர் கால நாணயங்களை ஆராய்வதில் கூடிய கவனம் செலுத்தினர்.

கி.பி.1885-இல் வடஇலங்கையில் முல்லைத்தீவில் கிடைத்த நாணயங்கள் பற்றி பாக்கரும் (Parkar 1981:461), கி.பி.1917-இல் கந்தரோடையில் கிடைத்த நாணயங்கள் பற்றி பீரிஸ்சும் (Pieris 1919:45-60) ஆராய்ந்ததைத் தொடர்ந்து இலங்கை நாணயங்கள் பற்றிய ஆய்வில் வடஇலங்கை நாணயங்களும் முக்கிய இடம்பெற்றன. இதற்கு கி.பி. 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளிவந்த *Journal of Royal Asiatic Society, The Literary Register* போன்ற சஞ்சிகைகள் களமமைத்துக் கொடுத்தன. கி.பி.1924-இல் கொட்றிங்ரனால் பிரசுரிக்கப்பட்ட *The ceylon coins and currency* என்ற நூல் இலங்கை நாணய வரலாறு பற்றிக் கூறும் முதல் நூலாகும் (Codrington 1924). இதுபோன்ற ஒருநூல் இதுவரை இலங்கை

நாணயங்கள்பற்றி வெளிவரவில்லை. காலங்கடந்த இந்நூலில் பல குறைபாடுகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ள போதிலும் பிற்காலத்தில் நாணயங்கள் தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளுக்கெல்லாம் இந்நூலே அடிப்படை மூலாதாரமாக விளங்கியது என்பதில் சந்தேக மில்லை. இந்நூலில் சிங்கள மன்னர்கள் மற்றும் வடஇலங்கையில் கி.பி.13ஆம் நூற்றாண்டுக்குப் பின் ஆட்சிபுரிந்த தமிழ் மன்னர்கள் வெளியிடப்பட்ட நாணயங்கள் உட்பட நாணயங்களின் தோற்றம், வளர்ச்சி, வரலாறு, உள்நாட்டு, வெளிநாட்டு நாணயங்கள், அவை காணப்பட்ட இடங்கள், அவற்றின் காலம், வம்சம், நாடு போன்ற அடிப்படையில் பகுப்பாய்வு செய்யப்பட்டு விரிவாக ஆராயப் பட்டுள்ளன.

அண்மைக் காலங்களில் பெருமளவு நாணயங்கள் அகழ்வாய்வின் போதும், மேற்படை ஆய்வின்போதும் பெறப்பட்டன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு பரணவிதானா, ஸ்ரீசோமா, அமரசிங்கா, வேல்புறி (Wolbury), சிறிப் (Cribe) குணசேகர, குலத்துங்கா போன்ற அறிஞர்கள் ஆய்வை மேற்கொண்டனர் (Bopearachchi 1998:IZ-XIII). இவ்வாய்வுகள் பெரும்பாலும் குறிப்பிட்ட இடத்தின் அல்லது குறிப்பிட்ட ஒருகாலத்திற்குரிய நாணயங்கள் பற்றிய ஆய்வாகவே இருந்தன. அண்மையில் வீரக்கொடி, பொபிஆராய்ச்சி பதிப்பில் வெளியான நூலும் (Bopearachchi and weerakkody 1998), பொபிஆராய்ச்சி, ராஜவிக்கிரமசிங்கே இணைந்து எழுதிய நூலும் (Bopearachchi and wickremaesinhe, Rajah 1999) கொட்றிங்ரன் நூலுக்குப்பின் இலங்கை நாணய வரலாற்றைக் கூற எழுந்த முக்கிய நூல்களாகக் கூறப்படுகின்றன. இவற்றில் நாணயங்களின் தோற்றம், வளர்ச்சி இலங்கையில் கிடைத்த உள்நாட்டு, வெளிநாட்டு நாணயங்கள் என்பன பற்றிக் குறிப்பி டப்பட்டுள்ளன. அத்துடன் அண்மைக்கால அகழ்வாய்வில் பெறப்பட்ட நாணயங்களைக் கொண்டு புதிய காலக் கணிப்பும் கொடுக்கப் பட்டுள்ளது. ஆயினும் கொட்றிங்ரன் நூலோடு ஒப்பிடுகையில் இந்நூல்கள் இலங்கையில் கிடைத்த நாணயங்கள் பற்றி விரிவான

தரவுகளையோ அல்லது அவற்றின் வரலாற்றையோ முழுமையாகத் தருவதாகக் கூறமுடியாதிருக்கிறது.

## வரலாற்றாய்வில் வடஇலங்கை நாணயங்கள்

பொதுப்பட இலங்கையில் கிடைத்த நாணயங்கள் குறித்து ஆராயப்பட்ட அதேவேளையில் தமிழ் அறிஞர்கள் மற்றும் வரலாற்று ஆர்வலர்கள் வட்டார அடிப்படையில் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களை ஆராயும் மரபு நீண்ட காலமாக இருந்து வருகிறது. இதற்குத் தமிழர்கள் பண்டு தொட்டு இங்கு வாழ்ந்து வருவதும், 13ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழ் அரசால் இவ்வட்டாரம் ஆட்சி செய்யப்பட்டதும் காரணமாக இருக்கலாம். 1971 இல் பேராசிரியர் இந்திரபாலா, பேராசிரியர் சிவசாமி, இன்றைய தினக்குரல் பத்திரிகையின் பிரதம பதிப்பாசிரியர் சிவநேசச்செல்வன் மற்றும் வரலாற்று ஆர்வலர்கள் முயற்சியால் தோற்றுவிக்கப்பட்ட *யாழ்ப்பாணத் தொல்லியல் கழகம்*, நாணயங்களைக் கண்டுபிடிக்கவும் அவற்றை இக்கழகத்தின் வெளியீடான பூர்வகலா என்ற சஞ்சிகையில் வெளியிடவும் களமமைத்துக் கொடுத்தது. இதற்கு பேராசிரியர் சிவசாமியால் வெளியிடப்பட்ட யாழ்ப்பாணத்தில் கிடைத்த நாணயங்கள் தொடர்பாக இச்சஞ்சிகையில் வெளிவந்த கட்டுரைகளைக் குறிப்பிடலாம். ஆயினும் அதன் குறுகிய கால தீவிர வளர்ச்சி மிகக் குறுகிய காலத்திலேயே மறைந்து விட்டது.

இவ்வட்டாரத்தில் தென்னாசியாவில் பயன்படுத்தப்பட்ட முத்திரை நாணயங்கள் (Punch Marks Coins) தொட்டு ஐரோப்பியர் ஆட்சிக்காலம் வரையிலான பல வகை நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை வல்லிபுரம், நாகர்கோயில், புலோலி, மட்டுவில், மானிப்பாய், பண்டத்தரிப்பு, தெல்லிப்பளை, தொல்புரம், வட்டுக்கோட்டை, அல்லைப்பிட்டி, மண்கும்பான், நாரந்தனை, புங்குடுதீவு, ஆனைக்கோட்டை, நல்லூர், பூநகரி, மாதோட்டம், வரணி, கச்சாய், உடுத்துறை, முல்லைத்தீவு போன்ற இடங்களிலிருந்து பெறப்பட்டன (சிவசாமி 1974:26-36, புஷ்பரட்ணம்

2000). இவற்றுள் கந்தரோடை, வல்லிபுரம், பூநகரி, மாதோட்டம் ஆகிய இடங்களில் ஆதிகால, இடைக்கால நாணயங்கள் எண்ணிக்கையில் அதிகமாகப் பெறப்பட்டன.

வடஇலங்கையில் தமிழ் அரசுகள் தோன்றுவதற்கு சாதகமாக இருந்த காரணங்களை ஆராய்ந்த முதலியார் இராசநாயகம் (Rasanayagam 1926), சுவாமி ஞானப்பிரகாசர் (Gnana prakasar 1930), பேராசிரியர் இந்திரபாலா (1972), பேராசிரியர் பத்மநாதன் (Pathmanathan 1978, 1980) போன்றோர் அதற்கு வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களையும் ஒரு சான்றாதாரமாகப் பயன்படுத்தியுள்ளனர். ஆயினும் இந்த ஆய்வில் மத்தியகால நாணயங்கள் கூடிய அளவுக்கு முதன்மைப்படுத்தி ஆராய்ந்த அளவுக்கு முற்பட்ட கால நாணயங்கள் ஆராயப்படவில்லை. மாதோட்டத்தில் கிடைத்த மூன்று வகை நாணயங்களை ஆராய்ந்த சாசனவியல் அறிஞர் மகாதேவன் அவற்றை அரிய நாணயங்கள் எனக் குறிப்பிட்டு யாழ்ப்பாண மன்னர்கள் சேது மொழி பொறித்த நாணயங்களுடன் வேறு பல நாணயங்களையும் வெளியிட்டிருக்கலாம் என்ற கருத்தை ஏற்படுத்தினார் (Mahadevan 1970). பேராசிரியர் சிவசாமியின் (1974) *யாழ்ப்பாணக்காசுகள்,* திரு.கிருஷ்ணராஜாவின் (1983:71-83) *யாழ்ப்பாணக் குடாநாட்டில் கிடைத்த நாணயங்கள்* என்ற ஆய்வுக் கட்டுரைகளும், திரு. சேயோனின் (Seyone 1998) *இலங்கையில் கிடைத்த பண்டைய கால நாணயங்கள்* என்ற நூலும் வடஇலங்கையின் பண்டைய கால நாணயப் பயன்பாட்டை வட்டார அடிப்படையில் கூற எழுந்த ஆய்வுகள் எனக் குறிப்பிடலாம். அவற்றில் ஆதிகாலம் தொடக்கம் ஐரோப்பியர்காலம் வரையுள்ள நாணயங்கள் நாடு, வம்சம், மன்னன், காலம் என்ற அடிப்படையில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. கலாநிதி இரகுபதியின் (Ragupathy 1997) *புராதன யாழ்ப்பாணக் குடியேற்றம்* பற்றிய தொல்லியல் நூலில் ஆசிரியர் தான் மேற்கொண்ட அகழ்வாய்விலும், களஆய்விலும் கண்டெடுத்த நாணயங்களைக் குறிப்பிட்டு அவற்றின் காலம், வரலாற்று முக்கியத்துவத்துவம் போன்வற்றை விளக்கியுள்ளார்.

பேராசிரியர் சிற்றம்பலம் எழுதிய *யாழ்ப்பாணத்தின் தொன்மை* வரலாறு என்ற நூல் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களை அரசியல், பொருளாதாரம், பண்பாடு ஆகிய அம்சங்களோடு தொடர்புபடுத்தி ஆராய்வதாக உள்ளது (1993).

மேற்கூறப்பட்ட ஆய்வுகள் வடஇலங்கை வரலாறு பொறுத்து பலவகையில் முக்கியத்துவம் பெறுகிறது. இலங்கை வரலாற்று ஆய்வில் வடஇலங்கையின் வரலாறு நீண்ட காலமாகப் புறக்கணிக்கப்பட்டு வந்துள்ளது. இந்நிலையில் இங்கு முத்திரை நாணயங்கள் தொட்டு ஐரோப்பியர் காலம் வரையான நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருப்பது இவ்வட்டாரத்தின் ஆதிகால, இடைக்கால வரலாற்றை அறிந்துகொள்ள ஓரளவு உதவுகின்றது. இங்கு கல்வெட்டுக்களைப்போல் அல்லாது நாணயங்கள் பரந்துபட்ட இடங்களில் பல்வேறு காலப்பகுதிக்குரியனவாகக் கிடைத்துள்ளன. நாணயங்களிலிருந்து காலம், வம்சம், நாடு போன்ற அம்சங்களை அறிய முடிவதால் இவற்றின்மூலம் இவ்வட்டாரத்தின் தொடர்ச்சியான வரலாற்றை மதிப்பிடமுடிகிறது. வரலாற்றிலக்கியங்களில் வடஇலங்கை வரலாறு பற்றி குறைந்தளவு தகவல்கள்கூடக் காணப்படவில்லை. இதுவரை மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளும் (Excavations), மேற்படை ஆய்வுகளும் (Explorations) ஒருசில ஆதிக்குடியிருப்பு மையங்களை அடையாளம் காண உதவியபோதிலும் அவை இப்பிரதேச மக்களது பாரம்பரிய வரலாற்றை காலநிரைப்படுத்திக் கூற உதவவில்லை. இத்தகைய வரலாற்று இடைவெளியை நிரப்ப இங்கு கிடைத்த நாணயங்கள் பெருமளவுக்கு உதவாவிட்டாலும் நாணயங்களின் காலத்தைக் கொண்டு மக்கள் வாழ்ந்த கால வரலாற்றைத் தொடர்ச்சியாக இனங்காண முடிகிறது. நாணயங்கள் கண்டெடுக்கப்பட்ட இடங்களைக் கொண்டு இவ்விடங்களுக்கும் பிற நாடுகளுக்கும் இடையே இருந்திருக்கக்கூடிய அரசியல், பொருளாதார, வர்த்தக பண்பாட்டு உறவுகளைப் பெரும்ளவு இனங்காண முடிகிறது. வடஇலங்கையில் கிடைத்த ஆதிகால நாணயங்களில் தொகையிலும், வகையிலும் வெளிநாட்டு நாணயங்கள்

அதிகமாகும். இவற்றின் மூலம் வடஇலங்கையின் பொருளாதாரக் கட்டமைப்பில் வெளிநாட்டு வர்த்தகம் பெற்ற முக்கியத்துவத்தை உணரமுடிகிறது.

அண்மைக் காலங்களில் இந்நூலாசிரியர் வடஇலங்கையில் மேற்கொண்ட களஆய்வின் போது கண்டெடுத்த உள்நாட்டு, வெளிநாட்டு நாணயங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதிய கட்டுரைகளும் (1998, 1999அ, 1999ஆ, 1999இ, 2000), ஆய்வு நூலும் (2000) தென்னிந்தியத் தமிழர்கள் போல் இலங்கைத் தமிழர்களும் பண்டு தொட்டு நாணயங்களை வெளியிட்டு வந்துள்ளனர் என்ற புதிய கருத்தைச் சான்றாதாரங்களுடன் கூறுவதாக அமைந்துள்ளன. ஆயினும் நாமும், பிறரும் இதுவரை ஆய்வுக்கு உட்படுத்திய நாணயங்களை விட எண்ணிக்கையில் அதிகமான பலவகை நாணயங்கள் தமிழ் வரலாற்று ஆர்வலரான திரு. கலைஞானி, ஆசிரியர்களான திருவள்ளுவர், பொன்னம்பலம் மற்றும் சிலரால் களஆய்வின் மூலம் வடஇலங்கையில் இருந்து சேகரிக்கப்பட்டுள்ளன. இந்நாணயங்கள் இதுவரை முழுமையாக ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டதாகத் தெரியவில்லை. வடஇலங்கையில் அரசஅதிகாரியாகக் கடமையாற்றிய திரு.சேயோன் அரிய பல நாணயங்களைக் கண்டுபிடித்து அவற்றுள் சிலவற்றை கட்டுரைகளாகவும், நூலாகவும் வெளியிட்டுள்ளார். ஆனால் அவர் இங்கு கிடைத்த நாணயங்களில் பெரும்பாலானவை சிங்கள மன்னர்களும், தமிழ் நாட்டு வம்சங்களும் வெளியிட்டவை என்ற ஆழமான கருத்தைக் கொண்டிருந்ததால் அரிய பல நாணயங்களை அடையாளம் காண்பதிலும், வகைப்படுத்துவதிலும் சில தவறுகள் ஏற்பட்டுள்ளன என்பதை அண்மையில் அவர் வெளியிட்ட நூலில் அவதானிக்க முடிகிறது (Seyon 1998). இந்நாணயங்களின் தனித் தன்மை வட்டார அடிப்படையில் அல்லது கால அடிப்படையில் சரிவர ஆராயப்படுமானால் வடஇலங்கைத் தமிழர் வரலாற்றோடு அங்கு வாழ்ந்த, வாழ்ந்து வருகின்ற மக்களுக்குள்ள உறவும், தொடர்பும் மேலும் துலக்கம் பெறும்.

## வரலாற்றாய்வில் தமிழர் நாணயங்கள்

இலங்கைத் தமிழர் வரலாற்றை தென்னிந்தியாவின் தென்பகுதியுடன் சிறப்பாகத் தமிழ் நாட்டுடன் தொடர்பு படுத்தி ஆராயும் மரபு நீண்ட காலமாக இருந்து வருகிறது. இதற்கு இனம், மொழி, எழுத்து, மதம், கலை, பண்பாடு போன்ற அம்சங்களில் இரு நாட்டு மக்களிடையேயும் காணப்படும் பொதுவான ஒற்றுமைத் தன்மை காரணமாகும். இந்த ஒற்றுமைக்கு இலங்கை மீதான தமிழ கத்தின் செல்வாக்கும் ஒருகாரணம் என்பதை இரண்டாயிரம் ஆண்டு களுக்கு குறையாத இலங்கை தமிழக உறவின் பின்னணியில் கண்டு கொள்ளலாம். இலங்கைத் தமிழரைப் போல் கி.பி.14ஆம் நூற்றா ண்டு வரை தமிழ் நாட்டுக்கென ஒரு வரலாற்று மரபு இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் அங்கு பிற்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகள், களஆய்வுகள் மூலம் கண்டறியப்பட்ட தொல்லியல் சின்னங்கள், கல்வெட்டுக்கள், நாணயங்கள், கட்டிட சிற்பங்கள் தமிழ் நாட்டு மக்களின் தொன்மையையும், பெருமையையும் வெளிப் படுத்த உதவின. இது போன்ற ஆய்வுகள் இலங்கைத்தமிழரை மையமாகக் கொண்டு இலங்கையில் மேற்கொள்ளப்பட்டதெனப் பெருமைப்பட வாய்ப்பில்லை. ஆனால் இலங்கைத் தமிழர் தொடர்பாக ஆங்காங்கே கிடைத்த சான்றுகளை தமிழகத் தொல்லியல் சான்றுக ளுடன் தொடர்பு படுத்தி இலங்கைத்தமிழரின் பூர்வீக வரலாற்றை அறிய தமிழக ஆய்வுகள் காரணமாக இருந்தன எனக் கூறிக்கொள் வதில் பெருமையுண்டு. இதன் அடிப்படையிலேயே இலங்கையின் ஆதிக்குடியேற்றம் தொடர்பான தொல்லியல் சின்னங்கள், கல்வெட்டுக்கள் மற்றும் பண்பாடு தொடர்பான சான்றுகள் ஆராயப்பட்டு வந்துள்ளன.

தமிழ் நாட்டு மக்களின் பண்பாட்டில் பொதுப்பட்ட ஒற்றுமைத் தன்மை காணப்பட்டாலும் காலம், வம்சம், வட்டாரம், பிரதேசம் என்ற அடிப்படையில் சில தனித்துவமான அம்சங்கள் தோன்றி வளர்ந்ததைக் காணமுடிகிறது. ஆனால் இலங்கைத் தமிழர் வரலாற்றை ஆராய்ந்த பலரும் தமிழகத்தைப் போல் இலங்கையில் பண்டு தொட்டு வாழ்ந்து

வரும் தமிழருக்கு பிரதேசரீதியான சுதேச வரலாற்று மரபு, தனித்துவம் இருந்திருக்கும் என்பதை மனக்கருத்தில் கொள்ளாது பாளி இலக்கியங்கள் ஒப்புவித்த இரண்டாயிரம் ஆண்டு கால வரலாற்றுப் பாரம்பரியத்தின் தாக்கத்தாற் போலும் தமிழகத்துடன் ஒற்றுமை கொண்டுள்ள சான்றுகளை மட்டுமே இலங்கைத் தமிழருக் குரிய சான்றாக இதுவரை பார்த்து வந்துள்ளனர். ஆனால் இவ்வர லாற்றுப்பார்வை மறு ஆய்வு செய்யப்பட வேண்டும் என்பதற்கு இலங்கை, தமிழக இருபக்க உறவு தொடர்பாக அண்மைக்கால அகழ் வாய்வில் பெறப்பட்ட தொல்லியல் சின்னங்கள் விளங்கு கின்றன. இதற்கு இலங்கைத் தமிழர்கள் வெளியிட்ட நாணயங்கள் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இலங்கையில் கிடைத்த நாணயங்களை உள்நாட்டு, வெளிநாட்டு நாணயங்கள் என இருவகையாகப் பிரிக்கலாம். இதில் இந்திய, கிரேக்க, ரோம, அரேபிய, சீன மற்றும் போத்துக்கேய, டச் மற்றும் ஆங்கிலேய நாணயங்கள் வெளிநாட்டிலிருந்து இலங்கைக்கு வந்தவை. இவற்றுள் இந்திய சிறப்பாக தமிழக நாணயங்கள் வகை யிலும் தொகையிலும் அதிகமாகக் கிடைத்துள்ளன. உள்நாட்டில் வெளியிடப்பட்ட நாணயங்களில் கி.பி.13ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி. 1619 க்கும் இடையில் வடஇலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்கள் வெளியிட்ட சேது எனும் பெயர் பொறித்த நாணயங்களைத் தவிர ஏனைய நாணயங்கள் சிங்கள மன்னர்களால் வெளியிடப் பட்டதென்ற கருத்து ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் தொட்டு தற்காலம் வரை நிலவுகிறது. இதற்கு பௌத்த சிங்கள மக்களோடு தொடர்புடைய பெயர்கள், குலக்குறியீடுகள், சின்னங்கள் போன்றவை சான்றாகக் காட்டப்படுகின்றன. இவற்றின் அடிப்படையில் கொட்றிங்ரன் கி.பி 2ஆம் நூற்றாண்டிலிருந்து சிங்கள மன்னர்கள் நாணயங்களை வெளியிடத் தொடங்கியிருக்கலாம் எனக் கருதுகிறார் (1924:24). அண்மைக்காலத்தில் இதன் காலம் மேலும் முற்பட்டதாக இருக்கலாம் என்ற கருத்து முன்வைக்கப்பட்டுள்ளது (Bopearachchi 1999).

சில நாணயங்களில் இடம் பெற்றுள்ள சின்னங்கள், குறியீடுகள் போன்றனவற்றின் அடிப்படையில் இற்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்னர் பாக்கர் என்ற ஆங்கிலேய நாட்டவர் சிலவகை நாணயங்களை தமிழகத்திலிருந்து வந்து இலங்கையில் ஆட்சி நடத்திய எல்லாளன் போன்ற தமிழ் மன்னர்கள் வெளியி ட்டிருக்கலாம் எனச் சூசகமாகத் தெரிவித்திருந்தார் (Parkar ;1981). ஆனால் அவர் கருத்தை யாரும் இதுவரை கவனத்தில் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. மாறாக இலங்கையில் கிடைத்த கி.பி.13ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் நாணயங்கள் அனைத்தும் தமிழ் நாட்டிலிருந்து வந்ததென்ற கருத்தையே வலியுறுத்தினர். இந்நிலையில் சிங்கள மொழியில் அல்லது சமஸ்கிருத மொழியில் சிங்கள மன்னர்கள் நாணயங்களை வெளியிடுவதற்குப் பல நூற் றாண்டுகளுக்கு முன்னரே இலங்கைத் தமிழர் தமிழ் மொழியில் நாணயங்களை வெளியிட்டனர் எனக் கூறமுடிகிறது (புஷ்பரட்ணம் 2000). இதற்கு நாணயங்களின் வடிவமைப்பு, அவற்றில் இடம்பெற்றுள்ள பெயர்கள், சின்னங்கள், பயன்பாட்டிலிருந்த இடங்கள் என்பவற்றை தமிழ் நாட்டில் கிடைத்த நாணயங்களுடன் ஒப்பிட்டு ஆராய்வது அவசியமாகும். அதற்கு தமிழகத்திலும் இலங்கையிலும் கிடைத்த தமிழ் நாணயங்கள் தொடர்பாகத் தமிழகப் பின்னணியில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளையும், கருத்துக்களையும் சுட்டிக் காட்டுவது இலங்கையில் கிடைத்த சிலவகை நாணயங்களின் தோற்றத்தை அடையாளம் காண இலகுவாக இருக்கும்.

பண்டமாற்று முறை நிலவிய பண்டைய தமிழகத்தில் நாணயங்கள் புழக்கத்தில் இருக்கவில்லை என்ற கருத்து நீண்ட காலமாக இருந்து வந்த அதேகாலகட்டத்தில் சங்க காலம் தொட்டு மூவேந்தர்களும், குறுநில மன்னர்களும் நாணயங்களை வெளியிட்டு வந்துள்ளனர் என்ற கருத்து நேரடியாகவும், மறைமுகமாகவும் முன்வைக்கப்பட்டு வந்துள்ளது. இக்கருத்தை உறுதிப்படுத்துவதாக அண்மைக் காலக் கண்டுபிடிப்புகள் விளங்குகின்றன. இதற்கு முன்னோடியாகத் தமிழக நாணயங்கள் தொடர்பான முக்கிய ஆய்வுகளைக் குறிப்பிடலாம்.

தமிழக நாணயங்கள் பற்றி விரிவாக ஆராய்ந்த முதல் ஆய்வு என்ற வகையில் 1858இல் *Madras Journal of Literature and Science* என்ற சஞ்சிகையில் ஆங்கிலேய நாட்டவரான வால்டர் எலியட் என்பவர் (Elliot 1858:220-249,74-99) எழுதி வெளியிட்ட Numismatic Gleaning என்ற விரிவான இரு தொடர் கட்டுரைகளும், 149 நாணயங்களுக்குரிய புகைப்படங்களும் விளங்குகின்றன. இக்கட்டுரைகளில் பல்வேறு காலப்பகுதிக்குரிய தமிழர் நாணயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் சங்க காலப் பாண்டியர், சேரர், சோழர், மலையமான் மன்னர்கள் வெளியிட்ட நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவற்றைச் சங்கால நாணயங்கள் என ஆசிரியர் குறிப்பிடாவிட்டாலும் தமிழகத்தின் தொன்மையான பௌத்த நாணயங்கள் எனக் குறிப்பிடத் தவறவில்லை. இதே ஆசிரியர் 1886இல் வெளியிட்ட *தென்னிந்திய நாணயங்கள்* என்ற நூல் தமிழ் நாணயங்கள் பற்றிய ஆய்வில் புதிய காலகட்டத்தின் தொடக்கத்தை குறித்து நிற்பதாகக் கூறினால் மிகையாகாது. இந்நூலில் பல்லவ, சோழ, பாண்டிய நாணயங்களுக்குரிய புகைப் படங்களைப் பிரசுரித்ததுடன் அவை பற்றியும் விரிவாக ஆராய்ந்துள்ளார். அத்துடன் இலங்கையில் கிடைத்த சில தமிழ் நாணயங்ங்களுக்குரிய புகைப்படங்களைப் பிரசுரித்திருப்பதுடன் அவை பற்றியும் ஆராய்ந்துள்ளார். தமிழ் நாணயங்களை அடையாளம் காண்பதில் இவர் விட்ட தவறுகளைப் பிற்கால நாணயவியலாளர்கள் சுட்டிக் காட்டிய போதிலும் அவரது ஆய்வுகளே பிற்கால ஆய்வுகளுகெல்லாம் அடிப்படையாக அமைந்த தென்பதில் சந்தேகமில்லை.

வால்டர் எலியட்டின் ஆய்வைத் தொடர்ந்து தமிழக நாணயங்கள் தொடர்பாக வெளிவந்த முக்கிய ஆய்வாக டுபினல் என்ற ஆங்கில நாட்டவரது ஆய்வைக் குறிப்பிடலாம். இவர் 1886–87 காலப்பகுதியில் *Madras Journal of Literature and Science* என்ற சஞ்சிகையில் Hints to Coins- Collectors in South India என்ற விரிவான இரு கட்டுரைகளை வெளியிட்டார். முதலாவது கட்டுரைத் தொகுப்பில் தென்னிந்தியாவில் கிடைத்த தமிழக மற்றும் இலங்கை மன்னர்கள் வெளியிட்ட நாணயங்கள் பற்றிப் பொதுப்படக்

குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் மதுரையில் கிடைத்த சங்க காலப் பாண்டிய நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவரும் வால்டர் எலியட்டைப் போல் இவற்றைச் சங்க கால நாணயங்கள் எனக் குறிப்பிடாது மிகத் தொன்மையான பௌத்த நாணயங்கள் என்றே குறிப்பிட்டுள்ளார் (Tufnell 1886-1887:33-137). இதே சஞ்சிகையில் ஜேம்ஸ் எழுதிய பாண்டிய நாணயங்கள் என்ற கட்டுரை பல வகையில் முக்கியத்துவம் பெறுகிறது (James1887-88:138-144). இக்கட்டுரையில் குறிப்பிடப்படும் நாணயங்களில் பெரும்பாலானவை இலங்கையிலும், தமிழகத்திலும் கிடைக்கப்பெற்ற பிற்காலத்திற்குரிய நாணயங்களாகும் (கி.பி.10ஆம்12ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட் டவை). இலங்கையில் கிடைத்த நாணயங்கள் தமிழகத்தில் கிடைத்த நாணயங்களிலிருந்து வேறுபடுவதால் அவற்றை இலங்கைக்குரிய நாணயங்கள் எனக் குறிப்பிடாது இலங்கை நாணய வகையைச் சேர்ந்த (Ceylon type coins) பாண்டிய நாணயங்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்.

1888இல் லோவன்தால் பாதிரியார் வெளியிட்ட *தின்னவேலி நாணயங்கள்* என்ற நூலும் (Loventhan 1888), 1933இல் திருச்சியைச் சேர்ந்த சர்.டி. தேசிகாச்சாரியார் வெளியிட்ட *தென்னிந்திய நாணயங்கள்* என்ற நூலும் தமிழ் நாணயங்கள் பற்றிய ஆய்வில் இன்னொரு படிமுறை வளர்ச்சியைக் காட்டுகின்றன (Desikachary 1933). இந்நூல்களில் சங்க காலம் தொட்டு பிற்காலத் தமிழ் மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களுக்குரிய புகைப்படங்கள் பிரசுரிக்கப்பட்டுள்ளன. இவற்றில் தமிழகத்தின் தொடக்க கால நாணயங்கள் சங்க கால நாணயங்கள் எனக் குறிப்பிடாது பாண்டியரின் தொன்மையான நாணயங்கள் என முதன் முதலில் அழைக்கப்பட்டுள்ளன.

அரசவம்சங்களின் அடிப்படையில் தமிழக நாணயங்களை ஆராய்ந்தவர்களுள் பிடுல்ப் (Biddulph) என்ற ஆங்கிலேய நாட்டு அறிஞர் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். 1966இல் இந்திய

நாணயவியல் சங்கத்தால் வெளியிடப்பட்ட *பாண்டியரது நாணயங்கள்* என்ற இவரது நூலில்தான் சங்க காலம் தொட்டு பிற்காலம் வரையிலான பாண்டியர் கால நாணயங்களின் புகைப்பங்கள் பிரசுரிக்கப்பட்டு, சங்க காலம் தொட்டு பாண்டிய மன்னர்கள் நாணயங்களை வெளியிட்டு வந்துள்ளனர் என்ற கருத்து மேலும் வலியுறுத்தப்பட்டது. இந்நூலில் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களின் தனித்துவம் சுட்டிக்காட்டப்பட்டு அவை தனியாக ஆராயப்பட்டுள்ளன. ஆயினும் அவற்றை இலங்கைத் தமிழருடன் தொடர்புபடுத்தாது ஏனைய நாணயவியலாளர்கள் போல் இவரும் பாண்டிய மன்னர்கள் இலங்கையில் அல்லது தமிழகத்தில் இவ்வகை நாணயங்களை வெளியிட்டிருக்கலாம் எனக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் இலங்கையில் கிடைத்தது போன்ற தனித்துவமான நாணயங்கள் தமிழகத்திலும் கிடைத்ததாக அவர் தனது நூலில் குறிப்பிடவில்லை.

1977இல் சட்டோபாத்தியா எழுதிய தென்னிந்திய நாணயங்கள் பற்றிய நூல் தமிழகத்திலும், இலங்கையிலும் கிடைத்த பல்லவ, பாண்டிய சோழ நாணயங்கள் பற்றி விரிவான தகவல்களைத் தருகின்றது (Chttopadhyaya 1977). 1981 இல் வெளிவந்த முன்னாள் தமிழக தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குனர் நாகசாமியின் *தமிழ் நாணயங்கள்* என்ற நூல் தமிழ் நாட்டு மன்னர்கள் காலத்திற்கு காலம் வெளியிட்ட நாணயங்களை மட்டும் விரிவாக ஆராய்ந்து எழுதப்பட்ட முதல் நூல் என்ற வகையில் முக்கியத்துவம் பெறுகிறது(Nagaswamy 1981). இந்நூலில் சங்கால நாணயங்கள் தொடர்பாக அவர் கூறிய கருத்துக்கள் சங்க கால நாணயங்கள் தொடர்பாகக் கிடைத்த புதிய சில சான்றுகளின் அடிப்படையில் பிற்காலத்தில் மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

தமிழ் நாணயங்கள் அதிலும் குறிப்பாக சங்க கால நாணயங்கள் பற்றி ஆராய்ந்தவர்களுள் தினமலர் பத்திரிகையின் பிரதம பதிப்பாசிரியர் இரா. கிருஷ்ணமூர்த்தி சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். ஆரம்பகாலங்களில் சங்க கால மூவேந்தர்கள்

மற்றும் மலையமான் போன்ற குறுநில மன்னர்களின் நாணயங்களைத் தனி நூலாகத் தமிழில் எழுதிய இவர் (கிருஷ்ணமூர்த்தி 1986, 1987, 1990) 1997இல் சங்க காலத் தமிழ் நாணயங்கள் என்ற தலைப்பில் விரிவான நூலை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். சங்க கால நாணயங்கள் தொடர்பாக வெளிவந்த அரிய முதலாவது தனி நூல் என்ற வகையில் இதற்குச் தனிச் சிறப்புண்டு. இந்நூலில் சங்காலத்தில் முவேந்தர்கள் மட்டுமன்றி குறுநில மன்னர்களும் பெயர் பொறித்த நாணயங்களை வெளியிட்டுள்ளனர் என்பதற்குப் பல சான்றுகளைக் காட்டுகிறார். இந்நூலாசிரியரே வடஇலங்கையில் பல ஆண்டுகளுக்கு முன்னர் கண்டுபிடிக்கப்பட்டும் சரிவர ஆராயப்படாதிருந்த நாணயங்கள் சிலவற்றைச் சங்க காலப் பாண்டியர் வெளியிட்ட நாணயங்கள் என முதன்முதலாக அடையாளம் காட்டியுள்ளமை இங்கு சிறப்பாக சுட்டிக் காட்டத்தக்கதாகும் (Krishnamurthy 1997).

முன்னாள் தமிழக தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் நடனகாசிநாதன் 1995 எழுதிவெளியிட்ட *தமிழர் காசு இயல்* என்ற நூல் தமிழகத்திலும், இலங்கையிலும் கிடைத்த ஒட்டு மொத்த தமிழ் நாட்டு நாணயங்களை ஆராய முற்படுவதாக உள்ளது. நூலின் தலைப்பு தமிழர் காசுகள் என இருப்பினும் அதில் உள்நாட்டு, வெளிநாட்டு நாணயங்கள் எனத் தமிழகத்தில் கிடைத்த நாணயங்கள் பிரிக்கப்பட்டு அவை வம்சம், நாடு, காலம் என்ற அடிப்படையில் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளது. இந்நூலாசிரியர் இயக்குனராக இருந்து மேற்கொண்ட அகழ்வாய்வின் போது கிடைத்த நாணயங்கள் சிலவற்றை இந்நூலில் ஆய்வுக்குப் பயன்படுத்தியுள்ளமை பண்டைய கால நாணயங்களின் காலத்தைக் கணிக்க உதவியாக உள்ளது (காசிநாதன் 1995).

இலங்கை, தென்னிந்திய நாணயங்கள் பற்றி நீண்டகாலமாக ஆராய்ந்து பல நூல்களையும், கட்டுரைகளையும் வெளியிட்டு வந்த மிற்சனர் அவற்றின் ஒட்டுமொத்த ஆய்வு நூலாக 1998இல் *தென்னிந்திய நாணயங்களின் காலமும் வரலாறும்* என்ற அரிய

நூலை வெளியிட்டுள்ளார் (Mictchiner 1998). இந்த நூலில் காணக் கூடிய சிறப்பு இலங்கையில் குறிப்பாக வடஇலங்கையில் கிடைத்த தமிழ் நாணயங்கள் காலம், வம்சம் என்ற அடிப்படையில் சேர, சோழ, பாண்டிய, பல்லவ நாணயங்கள் எனப் பிரிக்கப்பட்டு அவற்றிற்குரிய புகைப்படங்களுடன் ஆராயப்பட்டிருப்பதாகும். வடஇலங்கையில் கிடைத்த நாணயங்கள் சிலவற்றின் வடிவமைப்பு, சின்னங்கள், குறியீடுகள் சமகாலத்தில் தமிழ் நாட்டு வம்சங்களால் வெளியிடப்பட்ட நாணயங்களிலிருந்து வேறுபடுவதை அவர் உணர்ந்துள்ள போதிலும் டுல்பே போல் இவரும் இந்நாணயங்களைத் தமிழ் நாட்டு வம்சங்களுடன் தொடர்பு படுத்துகிறார். அவ்வாறு தொடர்புபடுத்தும் போது ஒருவித தயக்கம் இருப்பதை இவர் இந்நாணயங்களுக்கு கொடுக்கின்ற வேறுபட்ட காலக் கணிப்பும், இலங்கை மீதான தமிழ் நாட்டு வம்சங்களின் மேலாதிக்கம் பற்றிய தெளிவற்ற வரலாற்றுத் தரவுகளும் எடுத்துக் காட்டுகின்றன. ஆயினும் இவரது ஆய்வு வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களை தனித்துப் பார்ப்பதற்கு மறைமுகமாக உதவுகிறது எனக் கூறலாம்.

அண்மைக் காலங்களில் தமிழ் நாணயங்கள் பற்றி ஆராய்ந்தவர்களில், ஆராய்ந்து வருபவர்களில் இளம் நாணயவியலாளர் அளக்குடி ஆறுமுக சீதாராமன் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். இருபது வயதிலிருந்து நாணயவியல் ஆய்வில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட இவர் தமிழ் நாட்டில் நாணயங்கள் காணப்படும் இடங்களில் நேரில் களஆய்வை மேற்கொண்டு மிகக் குறுகிய காலத்தில் ஆயிரக்கணக்கான நாணயங்களைச் சேகரித்துள்ளார். அவற்றுள் பல்வேறு காலப்பகுதிக்குரிய தமிழ் நாணயங்களை மட்டும் தனது ஆய்வுக்குரிய களமாக எடுத்துக் கொண்ட இவர் ஆரம்ப காலங்களில் தினமணி என்ற தேசிய நாளிதழ்களில் அவற்றைப் பிரசுரித்து இன்று இருநூற்றியம்பதுக்கும் மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகளையும், செய்திக்கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளார். தென்னாசியாவின் முதன்மைச் சாசனவியலாளர்களில் ஒருவரான ஐராவதம்

மகாதேவனுடன் இவருக்கு ஏற்பட்ட நெருக்கமான ஆசிரிய மாணவ உறவு பண்டைய எழுத்துக்களில் இவர் பயிற்சி பெறக் காரணமாக இருந்ததுடன், எழுத்துக்களை அடிப்படையாகக் கொண்டு நாணயங்களை அடையாளம் காணும் புலமையாளர்களில் ஒருவராக இவரும் உயர்ந்து செல்லக் காரணமாக இருக்கின்றது. நாணயங்களின் அடிப்படையில் பண்டைய ஊர்ப்பெயர்கள், தெய்வப்பெயர்கள், கடற்கலன்கள் பற்றிய இவரது ஆய்வுகள், வரலாற்றாய்வில் நாணயங்களின் பரந்துபட்ட பரிணாமத்தைச் சுட்டுகிறது. இந்திய நாணய மரபை ஒட்டி இலங்கை நாணயங்கள் தோன்றியதென்ற பாரம்பரிய கருத்துக்கு முன்னால் இவர் வடஇலங்கைத் தமிழ் மன்னர்கள் வெளியிட்ட சேது நாணயமரபைப் பிற்காலத்தில் வெளியிடப்பட்ட தமிழக மறவ நாணயங்களுடன் தொடர்புபடுத்தி ஆராய்ந்துள்ளமை கவனத்தில் கொள்ளத்தக்கது (1989). *தமிழகத் தொல்லியல் சான்றுகள், தொகுதி* – ஒன்று (1994) என்ற நூலைத் தொடர்ந்து வெளிவர உள்ள தொகுதி இரண்டும், சங்கர் இராமனுடன் இணைந்து எழுதியுள்ள *பல்லவர் காசுகள்* என்ற நூலும் தமிழ் நாணயங்கள் பற்றிய ஆய்வுக்கு மேலும் புதிய உத்வேகத்தைக் கொடுக்கலாம். இருப்பினும் அவரும், அவரிடம் இருந்து பிற அறிஞர்களும் பெற்று இதுவரை ஆய்வுக்குப் பயன் படுத்திய நாணயங்களைவிட ஆய்வுக்குப் பயன்படுத்த வேண்டிய பல வகை நாணயங்கள் அவரிடம் இருப்பதை நான் அறிவேன். அவையனைத்தும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுமானால் தமிழ் நாணய வரலாற்றிற்குப் மேலும் புதிய வெளிச்சம் உண்டாகலாம்.

சமீப காலங்களில் அகழ்வாய்வுகளிலும், களஆய்விலும் மற்றும் அயல் நாடுகளிலிருந்தும் கண்டுபிடிக்கப்பட்ட பண்டைய தமிழ் நாணயங்கள் தொடர்பாக சில ஆய்வுக்கட்டுரைகள் வெளிவந்து ள்ளன. அவற்றுள் பேராசிரியர் . சண்முகம், பேராசிரியர். புலவர் இராசு, பேராசிரியர். இராஜன், பேராசிரியர். திருஞானசம்பந்தம், குடவாசல் பாலசுப்பிரமணியம், இளம் நாணயவியலாளர் சங்கர இராமன், செல்வி பவானி போன்றோரது ஆய்வுக்கட்டுரைகள்

சிலவற்றைக் குறிப்பிடலாம். இக்கட்டுரைகள் சில தமிழக நாணயங்களின் தோற்றம், பரவல், பயன்பாடு பொறுத்து முன்னைய கருத்துக்களில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படுத்தக் காரணமாக உள்ளன(Shanmugam 1994:95-100. Rajan 2000:114-118). அவற்றுள், செல்வி. மா. பவானி எழுதியுள்ள கல்வெட்டுக்களை அடிப் படையாகக் கொண்ட ஆய்வுக் கட்டுரைகள் தமிழக நாணயங்களைப் பிற வரலாற்று மூலாதாரங்களுடன் தொடர்புபடுத்தி ஆராய்வதன் மூலம் குறிப்பிட்ட கால சமூக அசைவாக்கத்தை அடையாளம் காணலாம் என்பதைச் சுட்டிக் காட்டுவதாக உள்ளன (பவானி 1999, 1999அ, 2000). இவர்களைத் தவிர தமிழக நாணயங்களை ஆராய்ந்தோரில் எம்.எச்.கிருஷ்ணன், கே.எ.நீலகண்டசாஸ்திரி, என்.சங்கர நாராயணன், வி.ஜெயராஜ், அ.இராகவன், வித்தியப்பிரகாஷ், ஐ. இராமசாமி, ஆர்.வனஜா ஆகியோர் குறிப்பிடத்தக்கனர்.

இதுவரை குறிப்பிடப்பட்ட ஆய்வு நூல்கள், கட்டுரைகள் போன்றவற்றிலிருந்து தமிழ் நாட்டில் சங்ககாலம் தொட்டு தமிழ் நாணயங்கள் வெளியிடப்பட்டதென்ற கருத்தை அறிஞர்களில் பெரும்பாலானோர் கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது. பல்லவர் காலம் தொட்டு பெரும்பாலும் நாணயங்களில் அரச இலட்சனையோடு, பெயரிடும் முறை இருந்து வந்ததால் பல்லவருக்குப் பிற்பட்ட கால நாணயங்களைப் பெருமளவுக்கு இனங்காணமுடிகிறது. ஆனால் பல்லவருக்கு முற்பட்ட கால நாணயங்களில் கூடிய அளவுக்குச் சின்னங்களையே பயன்படுத்தியதால் அவற்றை இனங்காண்பதில் பல குறைபாடுகள் நீண்ட காலமாக இருந்து வந்தன. ஆனால் அண்மைக் காலங்களில் கரூர், காவிரிப்பூம்பட்டினம், மதுரை, உறையூர், கொற்கை, அரிக்கமேடு, திருக்கோவலூர், அழகன்குளம் போன்ற இடங்களிலிருந்து பெருமளவு நாணயங்கள் பெறப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து சங்ககாலத்தில் முத்திரை நாணயங்களும், வார்ப்பு நாணயங்களும் வெளியிடப்பட்டமை உறுதியாகத் தெரியவந்துள்ளது. வார்ப்பு நாணயங்களை மூவேந்தர் மட்டுமன்றி குறுநில மன்னர்களும் வெளியிட்டுள்ளனர். இந்நாணயங்களின் பின்புறத்தில் அதை

வெளியிட்ட வம்சத்தின் குலச் சின்னங்கள் இடம் பெற்றுள்ளமை சிறப்பான அம்சமாகும். அதில் பாண்டியருக்கு மீன் கோட்டுருவமும், சோழருக்கு புலியும், சேரருக்கு அம்பு வில்லும், மலையமான் மன்னருக்கு ஆற்றுச் சின்னமும் பயன்படுத்தப்பட்டுள்ளன. சில நாணயங்களில் அதை வெளியிட்ட மன்னன் பெயர் இடம்பெற்றுள்ளது. அவற்றுள் பெருவழுதி, அதியமான்நெடுமானஞ்சிசேரலன், கொல்லிப்புறை, கொல்லிரும்புறை போன்ற மன்னர்களின் பெயர்கள் குறிப்பிடத்தக்கன. வேறுசில நாணயங்களில் மன்னன் பெயரோடு அவன் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. இதற்கு மாக்கோதை, குட்டுவன்கோதை போன்ற மன்னர்கள் வெளியிட்ட நாணயங்கள் குறிப்பிடத்தக்கன (*சீதாராமன்* 1994: 1-15, Krishnamurthy1997:97-105). மேலும் இந்நாணயங்கள் தமிழகத்தில் மட்டுமன்றி வர்த்தக நோக்கில் பிற நாடுகளுக்கும் சென்றதை தாய்லாந்தில் கிடைத்த இரு சோழ நாணயங்களும் (Shanmugam 1994:95-100), இலங்கையில் கிடைத்த சோழ, பாண்டிய நாணயங்களும் உறுதிப்படுத்துகின்றன (புஷ்பரட்ணம் 1998:114–119).

பொதுவாகத் தமிழர் நாணயங்கள் தொடர்பான ஆய்வுகள் தமிழகத்தில் வெளியிடப்பட்ட நாணயங்கள் சமகாலத்தில் இலங்கையுடனான அரசியல், வர்த்தகப், பண்பாட்டுத் தொடர்பால இலங்கைக்கும் சென்றதைச் சுட்டிக் காட்டுவதாகவே உள்ளன. ஆனால் இலங்கையில் கிடைத்த தமிழ் நாணயங்கள் அனைத்தும் தமிழ் நாட்டிலிருந்துதான் சென்றவையா? என்பதற்கு மேற்கூறப்பட்ட ஆய்வுகள் அனைத்தும் தவறிவிட்டன என்றே கூறலாம். தமிழ் நாட்டு நாணயங்கள் பற்றி ஆராய்ந்தவர்களில் பெரும்பான்மையோர் இலங்கையில் கிடைத்த தமிழ் நாணயங்களை நேரில் பார்த்து ஆராயாத நிலையில் அங்கு கிடைத்த தமிழ் நாணயங்கள் தொடர்பாக ஐரோப்பிய, சுதேச வரலாற்றறிஞர்கள் கொடுத்த தரவுகள் மற்றும் வரலாற்றுச் செய்திகளையும், இலங்கையுடன் தமிழகத்திற்குள்ள பாரம்பரிய உறவையும் கவனத்தில் கொண்டு இக்கருத்தைக் கூறியுள்ளனர். இந்நிலையில் இலங்கையில் கிடைத்த தமிழ் நாணயங்கள் பற்றி ஆராய்ந்த ஐரோப்பிய அறிஞர்களும், பிற்கால

தேச வரலாற்றறிஞர்களும் அந்நாணயங்களில் உள்ள தனித்துவத்தைக் கவனத்தில் கொள்ளாது இரண்டாயிரம் ஆண்டுகால வரலாற்றுப் பாரம்பரிய நம்பிக்கையில் கி.பி 13ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் நாணயங்கள் அனைத்தும் தமிழகத்திலிருந்தே இலங்கைக்கு வந்ததாகக் கூறியுள்ளனர். இந்நிலையில் இலங்கையிலும், தமிழகத்திலும் தமிழ் நாணயங்கள் காணப்பட்ட இடங்கள், இவற்றின் எண்ணிக்கை, பரவல், நாணயங்களின் வடிவமைப்பு, சின்னங்கள், குறியீடுகள், பெயர்கள் என்பவற்றிற்கிடையிலான ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்வதன் மூலம் இலங்கையில் கிடைத்த தமிழ் நாணயங்கள் அனைத்தும் தமிழ் நாட்டிலிருந்து வந்தவையா? அல்லது இலங்கைத் தமிழர்களும் நாணயங்களை வெளியிட்டார்களா? என்ற கேள்விக்கு உறுதியான பதில் காண முடியும். அதை அடுத்து வரும் அதிகாரங்களில் காணலாம்.

# 2.பிராமி எழுத்துப் பொறித்த தமிழர் நாணயங்கள்

வரலாற்றாய்வில் தென்னாசியாவில் கிடைத்த நாணயங்களை முத்திரை நாணயங்கள், வார்ப்பு நாணயங்கள், எழுத்துப் பொறித்த நாணயங்கள் என மூன்றாக வகுத்துக் கொள்ளலாம். இந்தியாவைப் போல் இலங்கையில் கிடைத்த காலத்தால் முந்திய நாணயங்கள் முத்திரை நாணயங்களாகும் (Punch-Marked Coins). இதன் தோற்ற காலம் இந்தியாவில் கி.மு.6ஆம் நூற்றாண்டெனக் கூறப்பட்டாலும் இலங்கையில் கி.மு.3ஆம் நூற்றாண்டெனக் கணிக்கக் கூடிய சான்றுகளே இதுவரை கிடைத்துள்ளன (Bopearachchi 1999) தொடக்க காலத்தில் இவை வடஇந்தியாவிலிருந்து தென்னிந்தியாவுக்கும், இலங்கைக்கும் பரவியிருந்தாலும் காலப் போக்கில் இங்கேயே வெளியிடப்பட்டிருக்கலாம் எனப் பலராலும் கூறப்பட்டு வருகிறது (Codrington 1924:16-17). இக்கூற்றை உறுதிப்படுத்தும் வகையில் இந்நாணயங்களை வடிவமைப்பதற்குரிய சுடுமண் அச்சுக்கள் (Terracotta Moulds) இலங்கையில் அநுராதபுரம், அக்குறுகொட ஆகிய இடங்களிலும் (Deraniyagala 1972:150. Bopearachchi 1999:plate25), ஆந்திராவில் அமராவதி, தமிழ் நாட்டில் காஞ்சிபுரம் மற்றும் தென்மாவட்டங்களிலும் கிடைத்துள்ளன ( Raman and Shanmugam1991:23-29 ). மேலும் இச்சுடு மண் அச்சுக்களுடன் தமிழ் நாட்டில் சேரரின் தலைநகரான கருரில் உலோக அச்சு ஒன்றும் கிடைத்துள்ளது (சீதாராமன் 1994:14). தமிழ் நாட்டில் இம்முத்திரை நாணயங்களை மூவேந்தர்கள் வெளியிட்டுள்ளனர் என்பதை நாணயங்களில் வரும் அவர்களது குலமரபுச் சின்னங்களை அடிப்படையாகக் கொண்டு அடையாளம் காணப்பட்டுள்ளது.

(Krishnamurthy 1997:plate.1). அத்துடன் இவர்கள் வெளியிட்ட நாணயங்களில் வடஇந்திய நாணயங்களில் வரும் 16 கதிர் கொண்ட சூரியனுக்குப்பதிலாக 12 கதிர் கொண்ட சூரியன் காணப்படுகின்றது (Gupta1969:43). இதனால் இலங்கை முத்திரை நாணயங்கள் வடஇந்தியாவைப் போல் தென்னிந்தியா குறிப்பாக தமிழ் நாட்டிலிருந்து வந்திருக்கவும், இம்மரபைப் பின்பற்றி இலங்கைத் தமிழர் முத்திரை நாணயங்களை வெளியிட்டிருக்கவும் வாய்ப்புண்டு. ஆனால் அந்த நோக்கில் யாரும் இலங்கையில் கிடைத்த முத்திரை நாணயங்களை இதுவரை ஆராய்ந்ததாகத் தெரியவில்லை.

அண்மையில் கந்தரோடையில் கண்டுபிடித்த நான்கு வெள்ளி முத்திரை நாணயங்கள் பற்றி ஆராய்ந்த யாழ்ப்பாணப் பல்கலைக்கழக விரிவுரையாளர் கிருஷ்ணராஜா அவற்றில் உள்ள நாகச் சின்னத்தை நாகதீபம் என அழைக்கப்பட்ட யாழ்ப்பாண அரசு காலத்திற்குரிய தனித்துவமான அம்சம் எனக் குறிப்பிட்டு, அதனைக் கந்தரோடையைத் தலைநகராகக் கொண்ட நாக அரசு வெளியிட்டிருக்கலாம் எனக் கூறியுள்ளார் (1998:65-72). இலங்கையில் முத்திரை நாணயங்கள் வெளியிடப்பட்டது என்பதற்கு காட்டப்படும் முக்கிய காரணங்களில் ஒன்று அவற்றில் இடம்பெற்றுள்ள சின்னங்கள் வடஇந்திய, தென்னிந்திய மற்றும் தமிழக முத்திரை நாணயங்களில் வரும் சின்னங்களிலிருந்து வேறுபட்டிருப்பதாகும். இலங்கையில் வெளியிடப்பட்ட முத்திரை நாணயங்களில் ஒருசில சின்னங்களுடன், பலவற்றில் சின்னங்கள் அற்றும் காணப்படுகின்றன (Codrington 1924). அதை உறுதிப்படுத்தும் வகையில் அதற்குரிய சுடுமண் அச்சுக்களும் கிடைத்துள்ளன. மேலும் இவ்வகை முத்திரை நாணயங்கள் பெரும்பாலும் செப்பில் வடிவமைக்கப்பட்டவையாக உள்ளன. ஆனால் ஆசிரியர் கூறுபவை வெள்ளி நாணயங்கள். இவ்வகை வெள்ளி நாணயங்கள் யாழ்ப்பாணத்தில் மட்டுமன்றி, இலங்கையின் ஏனைய வட்டாரங்களிலும், இந்தியாவின் பல இடங்களிலும் கிடைத்துள்ளன. அத்துடன் அதில் நாக உருவங்களாக அடையாளம் காணப்பட்டுள்ள சின்னங்கள் இலங்கை, இந்திய

மற்றும் மௌரிய ஜனபத அரசு கால நாணயங்களில் பொதுவாகக் காணப்படுகின்றன (Parkar 1981:471-72, Devendra Handa 1985:9-38. Gupta1969:8, Sharma, 1990: Plate.52,Nos. A-C., புஷ்பரட்ணம் 2000:172-182). இந்நிலையில் இவ்வகை நாணயங்களை நாகதீப அரசுக்குரிய தனித்துவமான நாணயங்கள் எனக்கூறும் போது அவற்றைச் சமகாலத்தில் வழக்கிலிருந்த இலங்கை, இந்திய நாணயங்களோடும் தொடர்பு படுத்திப் பார்ப்பது பொருத்தமாகத் தெரிகிறது.

முத்திரை நாணயங்களைத் தொடர்ந்து இந்தியாவைப் போல் இலங்கையிலும் எழுத்து மற்றும் எழுத்தற்ற நிலையில் சின்னங்களுடன் கூடிய வார்ப்பு நாணயங்கள் வெளியிடப்பட்டன. இவற்றைச் சிங்கள மன்னர்களே முதலில் வெளியிட்டார்கள் என்பது நீண்டகாலக் கருத்தாகும். ஆனால் அண்மைக் கால அகழாய்வு மற்றும் களஆய்வுகளில் இருந்து கி.மு.3ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்கள் வெளியிடப்பட்டமை தெரியவந்துள்ளது (Bopearachchi 1999:15-64). தமிழ் நாட்டில் இதுவரை கிடைத்த சில பண்டைய கால முத்திரைகளில் பிராகிருத, வடபிராமி எழுத்துக்களின் செல்வாக்குக் காணப்பட்டாலும், நாணயங்கள் அனைத்தும் தமிழ்ப் பிராமியில் எழுதப்பட்டுள்ளன (Krishnsmurthy 1997, சீதாராமன் 1994). ஆனால் எமது ஆய்வில் தமிழ்ப் பெயர் கொண்ட நாணயங்களுடன், பிராகிருத மொழிக்குரிய ஒரு சில நாணயங்களையும் இலங்கைத் தமிழர்கள் வெளியிட்ட நாணயங்களாக எடுத்துள்ளேன். இலங்கையின் ஆதிகால வரலாற்றை அறிய உதவும் முக்கிய மூலாதாரங்களாகப் பாளி இலக்கியங்கள், பிராமிக் கல்வெட்டுக்கள் விளங்குகின்றன. இவை பௌத்த மத வரலாற்றைக் கூறுவதை நோக்காகக் கொண்டு அம்மதத்திற்குரிய பாளி, பிராகிருத மொழியில் எழுதப்பட்டுள்ளன. இவ்வரலாற்று மூலங்களில்தான் தொடக்க கால இலங்கையில் ஆட்சிபுரிந்த தமிழ் மன்னர்கள், வர்த்தகர்கள், படைவீரர்கள் சமூகத்தில் உயர் நிலையில் இருந்த தமிழ் மக்கள் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. இவர்களைத்

தமிழர்களாகக் குறிப்பிட்ட போதிலும் அவர்களுக்குரிய பெயர்கள் பெரும்பாலும் பிராகிருதமாக, பிராகிருதமயப்பட்ட தமிழ்ப் பெயர்களாக உள்ளன. இதையொத்த பெயர்கள் தமிழர்கள் என்று குறிப்பிடப்படாத ஏனைய மக்களுக்கும் உரிய பெயர்களாக வருகின்றன. இங்கே நாணயங்கள் சிலவற்றிலும் இதே பெயர்கள் வருகின்றன. ஆனால் அப்பெயர்கள் சிலவற்றைத் தமிழர்களோடு தொடர்புபடுத்த இலங்கை வரலாற்று மூலங்களில் தமிழர்கள் பற்றி வரும் குறிப்புக்களைச் சான்றாக எடுத்துள்ளளேன்.

முதன் முதலில் பிராமி எழுத்துப் பொறித்த தமிழ் நாணயங்கள் கந்தரோடையிலும் (Seyone 1998), அதைத் தொடர்ந்து அநுராதபுரம் (Conningham1999:73-97), தென்னிலங்கையில் அக்குறு கொட போன்ற இடங்களிலும் கிடைத்துள்ளன(Bopearachchi 1999). கந்தரோடையில் இவ்வரிய நாணயங்களைக் கண்டுபிடித்த சேயோன் (Seyone) என்ற நாணயவியலாளர் அவற்றில் உள்ளவை எழுத்துக்களா என்ற கேள்வியை எழுப்பி அவற்றைச் சங்காலச் சோழ மன்னர்கள் வெளியிட்டிருக்கலாம் எனக் குறிப்பிட்டுள்ளார். அண்மையில் இங்கு களஆய்வை மேற்கொண்ட கிருஷ்ணராஜா *சிவ* என்ற பெயர் பொறித்த நாணயம் ஒன்றைக் கண்டுபிடித்திருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார் (1998:51–52). அநுராதபுத்தில் பிரித்தானிய ஜேர்மன் ஆய்வுக்குழுவினர் இணைந்து மேற்கொண்ட அகழ்வாய்வின் போது சங்க காலப் பாண்டியரின் குலச்சின்னமான மீன் பொறித்த நாணயங்களுடன் பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்களுக்குரிய சுடுமண் அச்சுக்கள் சிலவும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அதில் ஒன்றில் *பருமக* என்ற பெயர் காணப்படுகிறது (Conningham1999: 84-85). இப்பெயர் இலங்கைப்பிராமிக் கல்வெட்டுகளில் 375 இடங்களில் வருகின்றது(Paranavithana 1970:IXXIV-LXXXVI). இது பெருமகன் என்ற தமிழ்ச் சொல்லின் பிராகிருத வடிவமாகும். இது ஒரு தமிழ்ச் சொல் என்பதற்கு சில கல்வெட்டுகளில் இதன் பெண்பால்வடிவம் பெருமகள் எனவும் (I.C.Nos.148, 200.331.610,910,1096), சில கல்வெட்டுக்களில் பருமக என்ற பெயர்

தமிழ்ப் பிராமிக்கே உரிய "று" என்ற எழுத்துப் பயன்படுத்தி *பறுமக* (I.C.No148) எனவும் எழுதப்பட்டிருப்பதிலிருந்து அறியலாம். ஆனால் நாணயங்கள் என்ற நிலையில் வகையிலும், தொகையிலும் அதிகமானவை தென்னிலங்கையில் அக்குறுகொட என்ற இடத்திலேயே கண்டுபிடிக்கப்படடுள்ளன.

இவ்விடம் தென்னிலங்கையில் பண்டைய இராசதானி இருந்த உருகுணப் பிரதேசத்தில் உள்ளது. பண்டைய நாளில் அநுராதபுரம் சிங்கள மன்னர்களின் மைய அரசாக இருந்தபோது இப்பிராந்தியம் சிறு இராசதானியாக மட்டுமன்றி ஒரு முக்கிய வர்த்தக மையமாக இருந்ததற்குப் பாளி நூல்களிலும், கல்வெட்டுக்களிலும், வெளிநாட்டார் குறிப்புக்களிலும் பல சான்றுகள் உண்டு. இங்கு சிற்றரசர்களாக இருந்து ஆட்சி புரிந்தவர்களில் பெரும்பாலானவர்கள் பின்னர் இலங்கை மன்னர்களாக வந்ததற்கும் பல சான்றுகள் உண்டு. அண்மையில் இங்குள்ள அக்குறுகொட என்ற இடத்தில் வீடு கட்டுவதற்கான அத்திவாரம் வெட்டும் போது பல அரிய தொல்லியல் சின்னங்கள் வெளிவந்தன. அவற்றுள் பெருங்கற்காலப் பண்பாட்டிற்குரிய அரிய கல்மணிகள், மட்பாண்டங்கள், சுடுமண் உருவங்கள், அச்சுக்கள், அலங்கார மனித, மிருக மற்றும் தாவர வடிவங்களுடன் கூடிய கல்மணிகள், பல்வேறு காலப்பகுதிக்குரிய உள்நாட்டு வெளிநாட்டு நாணயங்கள் போன்றன சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன. இவற்றைக் கண்டெடுத்த மக்கள் கடைகளில் விற்ற போது அதைக் கேள்வியுற்ற நாணயவியலாளர் விக்கிரமசிங்கா கடும் முயற்சி செய்து பலவகை நாணயங்களையும், பிற தொல்பொருள் சின்னங்களையும் ஆராய்ந்து தற்போது பிரான்ஸ் நாட்டில் வசிக்கும் இலங்கை நாட்டவரான ஒஸ்மன் பொபிஆராச்சியுடன் இணைந்து ஒரு அரிய நூலை வெளியிட்டுள்ளார். அந்த நூலில்தான் பிராமி எழுத்துக்களுடன் கூடிய நாணயங்கள் புகைப்படங்களுடன் ஆராயப்பட்டுள்ளன (Bopearachchi 1999). அதில் நூற்றுக்கணக்கான நாணயங்கள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ள போதிலும் அவையனைத்தும் ஈய நாணயங்களாக இருப்பதால் பெரும்பாலான எழுத்துக்கள்

தேய்வடைந்து விட்டன. அவற்றுள் நாற்பது நாணயங்களின் பெயர்களை ஒருவாறு வாசிக்க முடிகிறது. அவையனைத்தும் கி.மு.2ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி.2ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டவை. இவையே இலங்கையில் கிடைத்த காலத்தால் முந்திய நாணயங்களாகும். இவை சங்காலப் பாண்டிய பெருவழுதி நாணயங்களுக்குப்பின் கிடைத்த பழைய நாணயங்களாகக் கருதப்படுகின்றன (மகாதேவன் 2000). இந்நாணயங்களில் வரும் பெயர்கள் இலங்கையின் தொடக்ககால எழுத்து, மொழி, இனம், பண்பாடு போன்ற அம்சங்களை இனங்காண்பதற்கு முக்கிய சான்றுகளாக அமையும் என்பதில் ஐயமில்லை. இந்நாணயங்கள் இரண்டில் தமிழ் பிராமி எழுத்திருப்பதாக இந்நூலாசிரியர்களில் ஒருவரான பொபிஆராச்சி குறிப்பிட்டுள்ளார். ஆனால் அவர் தமிழில் தேர்ச்சியில்லாத காரணத்தால் அவ்விரு நாணயங்களைத் தவிர நூலில் இடம்பெற்றுள்ள பிற தமிழ் நாணயங்களையும் அவரால் சரிவர வாசிக்க முடியவில்லை.

1999இல் கொழும்பில் நடந்த நாணயவியல் கருத்தரங்கில் கலந்து கொண்ட தமிழ்ப் பல்கலைக்கழகத் தொல்லியல் இணைப்பேராசிரியர் கா.இராஜன் அவர்கள் இந்நூலை வாங்கி வந்து இந்நூலில் உள்ள நாணயங்களின் முக்கியத்துவத்தைச் சுட்டிக் காட்டி அவற்றை ஆராயுமாறு என்னிடம் கேட்டுக் கொண்டார். அதன் அடிப்படையில் முதன் முதலில் இந்நூலில் உள்ள தமிழ் நாணயங்களை மட்டும் வாசித்து அதுபற்றி தொல்லியல் பேராசிரியர் எ.சுப்பராயலு அவர்கள் தலைமையில் கல்வெட்டுத் துறையில் கருத்தரங்கு ஒன்றை நடத்தியதுடன், அதைக் கட்டுரையாகப் பேராசிரியர் சிவத்தம்பி அவர்கள் ஆராய்ச்சி என்ற இதழில் பிரசுரிக்கச் செய்தார் (புஷ்பரட்ணம் 1999:55-70). பின்னர் இந்நூலில் உள்ள மேலும் இருநாணயங்களை நாணயவியலாளர் ஆறுமுக சீதாராமனுடன் இணைந்து வாசித்து அவற்றைத் தமிழிலும் (2000:30-40) ஆங்கிலத்திலும் (2000அ) வெளியிட்டுள்ளேன். அண்மையில் இந்நாணயங்களை ஆராய்ந்த சாசனவியல் அறிஞர் மகாதேவன்

அவர்கள் அவற்றை ஆராய்ந்து அரிய இருகட்டுரைகளை ஆங்கிலத்திலும் (Mahadevan 2000), தமிழிலும் (மகாதேவன் 2000:116-120) வெளியிட்டுள்ளார். ஆனால் நாணயங்களின் வாசிப்பிலும், இந்நாணயங்களை வெளியிட்ட மக்கள் யார் என்பதிலும் வேறுபாடு காணப்படுகிறது. அவை பற்றி இந்நூலில் விரிவாக நோக்கலாம். இவ் ஆய்வுக்கான வரைபடங்களும், ஏனைய விபரங்களும் பொபி ஆராச்சியின் நூலில் இருந்து பெறப்பட்டவை.

நாணயம் 1 (நூல் இலக்கம் A 21)



இந்நாணயம் 2.03 கிராம் நிறையும் ,15மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் மலர்வடிவிலான அலங்காரமும், பின்புறத்தில் விளிம்பை ஒட்டி சுவஸ்திகா சின்னமும், அதைத் தொடர்ந்து நாணயத்தின் விளிம்பைச் சுற்றி நான்கு பிராமி எழுத்துக்களும் உள்ளன. இதிலுள்ள எழுத்துக்களை பொபிஆராச்சி *ஊதிரன* (Utira<u>n</u>a) என வாசித்துள்ளார் (Bopearachchi 1999~56). இப்பெயாரின் இறுதியில் வரும் "ன" என்ற எழுத்து தமிழ் மொழிக்கேயுரிய சிறப்பெழுத்தாகும். இது தமிழில் "அன்" என்ற விகுதியில் முடியும் ஆண்மகனின் பெயரைக் குறிக்க பெரும்பாலும் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களிலும், மட்பாண்டங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன. தமிழ்ப் பிராமில் உயிர் மெய், அகர-ஆகாரக் குறியீடுகள் ஒரேமாதிரியானவை (மகாதேவன் 2000:1.17). இதனால் *ஊதிரான* என வாசிக்கப்பட்ட நாணயத்தில் உள்ள பெயரை *உதிரன்* (Utira<u>n</u>) என வாசிப்பதே பொருத்தமாகும். இப்பெயர் உத்திர

நட்சத்திரத்தில் இருந்து வந்ததாகக் கூறப்படுகிறது (இராசகோபால் 1991). இலங்கைப்பிராமிக் கல்வெட்டுக்கள் பலவற்றில் உத(தி)ர, உதிய, உதி போன்ற பெயர்களும் (Paranavithana1970:Nos 202, 349. 538.958). தமிழ் நாட்டில் அரிக்கமேட்டில் கிடைத்த மட்பாண்ட ஓட்டில் உதிரன் என்ற பெயரும் (Mahadevan 1996, இராசகோபால் 1991) பெறப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.

*உதிரன்* என்ற பெயரின் இறுதியில் வரும் "ன" என்ற தமிழ்ப் பிராமி எழுத்து தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களிலும், மட்பாண்டங்களிலும் பயன்படுத்தப்பட்டதே தவிர இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்படவில்லை என்று இதுவரையிலும் கூறப்பட்டு வந்துள்ளது. அதன் அடிப்படையில் இப்பெயர் கொண்ட நாணயத்தை தமிழ் நாட்டு வணிகக் குழு இலங்கையில் வெளியிட்டதாக மகாதேவன் அவர்கள் கருத ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால் வடஇலங்கையில் பூநகரியில் கிடைத்த மட்பாண்டங்களில் இவ்வெழுத்து பெறப்பட்டுள்ளதுடன், சித்துள்பவ, அநுராதபும் போன்ற இடங்களில் கிடைத்த கல்வெட்டுக்களில் பேராசிரியர் பரணவிதானாவால் வாசிக்கப்பட்ட *மருமகாந, மருமகநே* என்ற பெயர்களின் இறுதியில் வரும் (Paranavithana 1970:Nos.643, 1161) "ன" என்ற எழுத்தை தமிழ் மொழிக்குரியதாகக் கொண்டு இதனை *மருமகன்* என வாசிக்கலாம். இதைத் தவிர *மல்லன், மருமான்* போன்ற உறவுப்பெயர்களிலும் இந்த "ன" என்ற எழுத்துப் பயன்படுத்தப் பட்டுள்ளதைக் காணலாம் (புஷ்பரட்ணம் 2000இ:1-10). இப்பின் னணியில் *உதிரன்* பெயர் கொண்ட இந்நாணயத்தை இலங்கைத் தமிழர்களுடன் தொடர்புபடுத்தலாம்.

நாணயம் 2(நூல் இலக்கம் A 37)



இந்நாணயம் 2.14 கிராம் நிறையும், 14மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் சக்கரம் போன்ற வடிவமும், பின்புறத்தில் நாணயத்தின் மத்தியில் சிறுவட்டமும் அதன் நடுவில் சிறு புள்ளியும், நாணயத்தின் விளிம்பை ஒட்டி வட்டமாக ஐந்து பிராமி எழுத்துக்களும் உள்ளன. இதிலுள்ள எழுத்துக்களுக்கு *(த)ஸபிஜனா* ((ta)Sapijana) என்ற வாசகம் கொடுக்கலாம் எனக் கூறியுள்ளார் (Bopearachchi 1999:59). ஆனால் இப்பெயரின் இறுதியிலுள்ள எழுத்தும் முதல் குறிப்பிட்ட நாணயத்தில் உள்ளது போல் "அன்" என்ற விகுதியுடன் முடிவதால் இப்பெயரை *தஸபிஜன்* என வாசிக்க முடியும். மகாதேவன் அவர்கள் முதலுள்ள இகர உயிர்மெய் குறியீடு தேய்ந்து அல்லது அழிந்திருக்கலாம் எனக் கூறி அதை "தி" எனவும், ஐந்தாவது எழுத்தை "ட" எனவும் எடுத்து நாணயத்தின் வாசகம் *(தி)ஸபிடான்* எனவும், இது இலக்கிய நடையில் *திஸ பிட்டன்* எனவும் கூறியுள்ளார் (2000119). இதற்குச் சான்றாக இலங்கைப் பிராமிக்கல்வெட்டுக்களில் வரும் திஸ என்ற பெயர்களோடு தமிழ் நாட்டில் அழகன் குளத்தில் கிடைத்த மட்பாண்ட ஓட்டில் *திசஅன்*, அழகர்மலைக் குகைக் கல்வெட்டில் *தியன்*, கொங் கர்புளியங்குளக் கல்வெட்டில் பிட்டன் (பிடான) போன்ற பெயர்கள் வருவதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

பிராமிக் கல்வெடடுக்களில் "ங" "ட" "ஜ" போன்ற எழுத்துக்கள் வடிவமைப்பில் ஒருவித ஒற்றுமைத்தன்மை கொண்டுள்ளன. "ட" எழுத்து அரைவட்ட வடிவிலும், அதன் வடிவம் சதுரம் அல்லது நடுவில் சற்று மடிந்து உள்நோக்கி ஒரு கோடு நீண்டிருக்கும் வடிவம் "ஜ" எனவும், அரை வட்டம் சதுரமாக அமைந்திருக்கும் போது "ங" எனவும் அழைக்கப்படும். தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் "ங" "ட" என்ற எழுத்துக்கள் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் இம்மூன்று எழுத்துக்களும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதன் அடிப்படையில் நாணயத்தில் வரும் பெயரைக் கல்வெட்டுக்களில் வரும் "ஜ" என்ற எழுத்துடன் ஒப்பிட்டுப்

பார்க்கும் போது *பிட்டன்* என வாசிக்கப்பட்டதை *பிஜன்* என வாசிப்பதே பொருத்தமாக உள்ளது. மகாதேவன் அவர்கள் நாணயத்தில் உள்ள தஸ என்ற சொல்லின் முதலெழுத்தை "தி" என எடுத்து *திஸ* என வாசித்தாலும், இலங்கைப்பிராமிக் கல்வெட்டில் *தஸ* என்ற சொல்லும் பயன்பாட்டில் இருந்துள்ளது (Paranavithana 1970:No.389). இது வடமொழியில் அவனுடைய என்ற கருத்தைக் கொடுக்கிறது. இதனால் நாணயத்தில் வரும் தஸ என்ற சொல் பிஜனுடைய நாணயம் என்பதைக் குறிப்பதற்காக இருக்கலாம்.

நாணயம் 3(நூல் இலக்கம் A 20)



இந்நாணயம் 2.56 கிராம் நிறையும், 16மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் அலங்காரமான மலர் வடிவமும், பின்புறத்தில் நாணயத்தின் மத்தியில் சிறுவட்டமும் அதன் நடுவில் சிறு புள்ளியும், நாணயத்தின் விளிம்பை ஒட்டி வட்டமாக எட்டு பிராமி எழுத்துக்களும் உள்ளன. இதிலுள்ள எழுத்துக்களுக்கு *கபதிகஜகஅபொ* (kapatikajaapo) என்ற வாசகம் கொடுக்கப்பட்டுள்ளது ( Bopea rachchi1999:54-55). ஆனால் இவற்றின் வாசிப்புக்கு , சரியான பொருளை ஆசிரியரால் கொடுக்க முடியவில்லை. இதில் வரும் இறுதி எழுத்தான "பொ" என்ற வரிவடிவத்தை "ன்" எனக் கொண்டு இதனை "அன்" விகுதியில் முடியும் ஆண் பெயராகக் கொள்ளலாம். இதனால் இந்நாணயத்தில் வரும் பெயரையும் முதலிரு நாணயங்களைப் போல் தமிழ்ப் பெயராக எடுக்கலாம். இதைக் *கபதி கஜபஅன்* என வாசிக்கலாம். இதில்



படம் - 11

*கபதி* என்பது பட்டப் பெயராகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது குடும்பத் தலைவன் என்ற கருத்தைக் கொண்டுள்ளது. அநுராதபுரத்தில் உள்ள கல்வெட்டொன்று தமிழ்க் கபதி பற்றிக் கூறுகிறது (Paranavithana 1970:No94). இது குடும்பிகன் என்ற பட்டத்திற்கு சமமான கருத்துடையது. தமிழ் நாட்டிலுள்ள திருப்பரங்குன்றக் கல்வெட்டொன்று ஈழத்தைச் சேர்ந்த குடும்பிகன் பற்றிக் கூறுகிறது (Mahadevan1966:No 51). "கஜபஅன்" என்பது கபதி என்ற பட்டத்திற்குரியவரின் பெயராகும். "கஜப" என்பதற்கு யானை என்ற கருத்துண்டு. இதன் மூலம் இவனை யானைப்படையின் தலைவன் எனக்கொள்ளலாம். இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறை முதுநிலைக் கல்வெட்டாய்வாளர் ராஜவேலு நாணயத்தில் வரும் "ஜ" என்ற எழுத்தை "ட" எனக் கூறி *கஜபஅன்* என்ற பெயரைக் "கடல அன்" என வாசிக்கலாம் எனக் கூறுகிறார்[1]. இதற்கு தமிழ் நாட்டி லுள்ள மாங்குளக் கல்வெட்டில் வரும் "காடாலஅன்" என்ற பெயரைச் சான்று காட்டுகிறார். இதே கருத்துடைய மகாதேவன் அவர்கள் நாணயத்தில் வரும் பெயரும் மாங்குளக் கல்வெட்டில் வரும் பெயரும் ஏறத்தாழ ஒன்று என்கிறார் (2000:117).

இலங்கை வரலாற்றில் *கஸப* என்ற பிராகிருதப் பெயரை பலதரப்பட்ட மக்களும், ஆட்சியாளரும் பயன்படுத்தியதைக் கல்வெட்டுக்களிலும், பாளி இலக்கியங்களிலும் காணலாம். இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் *கஸப* (kasaba), *கச$_{o}$ப* (kasapa ) என

வரும் பெயர்கள் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் *தமிழ் மயப்படுத்தப்பட்டு கஸபன்* (காசபான்), *காசிபன்*என எழுதப்பட்டுள்ளன (Mahadevan 1966:Nos 29,41). ஒரே பெயர் இலங்கையிலும், தமிழகத்திலும் வேறுபட்ட எழுத்துக்களால் எழுதப்பட்டுள்ளதைக் இவை காட்டுகிறது. நாணயத்தில் வரும் "ஜ" என்ற எழுத்து வடிவம் இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் ராஜா, மகாராஜா என்ற பெயர்களிலும் வருகின்றன (Paranavithana 1970:11 Nos20, 1207). இதேவடிவம் *மாங்குளக்கல்வெட்டில்* வரும் கடலஅன் என்ற பெயரில் வரும் "ட" என்ற எழுத்தை ஓரளவு ஒத்திருந்தாலும் கல்வெட்டில் வரும் "ல" என்ற எழுத்தின் வலப்பக்கக் கோடு பதிந்தும் இடப்பக்க கோடு உயர்ந்தும் காணப்படுகிறது. இது பிராமி எழுத்தில் "ல"வைக் குறிக்கும் பொதுவான அம்சமாகும். இதையொத்த எழுத்தே நாணயத்திலும் இருப்பதாக்க் கூறும் போது நாணயத்தில் உள்ள எழுத்தின் வலது பக்க கோடு உயர்ந்தும், இடது பக்க கோடு பதிந்தும் காணப்படுகின்றன[1]. இது பிராமியில் "ஹ" என்ற எழுத்தைக் குறிப்பதை இலங்கை மற்றும் இந்தியக் கல்வெட்டுக்களிலிருந்து கண்டு கொள்ளலாம். ஆனால் இவ்வெழுத்து தமிழகத்தில் அழகன்குள அகழ்வாய்வில் மட்பாண்டத்தில் பெறப்பட்டதைத் தவிர தமிழகப் பிராமிக்கல்வெட்டுக்களில் இருப்பதாகத் தெரியவில்லை (இராசகோபால் 1991). எனவே இலங்கைப் பிராமிக் கல்வெட்டு எழுத்துக்களின் பின்னணியில் வைத்துப் பார்க்கும் போது நாணயத்தில் வரும் எழுத்துக்களை *கபதி கஜபஅன்* என வாசிப்பது பொருத்தமாகத் தெரிகிறது.

நாணயம் 4(நூல் இலக்கம் A 17)



இந்நாணயம் 2.19 கிராம் நிறையும், 17மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் வலப்புறம் நோக்கிய நிலையில் சேவல் உருவமும்[2], பின்புறத்தில் நாணயத்தின் மத்தியில் சுவஷ்திகா சின்னமும், நாணயத்தின் விளிம்பை ஒட்டி வட்டமாக ஆறு பிராமி எழுத்துக்களும் உள்ளன. இதிலுள்ள எழுத்துக்கள் *மஹசிதஅபொ* (Mahacita apo) எனப் படிக்கப்பட்டுள்ளது (Bopearachchi1999 :54-55), ஆனால் இவற்றின் வாசிப்புக்கும் சரியான பொருளை ஆசிரியரால் கொடுக்கமுடியவில்லை. முந்தைய நாணயத்தில் குறிப்பிடப்பட்டது போலவே இந்நாணயத்தின் இறுதியில் வரும் பெயர் "அன்" என முடிவதால் இதை *மஹாசாத்அன்* என வாசிக்கலாம். சாத்தன் என்ற பெயர் சங்க இலக்கியத்திலும் (புறம் 227, அகம் 50, குறு 349), தமிழகப் பிராமிக்கல்வெட்டுக்களில் பல இடங்களிலும் வந்துள்ளன (Mahadevan 1966 :69). இதற்கு வணிகன் அல்லது வணிகக் குழு, வணிகக்கூட்டத் தலைவன், தனிநபருக்குரிய பெயர் எனப் பல கருத்துக்கள் உண்டு (T.L.:III1360). மகாவம்சம் என்ற பாளி நூல் கி.மு.2ஆம் நூற்றாண்டில் அநுராதபுரத்தில் ஆட்சிபுரிந்த எல்லாளன் என்ற தமிழ் மன்னனை துட்டகாமினி என்ற மன்னன் வெற்றி கொளளமுன்னர் தென்னிலங்கையில் ஆட்சி புரிந்த *சாத்தன்* என்ற தமிழ் படைத்தளபதியை வெற்றி கொண்டதாகக் கூறுகிறது (M.V.XXV:7). இதிலிருந்து சாத்தன் என்ற பெயர் இலங்கைத் தமிழரிடையேயும் வழக்கிலிருந்தமை தெரிகிறது. நாணயத்தில் வரும் "மஹா" என்ற சொல் இலங்கைப்பிராமிக் கல்வெட்டுகளில் "மஹா" "மகா" எனப் பல இடங்களில் தனிநபர் மற்றும் அரச பெயர்களுக்கு முன்னால் பயன்படுத்தப்பட்டுள்ளது. (Paranavith ana 1970:117-118), இதற்கு பெரிய, பெருமை, மிகுந்த, அளவற்ற அல்லது உயர்ந்த எனப் பல கருத்துக்கள் உள்ளன (T.L.V:7). இதை குறுந்தொகை போன்ற சங்க நூல்களில் வரும் பெருஞ்சாத்தனார் போன்ற பெயர்களுடன் தொடர்புபடுத்திப் பார்க்கலாம் (குறும் 263). தென்னிலங்கையில் எல்லாள மன்னனுக்குச் சார்பாகப் போரிட்ட மகா கொத்தன் என்ற தமிழ்ப் படைத் தளபதியை வெற்றி கொண்டதாக மகாவம்சம் கூறுகிறது (M.V.XXV:11). மகா

கொத்தன் என்ற பெயரின் முன்னொட்டுச் சொல்லான "மகா" என்பது சிறந்த அல்லது மிகப் பெரிய வீரன் என்ற பொருளில் வருவதாக எடுத்துக் கொள்ள இடமுண்டு. இவற்றிலிருந்து பண்டைய இலங்கையில் "மகா" என்ற அடைமொழியோடு தமிழப் பெயர்கள் இருந்தமை தெரிகிறது. இதனால் நாணயத்தில் வரும் "மஹாசாத்அன்" என்ற பெயர் பெரும்வணிகன், பெரும்வணிககுழு, பெரும் வீரனுக்கு அல்லது பெருமைக்குரிய தனிநபருக் குரிய பெயரைச் சுட்டி நிற்பதாக எடுத்துக் கொள்ளலாம்.

இந்நாணயத்தை வாசித்த மகாதேவன் அவர்கள் நாணயத்தின் அச்சு, பிழையாக நேரடியாக எழுதப்பட்டிருப்பதால் கண்ணாடியில் காண்பது போன்று மாறியமைந்துள்ளது என்றும், "சா" என்ற எழுத்து மட்டும் அச்சில் மாற்றிச் செதுக்கப்பட்டிருப்பதால் அது நாணயத்தில் "செ" போன்று தோன்றுகிறது எனவும் கூறி நாணயத்தின் திருந்திய வடிவம் *மலச(ா)தஅன* எனவும், இலக்கிய வடிவில் அது *மல்ல சாத்தன்* எனவும் கூறுகிறார். இதற்குச் சான்றாக ம(ல்)லன் என்ற பெயர் அழகர் மலையிலும், சா(த்)தன் என்ற பெயர் திருப்பரங்குன்றம் மற்றும் சில கல்வெட்டுக்களிலும் வருவதை உதாரணமாகக் கூறுகிறார் (மகாதேவன் 2000117).

பண்டைய காலத்தில் சில வகை நாணயங்கள், முத்திரைகள் என்பவற்றின் அச்சுக்கள் நேரிடையாக எழுதப்பட்டதால் அவை கண்ணாடியில் பார்த்து வாசிப்பது போன்று அமைந்துள்ளன. இம்முறை தமிழகத்தில் மட்டுமன்றி இலங்கையிலும் இருந்ததற்கு ஆனைக்கோட்டையில் கிடைத்த ஈரெழுத்து முத்திரையும் (Ragupathy 1987:118-119), அக்குறுகொட என்ற இடத்தில் கிடைத்த சில நாணயங்களும் சான்றாகும் (Bopearachchi 1999:59). ஆனால் மேற்குறிப்பிட்ட நாணயத்தில் உள்ள எழுத்துக்களைக் கண்ணாடியில் பார்த்தாலும், நேரில் பார்த்தாலும் அவற்றில் உள்ள எழுத்துக்களில் சில தவறுகள் இருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ஆனால் ஒரே

பெயரில் உள்ள எழுத்துக்களில் சில எழுத்துக்கள் கண்ணாடியில் பார்ப்பது போலவும், இன்னும் சில எழுத்துக்கள் (செ" என்பதைச் சா என மகாதேவன் எடுத்திருப்பது) நேரடியாக வாசிப்பது போலவும் எழுத்துக்கள் அமைந்திருப்பதாகக் கூறுதை இதுவரை கிடைத்துள்ள சான்றுகளின் அடிப்படையில் ஏற்றுக்கொள்வது கடினமாக உள்ளது. ஆனால் நாணயத்தில் உள்ள எழுத்துக்களை நேரில் வாசிக்கும் போது மஹா மற்றும் சாத்த என்ற பெயர் தெளிவாக உள்ளன. அத்துடன் இவ்விரு பெயர்களும் இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களிலும் வருகின்றன (Paranavithana 1970:Nos117,896b). *மஹா* என்ற பிராகிருத சொல் சில கல்வெட்டுக்களில் வடமொழிக் "ஹ" வுக்குப் பதிலாக தமிழ் "க" பயன்படுத்தப்பட்டு *மகா* எனவும் எழுதப்பட்டுள்ளது (Paranavithana 1970:No 1117). ஆனால் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் மஹா அல்லது *மகா* என்ற சொல் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே இலங்கையின் இக்காலக் கல்வெட்டு மொழி, எழுத்து என்பவற்றின் பின்னணியில் வைத்துப் பார்க்கும் போது நாணயத்தில் வரும் பெயரை *மல்லசாத்தன்* என வாசிப்பதை விட *மஹாசாத்அன்* என வாசிப்பது பொருத்தமாக உள்ளது. *மல்ல* என்பதற்கு வீரம் என்ற கருத்தும், *மஹா* என்பதற்கு பெரிய என்ற கருத்தும் உண்டு. இங்கே *சாத்தன்* என்ற பெயர் வணிகனைக் குறிப்பதாக எடுத்துக் கொண்டால் வீரவணிகன் என்பதை விடப் பெரியவணிகன் எனக் கூறுவதுதே பொருத்தமாக உள்ளது.

**நாணயம் 5(நூல் இலக்கம் A 11)**



இந்நாணயம் 2.41 கிராம் நிறையும் ,17மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் நிற்கும் நிலையில் மனித உருவம் உள்ளது. அதன் கையில் வேல், அம்பு இருப்பதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. ஆனால் அதில் ஒன்று திரிசூலம் என்பது தெளிவாகத் தெரிகிறது. இந்நாணயத்தை 45பாகையில் இடப்புறமாகச் சுற்றி பார்க்கும் பொழுது வேலுடன் கூடிய ஒரு மிருகத்தின் உருவமாக இருக்கலாம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நாணயத்தின் பின்புறத்தில் திரிசூலம் போன்ற குறியீட்டைச் சுற்றி ஆறு எழுத்துக்களில் மலக *திச ஹ* என்ற பெயர் உள்ளது. இதை மல்லக *திஷ்ச ஹ* (mallaha tissaha) என வாசிக்கப்பட்டுள்ளது (Bopearachchi 1999:53). இலக்கிய நடையில் இரட்டிக்கும் ஒற்றுக்கள் தமிழ்ப் பிராமி வாசகங்களில் ஒன்றாக வருவதால் கல்வெட்டில் *மல* என எழுதப்பட்டிருப் பதை *மல்ல* என வாசிக்கலாம். அநுராதபுரத்தில் கிடைத்த கல்வெட்டொன்றில் மலந(ன்?) என்ற பெயர் காணப்படுகிறது (I.C.No202). இதை *மல்லந(ன்)* என வாசிக்கலாம். பேராசிரியர் பரணவிதானா இதை மாலிந என வாசித்துள்ளார் (1970:17). ஆனால் கல்வெட்டிலுள்ள எழுத்துக்களை நோக்கும் போது பெயரின் இறுதியில் தமிழுக்கே உரிய "ன்" என்ற எழுத்துக் காணப்படுவதால் இதை *மல்லன்* என வாசிப்பது பொருத்தமாகும். பொபிஆராச்சி *மல, மல்ல* என்ற சொல் வடமொழிக்குரியதெனவும், இவை ஒரு இனத்தின் தலைவன் அல்லது வீரனைக் குறிப்பதாகவும் கூறுகிறார். ஆனால் பறோ இவற்றை மூலத்திராவிட மொழிக்குரியதாகக் குறிப்பிட்டுள்ளார் (Burrow 1961:3871). இதற்கு வீரன் என்பது பொருளாகும். இதை நாணயத்தில் காணப்படும் ஆயுதங்களும் உறுதிப்படுத்துவதாக உள்ளன.

இலங்கைப் பிராகிருத மொழிக் கல்வெட்டுக்களில் *மல்லஹ, மல்லஸ, மல்லந* என வரும் இப்பெயர் (Paranavithana 1970:Nos 1148,1183,202), நாணயத்தில் தமிழில் *மல்லக* என எழுதப்பட்டுள்ளமை ஒரு முக்கிய வேறுபாடாக உள்ளது. அத்துடன் நாணயத்தின் பின்புறத்திலும், முன்புறத்திலும் திரிசூலமும்

இடம்பெற்றுள்ளது. இச்சின்னம் இந்தியா குறிப்பாக சங்ககால தமிழக நாணயங்களிலும் காணப்படுகின்றன (Krishnsmurthy 1997:80-90). இதில் வரும் *திசஹ* என்ற பெயர் பிராகிருத மொழிக்குரியதாக இருப்பினும் இப்பெயரில் தமிழர்களும் இருந்ததற்குச் சான்றுகள் உண்டு. இதற்கு தமிழ் நாட்டில் அழகன் குளத்தில் கிடைத்த மட்பாண்டத்தில் வரும் *திசஅன்* என்ற பெயர் ஒரு எடுத்துக்காட்டாகும். இலங்கையில் அம்பாறை மாவட்டத்தில் குடுவில் என்ற இடத்தில் கிடைத்த கி.மு.2 ஆம் நூற்றாண்டிற்குரிய கல்வெட்டொன்று தீகவாபி என்ற இடத்தில் வாழ்ந்த *திச* என்ற தமிழன் பற்றிக் கூறுகிறது (Paranavithana 1970 :No 480). அநுராதபுரத்தில் கிடைத்த கல்வெட்டொன்று தமிழர்கள் ஒன்றுகூடி வணிகம் தொடர்பான ஆலோசனை நடத்த மண்டபம் ஒன்றை அமைத்ததாகவும், அவ்வணிக குழுவில் *திசஹ* என்ற பெயருக்குரிய தமிழனும் ஈடுபட்டதாகவும் கூறுகிறது ( Parana vithana 1970: 94). கி.பி 2ஆம் நூற்றாண்டில் அநுராதபுரத்தில் ஆட்சி புரிந்த இளநாகனின் பட்டத்தரசியாக இருந்த தமிழதேவியின் (தமிழ்த் தேவி) புதல்வன் பிற்காலத்தில் *தீஸ* என்ற பெயருடன் அநுராதபுரத்தில் ஏழு வருடம் எட்டு மாதம் ஆட்சிபுந்ததாகப் பாளி நூல்கள் கூறுகின்றன (M.V.XX XV:48-50). இதன் மூலம் இந்நாணயத்தை பௌத்த மதத்தை சாராத தமிழன் ஒருவன் இலஙங்கையில் வெளியிட்டிருக்கலாம் எனக் கூறலாம்.

நாணயம் 6(நூல் இலக்கம் A25)



இந்நாணயம் 2.03 கிராம் நிறையும், 17மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் புலி போன்ற உருவமும், பின்புறத்தில் ஐந்து பிராமி எழுத்தில் *சட ணாகஸ* என்ற பெயரும் காணப்படுகிறது.

இலங்கையிலுள்ள 40 பிராமிக் கல்வெட்டுக்களில் *சட, சள* போன்ற சொற்கள் வம்சம், பட்டம், தனிநபர் சார்ந்த பெயர்களாக வருகின்றன. தமிழில் "ழ" க்குப் பதிலாக "ட" பயன்படுத்தும் மரபு பௌத்த நூலாகிய வீரசோழியத்தில் காணப்படுவதால் தமிழில் இச்சொல் சோழரைக் குறித்ததென்ற கருத்துமுண்டு (Ragupathy 1991). இதற்கு அசோகனது 2வது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் சோழ அரசு சோட எனக் கூறப்பட்டுள்ளதை இங்கு சுட்டிக்காட்டலாம் ( Hultzsch 196 9XXX IXX). இலங்கையில் செருவல என்ற இடத்தில் கிடைத்த கி.மு. 2ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டில் *சட* என்பது தமிழனுக்குரிய பெயராகக் குறிப்பிடப்பட்டுள்ளது (Seneviratne 1985 :52). மேலும் இதே கால கட்டத்திற்குரிய சில கல்வெட்டுக்களில் *சட என்ற பெயர் ஆய், மாற* போன்ற தமிழ்ப் பெயர்களுடன் பட்டப்பெயராக இணைந்து வருகின்றன (Paranavithana 1970 :No 968 ).

இப்பின்னணியில் நாணயத்தின் பெயரை நோக்கும் போது சில சிறப்பியல்புகளைக் காணமுடிகிறது. பெரும்பாலான சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களில் *சட, சள* போன்றவை வம்சம் அல்லது பட்டம் சார்ந்த பெயராகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதே போல் நாணயத்தில் வரும் *சட* என்ற பெயரும் ஒரு பட்டத்தை அல்லது வம்சத்தைக் குறிப்பதாக உள்ளது. இன்னொன்று பிராமிக் கல்வெட்டுக்கள் பலவற்றில் நாஹ என்ற பெயரில் வடமொழிக் "ஹ" பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் நாணயத்தில் வடமொழிக் "ஹ"வுக்குப் பதிலாக தமிழ்க் "க" பயன்படுத்தப்பட்டுள்ளது. நாணயத்தில் *நாக* என்பது *ணாக* என எழுதப்பட்டுள்ளது. இவ்வாறு எழுதும் மரபு சமகாலத்தில் இருந்ததற்கு தமிழ் நாட்டில் அழகர்மலைக் கல்வெட்டில் வரும் *ணாகன்* என்ற பெயரைக் குறிப்பிடலாம் (Mahadevan 1966:No33). பண்டைய காலத்தில் *நாக* என்ற பெயரில் தமிழர்கள் இருந்தற்குப் பாளி நூல்களில் சான்றுகள் உண்டு. மகாவம்சம் கி.பி 2ஆம் நூற்றாண்டில் அநுராதபுரத்தில் ஆட்சி புரிந்த இளநாக மன்னன் மனைவியை தமிழாதேவி (தமிழ்த் தேவி) எனக் கூறுவதை இங்கு நினைவுபடுத்தலாம் (M.V.XXXV:46-48). இச்சான்றுகள் சேர்ந்த

இந்நாணயத்தை தமிழர்கள் வெளியிட்டார்கள் என்பதைக் காட்டுகின்றன. நாணயத்தின் முன்புறத்தில் உள்ள உருவத்தை பொபிஆராச்சி சிங்கமாகவே எடுத்துள்ளார் (1999:57). ஆனால் பிற நாணயங்களில் சிங்க உருவத்தின் வால்பகுதியில் உள்ள குஞ்சம் இவ்வுருவத்தில் காணப்படவில்லை. சங்ககாலச் சோழமன்னர் தமிழகத்தில் வெளியிட்ட நாணயங்களில் புலியுருவம் அவர்களின் அரச இலட்சனையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது ( சீதாராமன் 1994:13). மேற்குறித்த நாணயத்தில் வரும் உருவத்தைப் புலியென எடுத்துக் கொண்டால் சங்க காலச் சோழரைப் போல் இங்கு வாழ்ந்த தமிழர்களும் புலியைப் பயன்படுத்தினர் என எடுத்துக் கொள்ளலாம்.

நாணயம் 7(நூல் இலக்கம் A 19)



இந்நாணயம் 2.21 கிராம் நிறையும், 14மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் ஆமைச் சின்னமும் அதைச் சுற்றி வட்டமும், வட்டத்திற்கும், விளிம்புக்கும் இடையில் முக்கோண வடிவிலான அலங்காரமும் காணப்படுகின்றன. பின்புறத்தில் நாணயத்தின் மத்தியில் "ப" வடிவிலமைந்த இரு சின்னங்களும், விளிம்பை ஒட்டி *சுட ச*<sub></sub>*மணஹ* (Cuda Samanaha) என்ற பெயரும் காணப்படுகிறது (Bopearachchi 1999:5). இதில் வரும் *சுட* என்ற பட்டம் அல்லது வம்சப் பெயர் பற்றி 6வது கட்டுரையில் கூறப்பட்டுள்ளது. இப்பட்டத்திற்குரிய *ஷமணக* என்ற பெயர் பிராகிருத மொழிக்குரியதாகும். ஆனால் இப்பெயரில் தமிழர்களும் இருந்ததற்கு சான்றுகள் உண்டு. அநுராதபுரத்தில் கிடைத்த கல்வெட்டொன்றில் *ஈளபரதஹி தமிட ஸமணஒ கரிதே தமிட கபதிகந பச*<sub></sub>*தே* என்ற குறிப்பு வருகிறது (Paranavithana1970:No 94). இதில் ஈழத்தைச்

*சமண* என்ற தமிழனும், தமிழ் குடும்பத்தலைவனும் சேர்ந்து மண்டபம் அமைத்த செய்தி கூறப்பட்டுள்ளது. இதில் *கபதிகந* என வாசிக்கப்பட்டதை *கபதிகன்* எனவும் படிக்கலாம். தொடக்க காலத் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்களில் "ன்" என்ற எழுத்துக்குப் பதிலாக "ந்" என்ற எழுத்து எழுதப்பட்டதற்கும் அது "ன்" என வாசிக்கப்பட்டதற்கும் சான்றுகள் உண்டு. உதாரணமாக தமிழ் நாட்டில் ஜம்பையில் கிடைத்த அதியமான் பற்றிய கல்வெட்டில் *அதியன்* என்ற பெயர் *அதியந்* என எழுதப்பட்டதையும், அதை அதியன் என வாசித்ததையும் இங்கு குறிப்பிலாம் (சீனி வேங்கடசாமி1981:145-148). அதன் அடிப்படையில் கபதி என்ற பிராகிருதப் பெயர் கபதிகன் எனத் தமிழ் மயப்படுத்தப்பட்டதாகக் கூறலாம். மேலும் இக்கல்வெட்டிலிருந்து தமிழ் வணிகர்கள் வர்த்தகம் தொடர்பான ஆலோசனையை நடத்த இம்மண்டபத்தைப் பயன்படுத்தியதையும், இம்மண்டபத்தில் அமரவேண்டிய உறுப்பினர்களின் இருக்கைகள் அவரவர் தகுதிக்குரியவாறு அமைக்கப்பட்டதையும் இருக்கைகளில் எழுதப்பட்டுள்ள பெயர்களிலிருந்தும் தெரிகிறது. அதில் கப்பல் தலைவன் *கரவ* (நாவிக கரவ) என்பனுடைய இருக்கை மிக உயரத்தில் இருப்பதால் அவனே வணிகக்குழுவின் தலைவனாக இருந்திருக்க வேண்டும். அத்துடன் இக்கல்வெட்டின் மூலம் ஈழத்தில் பரதவ சமூகம் இருந்தமையும், அச்சமூகத்தை சேர்ந்த தமிழனுக்கு *சமண* என்ற பெயர் இருந்தமையும் (இதை மேலும் சில கல்வெட்டுக்கள் கூறுகின்றன (Paranavithana 1970:Nos392, 392,321). தமிழர்களும் குடும்பத் தலைவனைக் குறிக்கும் *கபதி* என்ற பட்டப் பெயரைப் பயன்படுத்தியதையும், தமிழர்கள் ஒரு குழுவாக வெளிநாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டதையும் அறியமுடிகிறது.

ஆனால் *சமண* என்ற பெயர் பலதரப்பட்ட மக்களுக்குரிய பெயராக கல்வெட்டில் காணப்படுவதால் நாணயத்தில் வரும் பெயருக்குரியவனை பெயரடிப்படையில் வைத்து தமிழன் என அடையாளம் காணமுடியாது. இருப்பினும் *சட* என்ற பெயர் ஒரு கல்வெட்டில் *தமிழ் சட* எனக் குறிக்கப்பட்டிருப்பதுடன் இப்பெயர்

ஆய், மாற போன்ற தமிழுக்குரிய தனிநபர் பெயர்களில் பட்டம், வம்சம் சார்ந்த பெயராகவும் வருகிறது (Paranavithana1970:No968). அதே போல் சமண என்ற தனிநபர் பெயரும் சுட என்ற பெயரைப் பட்டமாக அல்லது வம்சப் பெயராகக் கொண்டு கல்வெட் டுக்களில் வருகின்றது (Paranavithana1970:Nos 376. 203). நாணயத்தில் வரும் ஆமைச் சின்னம் சமகாலத்தில் தமிழகத்தில் வெளியிடப்பட்ட சங்க கால நாணயங்களிலும் வருகின்றது (Krishnsmurthy 1997~32-33). இவ்வாறு வருவதை நாணயத்தை வெளியிட்டவன் கடல் வாணிபத்துடன் தொடர்புள்ளவன் என்பதைக் காட்டுவதாக எடுத்துக் கொள்ளலாம். சோழரைக் குறிக்கும் *சுட* என்ற பெயருக்குரியவர்கள் வெளிநாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டதையும், வர்த்தக மேற்பார்வையாளராக இருந்ததையும் இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன (Paranavithana 1970). இதனால் சுட ச௱மணகஹ என்ற பெயருடைய நாணயத்தைச் சோழவம்சத்தில் அல்லது சோழநாட்டில் இருந்து இங்கு குடியேறிய தமிழன் வெளியிட்ட நாணயமாக எடுத்துச் கொள்ளலாம்.

நாணயம் 8(நூல் இலக்கம் A 12)



இந்நாணயம் 1.93 கிராம் நிறையும், 15மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் சுவஷ்திகா சின்னமும், அதன் கீழ் இரு கோட்டுருவ மீன் சின்னங்களும், பின்புறத்தில் நாணயத்தின் விளிம்பை ஒட்டி வட்டமாக ஆறு பிராமி எழுத்துக்களும் உள்ளன. இவ்வெழுத்துக்களை *பரத திச௱ஹ* (barata tiSaha) எனவும் வாசிக்க முடிகிறது. இதில் வரும் பரத என்ற பெயர் 21 இலங்கைப் பிராமிக் கல்வெட்டுகளில் வருகின்றது. இப்பரத என்ற பெயரும் சங்க

இலக்கியத்தில் பரதவ சமூகத்தைக் குறிக்கும் *பரதவர், பரவர், பரதர்* என்ற பெயரும் ஒன்றாகும். சங்க இலக்கியத்தில் இச்சமூகம் வர்த்தகம், மீன்பிடித்தல், முத்து, சங்கு குளித்தலில் ஈடுபட்டதற்குப் பல சான்றுகள் உண்டு. இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் இப்பெயருக்குரியவர்கள் வர்த்தகர்களாக, கப்பல் தலைவர்களாக, கப்பல் ஒட்டிகளாக, அரச தூதுவர்களாக செயல்பட்டமை தெரிகிறது (புஷ்பரட்ணம் 2000:59–76). பரத பெயர் கொண்ட இந்நாணயத்தின் முன்புறத்தில் மீன் சின்னம் இடம்பெற்றிருப்பது பரதவ சமூகம் மீன்பிடித்தொழில் ஈடுபட்டதாகச் சங்க இலக்கியம் கூறுவதை நினைவுபடுத்துவதாக உள்ளது. இப்பரத என்ற பெயர் பெரும்பாலும் இலங்கையில் வாழ்ந்த தமிழர்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அநுராதபுரத்தில் கிடைத்த கி.மு.2ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டு ஈழத்தைச் சேர்ந்த பரத என்பவன் தமிழ் நாட்டு வணிகர்களுடன் ஒன்றிணைந்து வர்த்தகத்தில் ஈடுபட்டதாகக் கூறுகிறது (Paranavithana 1970:94). கல்வெட்டுக்களில் *பரத* என்ற பெயருடன் *ஆய், மாற* போன்ற பெயர்களும் இணைந்து வருவது கவனத்தில் கொள்ளத்தக்கன.

நாணயத்தில் வரும் *திச$_0$ஹ* என்ற பெயர் அவனைப் பரதவ சமூகத்தைச் சேர்ந்தவன் என்பதைக் காட்டுகிறது. *திச$_0$, திச$_0$ஹ* என்ற பெயர் 12 பிராமிக் கல்வெட்டில் பரத என்ற பெயருடன் இணைந்து (பரத திச$_0$, திச$_0$ஹ) வருகின்றமை இதற்குச் சான்றாகக் காட்டலாம் (புஷ்பரட்ணம் 2000:65–6). *திச$_0$* என்ற பெயர் இலங்கையில் தமிழர்களுக்கும் இருந்ததற்கான சான்றுகள் பற்றி ஏற்கனவே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இவற்றின் பின்னணியில் *பரத திச$_0$ஹ* என்ற பெயர் பொறித்த நாணயத்தை இலங்கையில் வாழந்த தமிழர்கள் வெளியிட்டார்கள் என எடுத்துக் கொள்ளலாம்.

நாணயம் 9(நூல் இலக்கம் A 5)



இந்நாணயம் 3.65 கிராம் நிறையும், 19மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் இடப்புறம் நோக்கிய நிலையில் யானை உருவமும், பின்புறத்தில் நாணயத்தின் மத்தியில் சிறுபுள்ளியும் அதைச் சுற்றி *மஜிமஹ* (majhimaha) என்ற பெயரும் காணப்படுகின்றது (Bopearachchi 1999:52). இந்நாணயம் கண்டெடுக்கப்பட்ட வட்டாரத்தில் உள்ள கி.மு. 1ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட பத்துக் கல்வெட்டுக்கள் *மஜிமகாராஜா* வழிவந்த பத்து சகோதரர்களின் ஆட்சிபற்றிக் கூறுகின்றன ( Paranavithana 1970 : Nos 556-569). பேராசிரியர் பரணவிதானா மஜி என்பது இக்காலத்தில் இலங்கையில் வாழ்ந்த மக்களின் பெயரெனக் கூறுகிறார் (Paranavithana 1970 :117). ஆனால் இதற்கு மீன் என்ற பொருளும் உண்டு. இதை உறுதிப்படுத்தும் வகையில் இக்கல்வெட்டுக்களில் மீன்கோட்டுருவங்கள் வரையப்பட்டுள்ளன. பாண்டியர் தமது குலச்சின்னமான மீனை நாணயங்களில் பயன்படுத்தியுள்ளனர். ஆனால் இலங்கையில் மீன்சின்னத்திற்குப் பதிலாக அதைக்குறிக்கும் பெயரையும் பயன்படுத்தியிருககலாம் எனக் கருத இடமுண்டு. இதற்கு பாண்டியர் வெளியிட்ட நாணயங்களைப் போல் இந்நாணயங்களின் முன்புறத்தில் யானை இடம்பெற்றிருப்பதைச் சான்றாகக் காட்டலாம்.

மென்டிஷ் என்ற வரலாற்றறிஞர் மீன் கோட்டுருவங்களுடன் கூடிய இக்கல்வெட்டுக்கள் ஆதிகாலத்தில் இந்தியாவிலிருந்து குடியேறிய தமிழர்களின் வழி வந்தவர்களைக் குறிக்கின்றன என்றும்,

இவர்கள் சிங்கள மன்னர்களுக்கு கட்டுப்படாமல் சுதந்திரமாக ஆட்சிபுரிந்தனர் எனவும் குறிப்பிட்டுள்ளார் (பார்க்க: வேங்கடசாமி 1983: 610). தமிழ் நாட்டின் பெரும்பாலான பிராமிக் கல்வெட்டுக்கள் பாண்டி நாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட போதிலும், அக்கல்வெட்டுக்கள் எதிலும் இடம்பெறாத மீன் சின்னம் இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் இடம்பெற்றிருப்பது ஒரு காலத்தில் பாண்டி நாட்டிலிருந்து குடியேறிய தமிழ் மக்கள் தமது குலமரபை நினைவுபடுத்தும் வகையில் தாம் வெளியிட்ட கல்வெட்டுக்களில் மீனைப் பயன்படுத்தினர் எனக் கூறலாம். இதையே நாணயத்தில் மீனைக் குறிக்கும் மஜி என்ற பெயர் பொறிக்க காரணம் எனலாம்.

நாணயம் 10(நூல் இலக்கம் A3)



தென்னிலங்கையில் *குதஹ* என்ற பெயரில் நாணயங்களும், நாணய அச்சுக்களும் ஏனைய நாணயங்களைவிட எண்ணிக்கையில் சற்றுக் கூடுதலாகக் கிடைத்துள்ளன (Bopeara chchi 1999:Nos 2.3.4). இலக்கிய நடையில் இரட்டிக்கும் ஒற்றுக்கள் தமிழ்ப் பிராமி வாசகங்களில் பெரும்பாலும் ஒற்றையாகவே வரும் (மகாதேவன் 2000:117). இதனால் நாணயத்தில் வரும் குதஹ என்ற பெயரைப் பொப்பியாராச்சி குத்தஹ என எடுத்துக் கொள்வது பொருத்தமாகும். இப்பெயர் முதன்முதலாகப் பாளி இலக்கியங்களில் தமிழ் மன்னனுக்குரிய பெயராகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இலங்கையின் முதல் வரலாற்று இலக்கியமான மகாவம்சம் என்ற நூல் வெளிநாட்டிலிருந்து குதிரைகளைக் கொண்டு வந்து விற்பனை

செய்யும் கப்பல் தலைவனின்(நாவாய்) பிள்ளைகளான *சேன, குத்தக* என்ற தமிழர்கள் அநுராதபுரத்தில் ஆட்சி செய்து கொண்டிருந்த சூரதீசனை வெற்றி கொண்டு 22வருடங்கள் (கி.மு.177-155) நீதி தவறாது ஆட்சி புரிந்தான் எனக் கூறுகிறது (XXI:10-11). இதில் வரும் *குதக* என்ற பெயர் சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்கள் பலவற்றில் வருகின்றது (Paranavi thana 1970:Nos 43. 143.177.617.646. 828.842). இவற்றில் பெரும்பாலான கல்வெட்டுக்களில் இப்பெயருக்குரிவன் குடும்பத் தலைவனாகவே குறிப்பிடப்பட்டுள்ளான். இவற்றில் இருந்து இப்பெயர் பண்டைய இலங்கையில் பரந்த அளவில் புழக்கத்தில் இருந்தமை தெரிகிறது. இப்பின்னணியில் ஒரு நாணயத்தில் காணப்படும் பெயர் தமிழரோடு தொடர்புபடுத்திப் பார்க்கலாம்.

இந்நாணயம் 3.85 கிராம் நிறையும், 18 மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் இடப்புறம் நோக்கிய நிலையில் யானை உருவமும், பின்புறத்தில் மேலே விளிம்பையொட்டி சுவஷ்திகா சின்னமும். கீழே விளிம்போடு ஒரு சின்னமும் உள்ளது. இது பிறைச் சந்திரன் என எடுக்கப்பட்டுள்ளது (Bopearachchi 1999:51). ஆனால் இதை நந்தி பாதமாக அல்லது "ம" என்ற பிராமி எழுத்தை ஒத்த குறியீடாகக் கருதலாம். இவ்விரு சின்னங்களையும் அடுத்து நான்கு பிராமி எழுத்துக்கள் உள்ளன. அவ்வெழுத்துக்கள் *குதஹ* என வாசிக்கப்பட்டு "ஹ"வுக்கு அருகில் உள்ள எழுத்தை மீன் சின்னமாக எடுக்கப்பட்டுள்ளது. இந்நாணயத்தில் காணக்கூடிய சிறப்பு இதன் முன்புறத்தில் யானையும், பின்புறத்தில் மீன் சின்னமும் இடம்பெற்றிருப்பதாகும். இச்சின்னங்கள் பெரும்பாலும் சங்க காலப் பாண்டிய நாணயங்களில் இடம் பெற்றுள்ளன. பொபிஆராச்சி இதில் உள்ள யானையின் வடிவம் சங்க காலப் பாண்டிய நாணயங்களை ஒத்ததென்பதற்கு இரா.கிருஷ்ணமூர்த்தியின் நூலைச் சான்றாதாரமாகக் காட்டுகிறார் (Bopearachchi 1999:51). இந்த ஒற்றுமையின் அடிப்படையில் இந்நாணயத்தை இங்கு வாழ்ந்த தமிழர்கள் பாண்டி நாட்டுடனான பூர்வீகத் தொடர்புகாரணமாக

இச்சின்னங்கள் பொறித்த நாணயத்தை வெளியிட்டனர் எனக் கூறலாம்.

## நாணயம் 11 (நூல் இலக்கம் A26)

இந்நாணயம் 1.93 கிராம் நிறையும், 18 மில்லி மீட்டர் விட்டமும் உடையது. இதன் முன்புறத்தில் வண்டிச் சக்கரம் போன்ற அலங்கார வடிவமும், பின்புறத்தில் விளிம்பையொட்டி வட்டமாகப் பிராமி எழுத்துக்களும் உள்ளன. இதிலுள்ள எழுத்துக்களைப் பொபிஆராச்சி *திச$_0$ புத வ ணகர சந* (tiSa puta - - va nakara cana) எனவாசித்துள்ளார். இதில் முதலிரு எழுத்துக்களையும் *திச$_0$* எனவும் அடுத்த இரு எழுத்துக்களையும் புர எனவும் வாசிக்க முடிகிறது . ஆனால் அடுத்து "வ" என வாசிக்கப்பட்ட எழுத்தை "சா" அல்லது "தா" எனவும் அடுத்த எழுத்தை "ட" என வாசித்து இதைச் சாட அல்லது தாட என எடுக்கலாம். அடுத்து ணகர ரசங் என வாசிக்கப்பட்ட எழுத்துக்களை ணாகா(ர)ச(ங்)ன் வாசிக்கலாம். இதில் ணாக என்ற பெயர் அப்படியே தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களிலும் வருகின்றது. ரசங் என வாசிக்கப்பட்டதை ரசன் என எடுக்கலாம். இதில் "ன்" என்ற எழுத்திற்குப் பதிலாக "ங்" என்ற எழுத்து தொடக்க காலப் பிராமிக் கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்பட்டதையும், அவற்றை "ன்" என வாசிப்பட்டதையும் ஏற்கனவே கூறியுள்ளோம். இதில் ரா(ர)சன் என்பது ராஜ என்ற வடமொழிச் சொல்லின் தமிழ் வடிவமாகும், இவற்றிலிருந்து இந்நாணய எழுத்துக்களை *திஸபுர சடணாக ராசன்* அல்லது *திஸபுரதடணாகராசன்* என என எடுக்க இடமுண்டு. இதற்கு சிவபுர அதாவது திச$_0$ புரத்தைச் சேர்ந்த சட அல்லது தட ணாகராசனின் நாணயம் என்பது பொருளாகும். இலங்கைப் பிராமிக்கல்வெட்டுக்களில் சடநாக என்ற பெயர் பல இடங்களில் வருகின்றது (Paranavithana 1970:108). அப்பெயரின் இன்னொருவடிவமாக நாணயத்தில் வரும் இப்பெயரைக் குறிப்பிடலாம். இந்நாணயத்தில் பிராகிருதமும் தமிழும் கலந்திருப்பதால் இதை இரு மொழிக் கலப்புள்ள நாணயம் எனக் கூறலாம். இதில் ராசன் என

எடுக்கப்பட்ட சொல் சங்க இலக்கியத்தில் காணப்பட்டாலும் (ஆரிய அரசன் யாழ்பிரமதத்தன், புறம் 227), தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் வழக்கில் இருந்ததற்கு இதுவரை சான்றுகள் இல்லை. ஆனால் சமகாலத்தில் ஆந்திராவில் வெளியிட்ட ஒரே நாணயங்களில் மன்னனின் பெயர் தமிழ் மற்றும் பிராகிருத மொழிகளில் வெளியிடப்பட்டிருப்பதுடன், அரசனைக் குறிக்கும் *ராஜோ* என்ற பிராகிருதச் சொல்லுக்கு *அரசன்* என்ற தமிழ்ச் சொல் பயன்படுத்தப்பட்டதையும் அதில் காணமுடிகிறது (Panneerselvam 1969:286). இவற்றின் அடிப்படையில் மேற்குறித்த நாணயத்தில் வரும் பெயரை திச$_0$புரத்தைச் சேர்ந்த சடணாகராசன் என்பவன் வெளியிட்டது எனக் கூறலாம். (படம்–11 பார்க்க பக்.41) சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களில் *நகர, புர* என்ற பின்னொட்டுச் சொற்கள் ஆட்பெயர்களுடன் இணைந்து இடப்பெயராக இருந்ததற்குப் பல சான்றுகள் உண்டு (Paranavi thana1970:112-115). இதில் திச$_0$புர என்ற இடம் இலங்கையில் எங்கிருந்தது என்பது தெரியவில்லை.

நாணயம் 12



தென்னிலங்கையில் கிடைத்தது போன்ற பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்கள் வடஇலங்கையில் பல ஆண்டுகளுக்கு முன்னர் கண்டுபிடிக்கப்பட்ட போதிலும் அவற்றைக் கண்டுபிடித்த நாணயவியலாளர் அதிலுள்ள எழுத்துக்கள் பற்றி எதுவுமே தனது நூலில் குறிப்பிடப்படவில்லை. ஆனால் அதற்குரிய புகைப்படங்களை

நூலில் பிரசுரித்துள்ளார் (Seyon 1998: 84). ஆனால் புகைப்படங்கள் தெளிவற்றிருப்பதுடன் புகைப்படத்தில் உள்ள உருவங்கள் தெளிவு பெறுவதற்காக கோடிட்டுப் பின்னர் பிரசுரிக்கப்பட்டிருப்பதால் நூலில் உள்ள எழுத்துக்களின் சரியான வடிவங்கள் மாறியுள்ளன. இருப்பினும் ஒரு புகைப்படத்தில் உள்ள எழுத்துக்கள் தெளிவாக இருப்பதால் அதை மட்டும் இங்கு குறிப்பிடலாம்.

இது 32கிராம்நிறையுடைய ஈய நாணயமாகும். இதன் எழுத்தமைதி கொண்டு இந்நாணயம் கி.மு.2,1 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததெனக் கூறலாம். நாணயத்தின் முன்புறத்தில் சிவலிங்கம் இருப்பதாக இந்நாணயத்தைக் கண்டுபிடித்த ஆசிரியர் சேயோன் குறிப்பிடுகிறார் (1998: 84). ஆனால் அதை ஸ்ரீவத்ஸா எனக் கூறுவதே பொருத்தமாகும். இவ்வடிவத்தை சங்ககாலப் பாண்டியர் வெளியிட்ட நாணயங்களில் சிறப்பாகக் காணமுடிகிறது. இதற்கு இடப்புறத்தில் வலப்புறம் நோக்கிய நிலையில் மயில் ஒன்று காணப்படுகிறது. வலப்புறத்தில் மனிதன் போன்ற உருவம் இருப்பதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். நாணயத்தின் பின்புறத்தில் விளிம்பை ஒட்டி ஒரு மிருகத்தின் தலை காணப்படுகிறது. இதன் இடது, வலது புறமாக ஏழு பிராமி எழுத்துக்கள் காணப்படுகின்றன. அதில் மூன்று எழுத்துக்கள் தெளிவற்றுள்ளன. ஏனைய எழுத்துக்களை *உதிஹபான்* என வாசிக்கலாம். ஆனால் ஆறுமுக சீதாராமன் இதை *உதிபன்* என வாசிக்கிறார். வாசிப்பில் வேறுபாடுகள் காணப்பட்டாலும் நாணயத்தில் வரும் பெயரின் இறுதி "அன்" என்ற விகுதியோடு முடிவதால் இது ஒரு தமிழ்ப் பெயர் என்பது தெளிவாகிறது. அண்மையில் இதே வட்டாரத்தில் களவாய்வை மேற்கொண்ட கிருஷ்ணராஜா பிராமி எழுத்தில் *சிவ* என்ற பெயர் பொறித்த நாணயம் ஒன்றைக் கண்டுபிடித்ததாக தனது நூலில் குறிப்பிட்டுள்ளார் (1998:51-2). நாணயத்தின் புகைப்படமோ பிற விபரங்களோ நூலில் கொடுக்கப்படாததால் மேலும் விபரங்களைக் கொடுக்க முடியவில்லை. *சிவ* என்ற பெயரில் சில நாணயங்கள் தென்னிலங்கையில் கிடைத்துள்ளன (Bopearachchi 1999: Nos A13, A14). இப்பெயரில் பண்டைய

கால இலங்கையில் தமிழர்கள் வாழ்ந்ததற்குச் சில சான்றுகள் பாளி இலக்கியங்களில் உண்டு (M.V.XXXV:46-48). சிவ என்ற பெயர் சிவ வழிபாட்டுடன் அப்பெயருக்குள்ளவனுக்குரிய தொடர்பைக் காட்டுவதாகக் கூறப்படுகிறது. இதை உறுதிப்படுத்தும் வகையில் தென்னிலங்கையில் கிடைத்த ஸிவ என்ற பெயர் கொண்ட நாணயத்தின் முன்புறத்தில் சிவனுக்குரிய நந்தி பாதம் காணப்படுகிறது (Bopearachchi 1999: Nos A13).

## நாணயங்களும் மக்களும்

இதுவரை கூறப்பட்டவற்றிலிருந்து கி.மு.2ஆம் நூற்றாண்டு முதல் தமிழ் எழுத்துப் பொறிப்புள்ள நாணயங்கள் இலங்கையில் பயன்பாட்டிலிருந்தமை தெரிகிறது. ஆனால் இவற்றை வெளியிட்டவர்கள் இலங்கைத் தமிழர்களா? அல்லது தமிழகத்தைச் சேர்ந்த தமிழர்களா? என்பதில் வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. இவற்றை இலங்கையில் பண்டு தொட்டு வாழ்ந்து வந்த தமிழர்களே வெளியிட்டார்கள் என்பதற்கு நாணயங்களில் உள்ள எழுத்துக்களுக்குரிய ஒலிப்பெறுமானத்தை அப்படியே கொடுத்து சமகாலத்தில் இலங்கையில் பயன்பாட்டிலிருந்த கல்வெட்டுக்களோடு தொடர்பு படுத்துகிறேன். ஆனால் மகாதேவன் அவர்கள் தமிழகத்தைச் சேர்ந்த தமிழர்களே வெளியிட்டார்கள் என்பதற்குத் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களிலும், சங்க இலக்கியத்திலும் வரும் பெயர்களை நாணயங்களில் வரும் எழுத்துக்களுடன் தொடர்புபடுத்திப் பார்க்கிறார். இங்கே எழுத்துக்களைக் கொண்டு பெயர்களை வாசிப்பதா? அல்லது ஏற்கனவே அறியப்பட்ட பெயர்களைக் கொண்டு நாணயங்களில் உள்ள எழுத்துக்களை வாசிப்பதா? என்ற கேள்வியும் தொக்கி நிற்கின்றது.

இந்த இடத்தில் அக்குறுகொட என்ற இடத்தில் கிடைத்த நான்கு தமிழ் நாணயங்கள் தொடர்பாக மகாதேவன் அவர்கள் எழுதிய கட்டுரைகளில் கூறிய முக்கிய கருத்துக்கள் நோக்கத்தக்கன.

*நாணயங்களில் உள்ள பெயர்கள் "அன்" என்ற விகுதியில் முடிவதால் இவை அனைத்தும் தமிழ்ப் பெயர்களாகும். அத்துடன் தமிழ்ப் பிராமிக்கே சிறப்பான "னகரம்" நான்கு நாணயங்களிலும் காணப்படுகிறது. தமிழ் நாட்டில் இதுவரை கிடைத்த இரு பாண்டியப் பெருவழுதி நாணயங்களைப் போல் இவையும் கி.மு.2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தொடக்க கால நாணயங்களாகக் கூறமுடியும். இந்நாணயங்களிலிருந்து தென்னிலங்கையில் குடியேறிய தமிழ் வணிகக் குழுக்கள் இலங்கையின் பிறவட்டாரங்களுக்கும், வெளிநாடுகளுக்கும் இங்கு கிடைத்த நவரத்தினக் கற்களையும், அவற்றிலிருந்து பெறப்பட்ட பாசி மணிகளையும் ஏற்றுமதி செய்தனர் என்பதையும், தமிழ் மொழியில் தங்கள் பெயரில் நாணயங்கள் வெளியிடும் உரிமையைத் தென்னிலங்கையில் குடியேறியிருந்த வணிகக் குழுக்களின் தலைவர்கள் பெற்றிருந்தனர் என்பதும் ஒரு சிறப்பான செய்தியாகும்* (மகாதேவன் 2000).

ஆனால் இந்நாணயங்களை தமிழ் நாட்டிலிருந்து குடியேறிய வணிகக் குழுக்கள் வெளியிட்டவை எனக் கூறும் போது சில ஐயப்பாடுகள் எழுகின்றன. தமிழ் நாட்டில் இதுவரை கிடைத்த காலத்தால் முந்திய தமிழ் நாணயங்கள் சங்க கால முவேந்தராலும், மலையமான் போன்ற குறுநில மன்னர்களாலும் வெளியிடப்பட்டவை. அவற்றுள் எழுத்துப் பொறிப்புள்ள தமிழ் நாணயங்களை பாண்டிய, சேர மன்னர்கள் மட்டுமன்றி மலையமான் போன்ற குறுநில மன்னர்களும் வெளியிட்டுள்ளனர் என்ற கருத்துக் கூறப்படுகிறது (Krishnamurthy 1997). ஆனால் எந்த இடத்திலும் வணிகக் குழுக்கள் அல்லது பிற தலைவர்கள் தமிழ் நாட்டில் நாணயங்களை வெளியிட்டதற்கு இது வரை சான்றுகள் கிடைக்கவில்லை. அப்படியிருக்கும் போது இலங்கையில் குடியேறிய தமிழ் நாட்டு வணிகக் குழுக்கள் நாணயங்களை வெளியிட்டார்கள் எனக் கூறுவது தமிழகப் பின்னணியில் பொருத்தப்பாடாக இல்லை. இவர்களே நாணயங்களை வெளியிட்டிருந்தால் சமகாலத்தில் தமிழகத்தில் வழக்கிலிருந்த சங்க கால நாணய மரபின் செல்வாக்கு இலங்கையில் வெளியிடப்பட்ட

நாணயங்களிலும் இருந்திருக்கும். ஆனால் அப்படிக் குறிப்பிட்டுக் கூறக் கூடிய அம்சத்தை சிறப்பாக வடிவமைப்பில் காணமுடிய வில்லை. மாறக இத்தமிழ் நாணயங்களுக்கும் பிராகிருத மொழிப் பெயர்கள் கொண்ட நாணயங்களுக்கும் இடையே ஒரே நாணய மரபு எனக் கூறக்கூடிய வகையில் ஒற்றுமை காணப்படுகிறது. குறிப்பாக நாணயங்களில் சுவஷ்திகா சின்னத்தைப் பொறிக்கும் மரபு இந்தியாவின் பண்டைய நாணயங்கள் பலவற்றில் காணப்படுகிறது. ஆனால் பீடத்துடன் கூடிய சுவஷ்திகாவை இலங்கையில் கிடைத்த நாணயங்களில் மட்டுமே காணமுடிகிறது. இது இலங்கைக்கே உரிய தனித்துவமான அம்சம் என்று கூறலாம். இதன் தொடக்கம் இலங்கையின் பெருங்கற்கால மட்பாண்டங்களிலும், பிராமிக் கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றது. சமகால தமிழக மற்றும் இந்தியப் பெருங்கற்கால மட்பாண்டங்கள், கல்வெட்டுக்களில் இவற்றைக் காணமுடியவில்லை. இவற்றிலிருந்து மேற்குறிப்பிட்ட தமிழ் நாணயங்கள் இலங்கைக்குரிய நாணய மரபை அடிப்படையாகக் கொண்டு வெளியிடப்பட்டவை என்பதை உறுதிபடக் கூறமுடிகிறது.

இலங்கையின் ஆரம்ப கால வெளிநாட்டு வர்த்தகம் தமிழகத்துடன் இணைந்த நிலையிலேயே வளர்ச்சியடைந்தன என்பதற்குப் பாளி இலக்கியங்களிலும், பிராமிக் கல்வெட்டுக்களிலும் பல சான்றுகள் உள்ளன. தொலமி என்ற வெளிநாட்டு யாத்திரிகர் தனது நூலில் கி.பி.1ஆம் நூற்றாண்டு வரை ரோமர் இலங்கை செல்லாமலே இலங்கைப் பொருட்களைத் தென்னிந்தியத் துறைமுகங்களில் பெற்றதாகவும், அதே போல் இலங்கைக்குத் தேவையான ரோமப் பொருட்களை வர்த்தகர்கள் தென்னிந்தியத் துறைமுகங்களில் பெற்றுத் திருப்தியடைந்ததாகவும் குறிப்பிட்டுள்ளார் (Warmington 1928:63). இவ்வர்த்தகத்தில் இலங்கை, ஆந்திர வணிகர்களுடன் தமிழ் நாட்டு வணிகர்களும் இடைத் தரகர்களாகச் செயல்பட்டதற்குப் பல சான்றுகள் உண்டு. தமிழகத்தை அடுத்து கூடுதலான சங்க கால நாணயங்கள் இலங்கையில் கிடைத்து வருவதற்கு இவ்வர்த்தகத் தொடர்புதான் முக்கிய காரணம் எனக்

கூறலாம். ரோம நாட்டுடன் தமிழகத்திற்கு ஏற்பட்ட நெருக்கமான வணிகத் தொடர்பால் ரோம நாணயகள் தமிழ் நாட்டு அக்கசாலையில் வெளியிடப்பட்டன. இலங்கையில் கிடைத்த காலத்தால் முந்திய ரோம நாணயங்கள் தமிழகத்தில் வெளியிடப்பட்டவை. இவை தமிழ் நாட்டு வணிகர்களால் இங்கு கொண்டு வரப்பட்டவையாக இருக்கலாம். இதற்கு ரோம நாட்டுடனான இலங்கையின் ஆரம்ப கால வர்த்தகம் தமிழகத்துடன் இணைந்து வளர்ச்சியடைந்ததே காரணமாகும். இவ்வாறு தமிழகத்தில் வெளியிடப்பட்ட நாணயங்கள் சமகாலத்தில் இலங்கையில் கிடைக்கும் போது, வெளிநாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்ட தமிழ் நாட்டு வணிகக் குழுக்களே மேற்கூறப்பட்ட தமிழ் நாணயங்களை இலங்கையில் வெளியிட்டிருந்தால் அவை தமிழகத்திலும் கிடைத்திருக்க வாய்ப்புண்டு. ஆனால் இதுவரை இவ்வகையைச் சேர்ந்த ஒரு நாணயமாவது தமிழகத்தில் கிடைத்ததற்குச் சான்றில்லை. அப்படியிருக்கும் போது எப்படி இந்நாணயங்களை தமிழ் நாட்டு வணிகக் குழுக்களுடன் தொடர்புபடுத்தலாம் என்பது தெரியவில்லை. ஆகவே இவற்றை இலங்கைத் தமிழர்களே வெளியிட்டிருக்கலாம் என்பதற்கும், அவை ஏன் இலங்கைக்குள் மட்டும் பெரும்பாலும் புழக்கத்தில் இருந்தன என்பதையும் கண்டறிய வேண்டியுள்ளது. அதற்கு முன்னோடியாக அவற்றைத் தமிழகத்துடன் தொடர்புபடுத்துவதற்கான வரலாற்றுப் பின்புலத்தையும் நோக்க வேண்டியுள்ளது.

இலங்கைப் பிராமி எழுத்து, மொழி பற்றி தமிழ் நாட்டு அறிஞர்களிடையே வேறுபட்ட வரலாற்று அணுகு முறைகள் காணப்படுகின்றன. அண்மைக்காலத்தில் தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளின் போது பிராமி எழுத்துப் பொறித்த மட்பாண்ட ஓடுகளில் பிராகிருதம் மற்றும் தமிழ் பெயர்கள், சொற்கள் பெறப்பட்டுள்ளன. இவற்றில் உள்ள பிராகிருதப் பெயர்கள், சொற்களை இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களுடன் தொடர்புபடுத்தி சிங்களப் பிராமி எனப் பெயரிடப்பட்டுள்ளது (Mahadevan 1994:1-19, 1996:287-315, 2000:116-120, இராஜவேலு 1994:154). ஆனால்

அதேகாலகட்டத்திற்குரிய மட்பாண்டங்களில் வரும் தமிழ்ப் பெயர்களை இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களுடன் தொடர்புபடுத்தி இலங்கைக்குரிய தமிழ்ப் பெயர்களாகக் கூறுவதில்லை. மாறாகத் தமிழகத்தில் வழக்கிலுள்ள பெயராகப் பார்க்கப்படுகிறது. இதற்கு அரிக்கமேட்டில் பெறப்பட்ட மட்பாண்ட எழுத்துக்களைக் குறிப்பிடலாம் (Mahadevan 1996:287-315). ஆனால் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் பிராகிருதப் பெயர்கள், சொற்கள் வரும் போது அவற்றைச் சிங்கள பிராமி எனவோ அல்லது தமிழ் மயப்படுத்தப்பட்ட சிங்களப் பெயராகவோ கூறுவதில்லை. மாறாக தமிழ் மயப்படுத்தப்பட்ட பிராகிருதமாகப் பார்க்கப்படுகிறது. குறிப்பாக இலங்கையில் பெரிதும் வழக்கிலிருந்த *கஸப* என்ற பெயர் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் கசபன், காசிபன் என வருவதை இங்குகுறிப்பிடலாம் (Mahadevan 1966:Nos.40, 29). இந்நிலையில் இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் தமிழருக்குரிய பெயராகக் கூறப்படும் பிராகிருதப் பெயர்களை ஒத்த சில பெயர்கள் தமிழக மட்பாண்டங்களில் கிடைத்த போது அப்பெயர்கள் இலங்கைத் தமிழரைக் குறிக்கிறதா? அல்லது தமிழ் நாட்டுத் தமிழரைக் குறிக்கிறதா? என்பதைக் கண்டறிவதில் மௌனம் சாதிக்கப்படுகிறது. மாறாக இலங்கைப் பிராமிக் கல்வெட்டுகளில் வரும் தமிழரோடு தொடர்புடைய செய்திகளைத் தமிழ் நாட்டுக்குரிய சான்றுகளாக நோக்கப்படுகிறது. இவ்வரலாற்றுப் பார்வை இலங்கை மண்ணோடு ஒட்டிய இலங்கைத் தமிழரின் பூர்வீக வரலாற்று உண்மைகள் மேலும் தொய்ந்து போவதற்குக் காரணமாக அமைகின்றன. இந்நிலையில் மேற்கூறப்பட்ட நாணயங்களை இலங்கைத் தமிழர்களே வெளியிட்டார்கள் என்பதற்கு இலங்கைத் தமிழர் தொடர்பான சில சான்றுகளைக் குறிப்பிடுவது அவசியமாகிறது.

இலங்கையில் வாழ்ந்து வரும் சிங்கள மக்களின் மூதாதையினர் கி.மு.6ஆம் நூற்றாண்டில் வடஇந்தியாவிலிருந்து வந்து குடியேறியவர்களின் வழித்தோன்றல்கள் எனவும், தமிழர்க்ள் பிற்காலத்தில் தமிழ் நாட்டிலிருந்து வர்த்தகர்களாக,

படையெடுப்பாளர்களாக வந்து குடியேறிய சிறுபிரிவினர் எனவும் கட்டிக் காக்கப்பட்ட இரண்டாயிரம் ஆண்டுகாலப் பாரம்பரிய வரலாற்று நம்பிக்கை அண்மைக்காலத் தொல்லியல் ஆய்வுகளின் மூலம் சிங்கள அறிஞர்களே மறு ஆய்வு செய்ய முற்பட்டுள்ளனர். இதுவரை கிடைத்த நுண்கற்கால (Mesolithic Culture), பெருங்கற்காலச் (Megalithic Culture) சான்றுகள் கி.மு.28000 ஆண்டுகளில் இருந்து தென்னிந்தியா குறிப்பாக தமிழகத்தில் இருந்து மக்கள் காலத்திற்கு காலம் புலம்பெயர்ந்திருக்கலாம் என்பதைக் கோடிட்டுக் காட்டுகின்றன (Goonetilleke 1980:22-29, Sitrampalam 1980, Seneviratne1984:237-307, Ragupathy 1987). இப்பண்பாட்டு வழிவந்த மக்களில் ஒரு பிரிவினர் கி.மு.3ஆம் நூற்றாண்டில் இந்தியாவிலிருந்து பௌத்த மதம் அறிமுகமாகிய போது அம்மதத்திற்கு மாறினர் மற்றும் ஆதரித்தனர் என்பதை இப்பண்பாட்டுமையங்களை அண்டிக் காணப்பட்ட 2000ற்கு மேற்பட்ட பிராமிக் கல்வெட்டுகள் உறுதிப்படுத்துகின்றன (Paranavithana 1970,1983). இம்மதத்துடன் வடபிராமி எழுத்தும், பாளி, பிராகிருத மொழியும் அறிமுகமாகியதை இக்கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன. இம்மொழிகள் ஏற்கனவே புழக்கத்தில் இருந்த மொழிகளுடன் கலந்தே பிற்காலத்தில் சிங்கள மொழி தோன்றியதென்பது அறிஞர்களின் கருத்தாகும்.

ஆனால் பௌத்த மதத்துடன் வடபிராமி அறிமுகப்படுத்தப் படுவதற்கு முன்னரே தமிழ்ப் பிராமி புழக்கத்தில் இருந்ததற்குச் சான்றுகள் உண்டு (Karunaratne 1960). இதன் பயன்பாடு வடபிராமியின் செல்வாக்கால் படிப்படியாக குறைவடைந்து சென்றாலும் அது முற்றாக மறையவில்லை என்பதை இலங்கை, தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களிடையே காணப்படும் ஒற்றுமைகள் உறுதிப்படுத்துகின்றன. இந்தியாவில் வடபிராமி எழுத்துக்கள் கல்தூண்களிலும், பாறைகளிலும் பல வரிவடிவங்கள் கொண்டதாக எழுதப்பட்டன. ஆனால் இலங்கையிலும் தமிழகத்திலும் ஒரே பிராந்தியத்திற் குரியதெனக் கருதும் அளவிற்கு சமயத் துறவிகளின் குகைகளில் ஒரிரு வரிகளில் எழுதப்பட்டுள்ளன. வடபிராமியில்

கூட்டெழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டன. ஆனால் இம்மரபு இலங்கையிலும் தமிழகத்திலும் பின்பற்றப்படவில்லை. தமிழ்ப் பிராமியில் பயன்படுத்தப்பட்ட அ, இ, க, ம, ர, ப,ல, வ, போன்ற எழுத்துக்களின் வடிவமைப்பு இலங்கைப் பிராமிக் கல்வெட்டு எழுத்துக்களுடன் பொதுத் தன்மை கொண்டு காணப்படுகின்றன (Pernando 1949:282-301). இவற்றைவிட தமிழ் மொழிக்கே உரிய ள, ழ, ற, ன போன்ற எழுத்துக்கள் சமகாலத்தில் இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களிலும் பயன்படுத்தப் பட்டுள்ளமை சிறப்பாகக் கவனத்தில் கொள்ளத்தக்கது.

கல்வெட்டு மொழியைப் பொறுத்தவரை பௌத்த மதம் பரவிய இடங்களிலெல்லாம் பிராகிருதமே கல்வெட்டு மொழியாக இருந்துள்ளது. ஆனால் இலங்கையின் கல்வெட்டு மொழியாகப் பிராகிருதம் இருந்த போதிலும் அதில் தமிழ் மொழியின் செல்வாக்கை நான்கு அம்சங்களில் காணமுடிகிறது. 1) தமிழ்ச் சொற்கள் அப்படியே கல்வெட்டுக்களிலும் எழுதப்பட்டுள்ளன. இதற்கு குடா, குடி, வேள், ஆய், பரத, மகள், மருமகன், மருமான், மருக போன்றனவற்றைக் குறிப்பிடலாம். 2) சில தமிழ்ப் பெயர்கள் பிராகிருதப்படுத்தப் பட்டுள் ளன. இதற்கு பருமக (பெருமகன்), பெருமகள் (பருமகள்) உதிய (உதியன்), சுட, சுள (சோழ) போன்றனவற்றை உதாரணங்களாகக் குறிப்பிடலாம். 3) பிராகிருத மற்றும் வடமொழிச் சொற்கள் தமிழ்மயப்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக நகர் (நஹர), நாக(நாஹ), விகார (விஹர), பூசிய (பூஜிய) என்பவை குறிப்பிடத்தக்கன (புஷ்பரட்ணம் 2000:1-41). தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் சில பிராகிருத சொற்களுக்குரிய எழுத்துக்கள் வடபிராமியில் எழுதப்பட்டிருக்கும் போது இலங்கையில் அவை தமிழ் மயப்படுத்தப்பட்டுள்ளன. உதாரணாக தமிழ் நாட்டில் ஆஸிரிய என்ற பெயரில் வடபிராமி "ஸி" பயன்படுத்தப்பட்டிருக்கும் (Mahadevan 1966:No.1) போது இலங்கைப் பிராமிக் கல்வெட்டில் இப்பெயரில் தமிழுக்குரிய "சி" பயன்படுத்தப்பட்டிருப்பதை குறிப்பிடலாம் (I.C.1970No.75).

தமிழ் மொழியின் தொடக்க காலக் கல்வெட்டுச் சான்றாக தமிழ் நாட்டில் உள்ள பிராமிக் கல்வெட்டுக்கள் கூறப்படுகின்றன. இவற்றின் தொடக்க காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டெனக் கணிப்பி டப்பட்டுள்ளது. இங்கே எழுத்தும், மொழியும் சமகாலத்தில் தோன்றியிருக்க முடியாது. இதனால் எழுத்துக்கள் தோன்றுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் மொழியிருந்ததெனக் கூறலாம். குறிப்பிட்ட எழுத்தும், மொழியும் கல்வெட்டுக்களில் இடம்பெறுவதற்கு அம்மொழி பேசிய மக்கள் வாழ்ந்ததே காரணமாகும். இலங்கையில் தமிழ்ப் பிராமியும், தமிழ் மொழியும் பிராமிக் கல்வெட்டுக்களில் வந்துள்ளமை இங்கு கல்வெட்டுக்கள் தோன்றும் முன்னரே தமிழ் மொழி பேசிய மக்கள் வாழ்ந்ததைக் காட்டுகின்றன. இவற்றிலிருந்து நாணயங்கள் தோன்றும் முன்னரே தமிழர்கள் இலங்கையில் வாழ்ந்து வந்துள்ளனர் எனக் கூறலாம்.

இந்த இடத்தில் இலங்கை நாணயங்களிலும், கல்வெட்டுக்களிலும் வரும் பிராமி எழுத்தை இலங்கை அறிஞர்கள் சிலரைப் போல் தமிழ் நாட்டு அறிஞர்களும் சிங்களப் பிராமி எனக் கூறுவது எந்தளவுக்குப் பொருத்தம் என்பதும் ஆராய்ந்து பார்க்கப்பட வேண்டியுள்ளது. முன்னர் குறிப்பிட்டது போல் பௌத்த மதம் பரவிய வட்டாரங்களில் எல்லாம் பிராகிருதமே கல்வெட்டு மொழியாக இருந்துள்ளது. இதற்கு தமிழ் நாடு விதிவிலக்காக இருந்த போதிலும் அங்கும் பல பிராகிருதச் சொற்களைக் காணலாம். ஆந்திராவிலும், கர்நாடகத்திலும் சுதேச மொழிகள் இருந்தும் அங்கு கி.பி.5ஆம் நூற்றாண்டு வரை பிராகிருதமே கல்வெட்டு மொழியாக இருந்துள்ளது (Ragupathy 1991). ஆனால் அரிதாகச் சில சுதேச மொழிச் சொற்களைக் காணமுடிகிறது. இலங்கையைப் பொறுத்தவரை பிராகிருதம் கல்வெட்டு மொழியாக இருந்தும் ஐம்பது விழுக்காட்டிற்கு மேல் தமிழ் மொழிப் பெயர்கள், சொற்கள் கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும். தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்கள் தமிழ்ப் பிராமி என அழைக்கப்பட்ட அவை தமிழ் மொழியில் எழுதப்பட்டமை காரணமாகும்.

இலங்கைப் பிராமிக் கல்வெட்டுகள் தமிழ் மொழியின் செல்வாக்குக்கு உட்பட்ட நிலையில் பிராகிருத மொழியில் எழுதப்பட்டவை. இப்பிராகிருதமொழி சமகாலத்தில் ஆந்திரம் மற்றும் வடஇந்திய வட்டாரத்தில் வழக்கில் இருந்த மொழிகளுடன் பொதுத்தன்மை கொண்டவை (Karunarate 1984). அவற்றுள் இருபத்தைந்துக்கு மேற்பட்ட பெயர்கள், சொற்கள் சமகாலத் தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்பட்டவற்றைப் பெருமளவு ஒத்துள்ளன (புஷ்பரட்டணம் 2000:16-24). இலங்கைக்கேயுரிய தனித்துவமான ஒருசில பெயர்கள், சொற்கள் பிராகிருதமயப்படுத்தப்பட்ட நிலையில் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. இவை ஏற்கனவே இங்கு வழக்கிலிருந்த ஒஸ்ரிக், திராவிட மொழிக்குரியவை என்பது அண்மைக்கால மொழியியல் ஆய்வுகளால் தெரியவந்துள்ளன (Gunawardhana 1973). இலங்கையில் சிங்கள மொழிக்கல்வெட் டுக்கள் கி.பி.8, 9ஆம் நூற்றாண்டின் பின்னரும், சிங்கள இலக்கி யங்கள் 12ஆம் நூற்றாண்டின் பின்னருமே தோன்றியவை என்பது பொதுவான கருத்து. இந்நிலையில் இலங்கைப் பிராமிக் கல்வெட் டுக்களை எவ்வாறு சிங்களப் பிராமி என அழைக்கலாம் என்பது தெரியவில்லை.

பிராமிக் கல்வெட்டு எழுத்திலிருந்தும், பாளி, பிராகிருத மொழிகளிலிருந்தும் பிற்காலத்தில் இலங்கையில் சிங்கள எழுத்தும், மொழியும் தோன்றி வளர்ந்தன என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவை தமிழ் மொழிவளர்ச்சிக்கும் காரணமாக இருந்துள்ளது என்பதையும் மனக்கருத்தில் கொள்ள வேண்டும். உதாரணமாக இன்று சிங்கள மொழி இடப்பெயர்களில் கணிசமானவை கம, கமுவ, நகர, புர போன்ற பின்னொட்டுச் சொற்களோடு வருகின்றன. இவை தமிழ் இடப்பெயர்களில் *கமம், காமம், நகர், புரம்* என வருகின்றன. ஆனால் தமிழர்கள் பிற்காலத்தில் வந்து இலங்கையில் குடியேறிய வர்கள் என்ற கருத்துடையோர் முன்பு சிங்கள மக்கள் வாழ்ந்த இடங்களே பின்னர் தமிழ் மயப்படுத்தப்பட்டதென்பதற்கு இப் பெயர்களையும் சான்று காட்டி வாதிடுகின்றனர் (Kannangara 1984).

ஆனால் இப்பெயர்களின் வரலாற்றைப் பின்னோக்கி ஆராய்ந்தால் அவை பிராகிருத மொழியில், *புர, நகர, கம* என இலங்கையின் பண்டையகால இடப்பெயர்களின் பின்னொட்டுச் சொற்களாக கல்வெட்டுக்களில் வருவதனைக் காணலாம் (Paranavithana 1970:CXXIV-CXXVIII). இப்பெயர்கள் இலங்கையில் மட்டுமன்றி பிராகிருதமொழி பரவிய ஆந்திரம், கர்நாடகம் போன்ற இடங்களிலும் இருந்துள்ளன. இப்பெயர்கள் அங்கும் பிற்காலத்தில் புழக்கத்தி லிருந்ததை கி.பி.10ஆம், 11ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டுக் களில் வரும் *கம, காம, புரமு, நகரு* போன்ற இடப பெயர்களிலிருந்து கண்டு கொள்ளலாம் (Ramachchandramurthy 1985:323, 283-84,224-5).

எனவே மேற்கூறப்பட்ட ஆதாரங்களிலிருந்து இலங்கையில் கிடைத்த பண்டைய தமிழ் நாணயங்களை இலங்கையில் பண்டு தொட்டு வாழ்ந்து வரும் தமிழ் மக்கள் தமிழ், பிராகிருத மொழியிலும், தமிழ்- பிராகிருத மொழிகள் கலந்த நிலையிலும் வெளியிட்டிருப்பார்கள் என்பதைக் கோடிட்டுக் காட்டுகின்றன எனலாம். ஆனால் சங்க காலத் தமிழகத்தைப் போல் தமிழ் மொழியில் நாணயங்களை வெளியிட்ட மக்கள் ஏன் பிராகிருதம் மற்றும் பிராகிருதம் தமிழ் மொழி கலந்த நிலையில் நாணயங்களை வெளிட்டார்கள் என்பதும், அவ்வகை நாணயங்கள் ஏன் தமிழகம் போன்ற நாடுகளுக்குச் சென்றடையவில்லை என்பதும் முக்கிய கேள்வியாக எழுகின்றன.

இலங்கை கி.மு.3ஆம் நூற்றாண்டு முதல் இந்திய, மேலைத்தேய நாடுகளுடனும், பிற்காலத்தில் அரேபிய, கீழைத்தேய நாடுகளுடனும் கடல் சார் வர்த்தகத்தில் ஈடுபட்டதற்கு உறுதியான பல சான்றுகள் உண்டு. இதற்கு இலங்கையின் பல வட்டாரங்களில் கிடைத்த அயல்நாட்டு நாணயங்களே சிறந்த சான்றாகும் (Codrington1924, Bopearachchi 1998,1999). இதே காலப்பகுதியில் இலங்கையில் பல வகையான நாணயங்கள் வெளியிடப்பட்டதற்கு

உறுதியான சான்றுகள் உண்டு (Bopearachchi 1998,1999). ஆனால் கி.பி.10ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை எனக் கூறக் கூடிய நாணயங்களில் லஷ்மி உருவம் பொறித்த ஒருசில நாணயங்கள் கரூரிலும் (Nagaswamy199537-39), சிங்க உருவம் பொறித்த நாணங்கள் தமிழ் நாட்டில் அரிதாகவும் (Ellot1970:153c) கிடைத்ததைத் தவிர பிற நாணயங்கள் எவையும் இலங்கைக்கு வெளியே கிடைத்ததாகத் தெரியவில்லை. இவற்றை நோக்கும் போது வெளிநாட்டு வர்த்தகத்தில் இலங்கை நாணயங்கள் அதிகம் பயன்படுத்தப்படவில்லை என்றே கருதவேண்டியுள்ளது.

ஆனால் பாளி இலக்கியங்களிலும், கல்வெட்டுக்களிலும் கி.மு.3ஆம் நூற்றாண்டு முதல் நாணயத்தின் பயன்பாடு இருந்ததற்கான சான்றுகள் தொடர்ச்சியாக உள்ளன. இச்சான்றுகள் பெரும்பாலும் வர்த்தகம் தொடர்பான நடவடிக்கைகளோடு தொடர்புபடுத்தப்படாது, பௌத்தமத நடவடிக்கைகளுடன் சிறப்பாக விகாரைகள் கட்டுவது, திருத்தி அமைப்பது, குருமாருக்கு தானம ளிப்பது போன்றவற்றிற்காகச் சமூகத்தில் உயர் நிலையில் இருந்த மக்கள் அளித்த நன்கொடை பற்றிய செய்திகளோடு தொடர்பு டையவையாகவே வருகின்றன. உதாரணமாக கி.மு.2ஆம் நூற்றாண் டில் இலங்கையில் ஆட்சி புரிந்த எல்லாளன் என்ற தமிழ் மன்னன் இடிந்து போன விகாரையைப் புதுப்பிக்க பதினையாயிரம் நாணயங்களைக் கொடுத்தான் என்ற செய்தியையும் (M.V.XXXVI:39), கிபி.2ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த ஸ்ரீநாக என்பவன் முந்நூறாயிரம் நாணயங்களைப் பௌத்த பிக்குகளுக்கு கொடுத்தான் என்ற செய்தியையும் (M V.XXI:26) எடுத்துக்காட்டலாம். அத்துடன் இக்காலப்பகுதியில் வெளியிடப்பட்ட ஏனைய சிலவகை நாணயங்களை நோக்கும் போது அவற்றின் அமைப்பு, எடை, சின்னங்கள் போன்றவை இந்திய நாணயமரபில் இருந்து பெருமளவு வேறுபட்டு ஒரு பௌத்தமதத்திற்குரிய சின்னமாகவே காணப்படுகின்றன. இதற்கு திஸ, சுவஷ்திகா-வேலியிடப்பட்ட மரம், சுவஷ்திகா-யானை, சுவஷ்திகா-சிங்கம் போன்ற சின்னங்களின் அடிப்படையில்

பெயரிடப்பட்ட நாணயங்களைக் குறிப்பிடலாம் (Codrington 1924;20.22-23). இந்த அம்சத்தை நாம் ஆய்வுககு உட்படுத்திய நாணயங்களிலும் காணமுடிகிறது. இந்த இடத்தில் சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களை நோக்கும் போது அவை அனைத்தும் பௌத்த மதத்திற்கு சமூகத்தின் பலதரப்பட்ட மக்கள் அளித்த தானங்களையே முதன்மைப்படுத்திக் கூறுகின்றன. அதில் வரும் பெயர்களில் தொண்ணூறு விழுக்காடு நாணயங்களில் வரும் பெயர்களை ஒத்துள்ளன. இவற்றின் அடிப்படையில் பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்கள் பெருமளவுக்கு பௌத்த மதத்திற்கு கொடையளிப்பதையும், உள்நாட்டு வர்த்தகத்திற்குப் பயன்படுத்துவதையும் நோக்காகக் கொண்டு வெளியிடப்பட்டதெனக் கூறலாம்.

இதில் தமிழர்கள் தமிழ் மொழியுடன், பிராகிருத மொழியிலும் நாணயங்களை வெளியிட்டமைக்கான காரணத்தை அதன் பயன்பாட்டு நோக்கத்தின் பின்னணியில் பார்க்க வேண்டும். இன்று சிங்கள மக்களில் பெரும்பான்மையோர் பௌத்தர்களாகவும், தமிழர்கள் இந்துக்களாகவும் இருப்பதைக் கொண்டு பண்டைய காலத்திலும் அவ்வாறே இருந்ததெனக் கூறமுடியாது. பௌத்த மதம் பரவ வடஇந்தியத் தொடர்பு ஒரு காரணமாக இருப்பினும் அது வளர தென்னிந்தியாவின் பங்களிப்பே அடிப்படையாக இருந்தது. அதிலும் மகாயான பௌத்தம் பரவ தமிழ் நாட்டுத் தொடர்பே முக்கிய காரணமாக இருந்தது. இதனால் தமிழ் நாட்டைப்போல் இங்கு வாழ்ந்த தமிழர்களில் ஒரு பிரிவினர் பௌத்த மதத்தைப் பின்பற்றவும், ஆதரிக்கவும் வாய்ப்பிருந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. பிராமிக் கல்வெட்டுக்களில் வரும் தமிழர்கள் பௌத்தர்களாகவும், அம்மதத்தை ஆதரித்தவர்களாகவும் குறிப்பிடப்பட்டுள்ளனர். பாளி இலக்கியங்கள் இலங்கையில் கி.மு.2ஆம்,1ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த தமிழ்மன்னர்கள் சிலர் தமது மதநம்பிக்கையைக் கைவிடாத போதிலும் பௌத்த மதத்திற்கு ஆதரவு கொடுத்ததாகக் கூறுகின்றன (M.V.XXI:1-34). கி.பி.5ஆம் நூற்றாண்டில் அநுராதபுரத்தில் பாண்டு (கி.பி.436–441), அவன் மகன் பரிந்த (441–444), இவனின் தம்பி

குட்டபரிந்த (444–460), திரிதரன், தாடிகன் (460–463), பிட்டியன் (463) ஆகிய தமிழர்கள் மாறிமாறி இருபத்தியேழு ஆண்டுகள் ஆட்சி புரிந்த போது அவர்களில் சிலர் பௌத்தர்களாகவும், பௌத்த மதத்தை ஆதரித்தவர்களாகவும் இருந்தனர். இதைத் தென்னிலங்கையில் அறகம என்ற இடத்தில் கிடைத்த பரிந்தனின் கல்வெட்டும், கதிர்காமத்தில் கிடைத்த தாடிகனின் கல்வெட்டும் கூறுகின்றன. அதேபோல் 16ஆண்டுகள் ஆட்சி புரிந்த குட்டபரிந்தனின் அநுராதபுரக் கல்வெட்டு இம்மன்னனும், மனைவியும் பௌத்த மதத்திற்கு ஆற்றிய பணிகளைக் கூறுவதுடன் இவனைப் பரிதேவன் எனவும், புத்ததாசன் எனவும் வர்ணிக் கின்றது (E.Z.IV:111-115).

இம்மன்னர்கள் தமிழராக இருந்தும் பிராகிருதத்தையே கல்வெட்டு மொழியாகப் பயன்படுத்திமை மொழிக்கும் மதத்திற்கும் இடையேயுள்ள பிணைப்பைக் காட்டுவதாக எடுத்துக் கொள்ளலாம். சங்க காலத்தில் கல்வெட்டு மொழியாக தமிழ் இருந்தும் சமண மதம் பற்றிக் கூறப்படும் இடங்களில் அம்மத மொழியான பிராகிருதமும் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆந்திராவில் சுதேச மொழியிருந்தும் இங்நாட்டையாண்ட சாதவாகனர் தமது நாணயங்களில் தமிழையும், பிராகிருதத்தையும் பயன்படுத்தினர் (Nagaswamy 1981). பல்லவர் தமிழோடு பிராகிதத்தையும், சமஸ்கிருதத்தையும் கல்வெட்டுக்களிலும், நாணயங்களிலும் பயன்படுத்தியதற்குப் பல சான்றுகள் உண்டு (Mahalingam1988). பிற்காலத் தமிழகத்தில் இரண்டு, மூன்று மொழிக்குரிய எழுத்துக்களைக் கொண்டு நாணயம் வெளியிடப்பட்டமை தெரிகிறது(சீதாராமன் 1996 : 89–97). இவை நாணயங்கள் வெளியிட்டதன் வர்த்தக நோக்கத்தையும், நாணயம் வெளியிட்டவரின் மதத்திற்கும் மொழிக்கும் இடையிலான தொடர்பைப் பொறுத்தும் அமைகின்றது. மிகச் சிறிய நாடான இலங்கையில் பௌத்த மதமும், அம்மத மொழிகளும் குறுகிய காலத்தில் பரவியபோது அம்மதத்திற்கு மாறிய தமிழர்களும், ஆதரித்தவர்களும் பௌத்த மதத்திற்கு கொடை கொடுப்பதையே முக்கிய நோக்கங்களில் ஒன்றாகக் கொண்டு

நாணயங்களை வெளியிட்டனர். அதனால் தாம் வெளியிட்ட நாணயங்களில் தமது பெயரைப் பிராகிருத மொழியில் வெளியிட்டிருப் பார்கள் எனக் கூறுவது சமகால இந்திய வரலாற்றில் நடந்த பொதுவான சம்பவத்தை நினைவுபடுத்துவதாகும். இதனால் பிராகிருத மொழிக்குரிய நாணயங்களை வெளியிட்ட அனைவரும் பௌத்தர்களாக இருந்தனர் எனக் கூறமுடியாது. சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களை ஆராய்ந்தால் பௌத்த மதம் சாராத ஏனையவர்களும் பௌத்த மதத்திற்கு கொடையளித்தது பற்றிக் கூறுகின்றன. அவற்றுள் 21 கல்வெட்டுக்கள் பிராமண சமூகத்தவர் பற்றிக் கூறுகின்றன (Paranavithana 1970:LLXVIII-LXIX). இதனால் பௌத்தமதம் சாராத தமிழர்களும் அம்மதத்திற்கு கொடையளிக்க நாணயங்களை வெளியிட்டிருக்கலாம். இதைப் பெயரடிப்படையிலும், நாணயங்களில் வரும் சின்னங்களின் அடிப்படையிலும் அடையாளம் காணமுடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1) இச்சின்னத்தை பொபி.ஆராச்சி சேவல் எனக் கூறினாலும் அதன் கொண்டை, வால்பகுதி மயில் சின்னமாகவே கருத இடமளிக்கிறது.

2) 24.3.2000 அன்று தமிழ்ப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறையில் நடந்த தென்னிலங்கையில் கிடைத்த நாணயங்கள் தொடர்பான கருத்தரங்கில் கூறப்பட்ட கருத்து.

3) நாணயத்தில் நேரில் பார்க்கும் "ஹ" என்ற எழுத்தைக் கண்ணாடியில் பார்ப்பது போல் "ல" என வாசிக்க வேண்டும் என மகாதேவன் அவர்கள் கூறினாலும் அதை "ல" என எடுத்துக் கொள்ள முடியாது. தமிழகத்தில் இதுவரை கிடைத்த கல்வெட்டுக்களிலும் சரி நாணயங்களிலும் சரி "ல" என்ற எழுத்து அரைவட்ட வடிவில் அதன் கீழ்ப்பாகம் வளைந்தே இருக்கும்.

அதன் கீழ்ப் பாகம் சதுரமாக அமையும் போது "ஹ" என்ற ஒலிப்பெறுமானத்தைப் பெறும். இதன் அடிப்படையிலேயே அழகன் குளத்தில் கிடைத்த மட்பாண்டத்தில் வரும் எழுத்து "ஹ" என எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளமையும் இங்கு நினைவுபடுத்தலாம் (Mahadevan1994c:1-19). இந்த வேறுபாட்டை இலங்கைப்பிராமிக் கல்வெட்டுக்களில் மட்டுமன்றி இங்கு கிடைத்த நாணயங்களிலும் காணலாம். மஹா என்ற முதல் எழுத்துக்களையும் மல்ல என எடுப்பதற்கு அழகர்மலைக் கல்வெட்டில் வரும் மல்ல என்ற பெயர் ஆதாரம் காட்டப்பட்டுள்ளது. ஆனால் இலங்கையில் மஹ என்ற சொல்லுடன் மல்ல என்ற சொல் கல்வெட்டுக்களில் மட்டுமன்றி நாணயங்களிலும் காணப்படுகின்றன (இதுபற்றி ஐந்தாவது நாணயத்தில் கூறப்பட்டுள்ளது). இவற்றில் "ல"வுக்கும் "ஹ"க்கும் இடையிலான எழுத்து வடிவ வேறுபாடு தெளிவாகத் தெரிகிறது. எனவே நாணயத்தில் வரும் முதலிரு எழுத்துக்களை மல்ல என வாசிப்பதைவிட மஹா என வாசிப்பதே பொருத்தமாகும். நாணயத்தின் இறுதியில் வரும் "அன்" என்ற விகுதி நேரடியாகப் பார்த்தால் மாறியே எழுதப்பட்டிருப்பதால் கண்ணாடியில் பார்ப்பது போல் வாசிக்க வேண்டும் எனக் கூறப்படுகிறது. ஆனால் அதே "அன்" விகுதி *கடலஅன்* என வாசிக்கப்பட்ட நாணயத்திலும் மாறியே எழுதப்பட்டு இருந்தும், அதைக் கண்ணாடியில் பார்பது போல் வாசிக்காது நேரிடையாக வாசித்து "அன்" எனப் பொருள் கொள்ளப்பட்டுள்ளமை வாசிக்கும் முறையில் வேறுபாடாக உள்ளது. ஆயினும் அதை "அன்" என எடுப்பதில் தவறில்லை. ஏனெனில் இவ்வாறு மாறி எழுதியதற்கு தமிழக இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்கள் சிலவற்றில் சான்றுகள் உண்டு. இதற்கு எழுத்துக்கள் புதிதாக வழக்கத்திற்கு வரும் போது அதை எழுதியவர்கள் ஆரம்ப காலங்களில் விட்ட தவறுகள்தான் காரணம் என்பதைச் சுட்டிக்காட்டிய தமிழக தொல்பொருள் ஆய்வுத்துறை முதுநிலைக் கல்வெட்டாய்வாளர் இராசகோபால் தமிழகத்தில் கீளைவளவு, குன்றக்குடி போன்ற இடங்களிலும், இலங்கையில் பத்துக்கு மேற்பட்ட கல்வெட் டுக்களிலும் இவ்வாறு எழுதப்பட்டிருப்பதை ஆதாரம் காட்டியுள்ளார் (இராசகோபால் 1991).

# தமிழ் மன்னர்கள் வெளியிட்ட பண்டைய நாணயங்கள்

இலங்கையில் புழக்கத்திலிருந்த தொடக்ககால நாணயங்கள் இந்தியாவுடனான வணிகத் தொடர்பால் அங்கிருந்து கொண்டுவரப்பட்டவையாகும். இதற்கு களஆய்வுகளிலும், அகழ்வாய்வுகளிலும் கிடைத்த மௌரிய, குசான, குப்த சாதவான, சங்க கால நாணயங்கள் சிறந்த எடுத்துக்காட்டாகும். இவற்றுள் பெரும்பாலான நாணயங்கள் அநுராதபுரம், மாதோட்டம், கந்தரோடை, வல்லிபுரம், பூநகரி, அண்மையில் தென்னிலங்கையில் அக்குறுகொட போன்ற புராதான தலைநகரங்களிலும், வர்த்தக மையங்களிலும் கிடைத்துள்ளன (Codrington 1924, Bopearachchi 1998.1999, சிவசாமி 1974, Seyone 1198, புஷ்பரட்ணம் 1991). இந்நாணய மரபுகளைப் பின்பற்றியே காலப்போக்கில் இலங்கையிலும் நாணயங்கள் வெளியிடப்பட்டன (Parkar 1981). இதில் சின்னங்களுடன் கூடிய வார்ப்பு நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. அவற்றை வெளியிட ஆந்திர, சங்க கால நாணயமரபு கூடிய அளவுக்கு செல்வாக்குச் செலுத்தின எனக் கூறலாம். இதற்கு காலத்தால் முந்திய திஸ, யானை –சுவஸ்திகா, குதிரை– சுவஸ்திகா, சிங்கம்– சுவஸ்திகா, வேலியிடப்பட்ட– மரம் சுவஸ்திகா, எனப் பெயரிடப்பட்ட நாணயங்களைக் குறிப்பிடலாம் (Codrington 1924:22).

இந்நாணயங்களை ஆராய்ந்த எம். மிற்சினர் போன்ற நாணயவியலாளர் இவை சங்க காலப் பாண்டிய நாணயங்களின் செல்வாக்கிற்கு உட்பட்டவை எனக் கூறுகிறார் (Mitchiner 1998:629). ஆனால் இவற்றில் சங்க கால நாணயங்களின் செல்வாக்கு மட்டுமன்றி, சாதவாகன நாணயங்களின் செல்வாக்கையும் காணமுடிகிறது.

இலங்கை நாணயங்களில் பொதுவாகக் காணப்படும் யானை உருவம், மூன்று முகடுள்ள மலைக்கு மேல் உள்ள வேலியிடப்பட்ட மரம், மத்தளம் போன்ற வடிவம் பாண்டியப் பெருவழுதி நாணயங்களில் வரும் (Krishnamurthy 1997:47) சின்னங்களைப் பெரிதும் ஒத்துள்ளன. திஸ நாணயங்களில் வட்டமும் அதன்மேல் பிறைபோன்ற அரைவட்டமும் இடம்பெற்றுள்ளன. இவ்வடிவத்தைச் சிலர் நந்திபாதமாகவும், வேறு சிலர் கொம்புடன்கூடிய எருதின் தலையாகவும் கருதுகின்றனர். இவ்வடிவம் பாண்டிய, சாதவாகன வார்ப்பு நாணயங்களில் மட்டுமன்றி முத்திரை நாணயங்களிலும் காணப்படுகின்றன (Gupta 1965:15). வேலியிடப்பட்ட மரம் இந்திய நாணயங்களில் காணப்படும் பொதுவான அம்சம். ஆனால் அதன் கிளைகள், இலைகள் என்பவற்றில் சில வேறுபாடுகள் காணப் படுகின்றன. ஆந்திராவில் கிடைத்த முத்திரை நாணயங்களில் அதன் இலைகள் ஒடுங்கிய மூன்று இதழ்களைக் கொண்டுள்ளன. சாதவாகன நாணயங்களில் அவை சற்று திரட்சியாக உள்ளன (Sarma 1980:Fig.VI). இலங்கையில் உள்ள நாணயங்களில் முத்திரை நாணயங்களின் சாயல் கூடுதலாகக் காணப்படுகிறது. இலங்கை நாணயங்களில் வரும் சிங்க உருவத்தைப் பொறுத்தவரை அவை பெரிதும் ஆந்திர நாணயங்களையே ஒத்துள்ளன. அத்துடன் நாணயங்களின் தோற்ற அமைப்பு பாண்டிய நாணயங்களை விட ஆந்திர நாணயங்களை அப்படியே ஒத்துள்ளன. ஆனால் இலங்கை நாணயங்களில் வரும் பீடத்துடன் கூடிய சுவஸ்திகா சின்னம் இலங் கையைத் தவிர தென்னிந்திய நாணயங்களிலோ, இந்திய நாணயங் களிலோ எதிலும் காணப்படவில்லை. இதன் மூலம் இந்திய நாணய மரபு இலங்கையில் நாணயங்கள் வெளியிடக் காரணமாக இருப்பினும் காலப் போக்கில் இலங்கைக்கு என்று தனித்துவமான நாணயமரபும் தோன்றியமை தெரிகிறது.

இந்திய நாணயங்களில் அதிலும் சிறப்பாக தமிழக நாணயங்களில் அதை வெளியிட்ட மன்னன் அல்லது வம்சத்தைக் குறிக்கும் பெயர் அல்லது குலக்குறியீடுகள் இடம்பெற்றுள்ளன.

அவற்றில் இருந்து அந்நாணயத்தை வெளியிட்ட மன்னன் பெயர், வம்சம், காலம் போன்றவற்றை இலகுவாக அடையாளம் காணமுடிகிறது. இலங்கையைப் பொறுத்தவரை கி.பி.10ஆம் நூற்றாண்டுக்கு முன் வெளியிடப்பட்ட நாணயங்களில் மன்னன் பெயரோ அல்லது பட்டமோ இடம்பெற்றதாகத் தெரியவில்லை. பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்களில் அதை வெளியிட்டவர்களின் பெயர்கள் இருப்பினும் அதைச் சமகாலத்தில் இலங்கையில் ஆட்சி புரிந்த மன்னர்கள்தான் வெளியிட்டார்கள் எனக் கூறுவதற்குரிய உறுதியான சான்றுகள் எவையும் இதுவரை கிடைத்ததாகத் தெரியவில்லை. இந்நிலையில் நாணயங்களில் உள்ள சின்னங்கள், குறியீடுகள் என்பவற்றை வைத்து அதை வெளியிட்ட மன்னன், வம்சம், காலம் போன்றவற்றை உறுதியாகக் கூறமுடியாது. ஆனால் இந்நாணயங்கள் இலங்கைக்குள் மட்டும் பரந்துபட்ட அளவில் புழக்கத்தில் இருந்ததற்கான சான்றுகள் கிடைத்திருப்பதைக் கொண்டும், வடிவமைப்பில் சமகால இந்திய மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களை ஒத்திருப்பதாலும் இவற்றை இலங்கையில் ஆட்சிபுரிந்த மன்னர்கள் வெளியிட்டதாக எடுத்துக் கொள்ளலாம். கொட்றிங்ரன் போன்ற நாணயவியலாளர்கள் நாணயங்களில் வரும் சின்னங்களைப் பௌத்த சிங்களப் பண்பாட்டுடன் தொடர்புபடுத்தி இவற்றைச் சிங்கள மன்னர்களே வெளியிட்டதாக எடுத்துக் கூறினார். குறிப்பாக சிங்க உருவம் பொறித்த நாணயத்தை வசபன், மகாசேனன் போன்ற மன்னர்களுடன் தொடர்பு படுத்துகிறார் (Codrington 1924:24-25). அதேவேளை ஏனைய நாணயங்களைக் குறிப்பாகத் தமிழ் நாணயங்களை இலங்கைக்கும் தமிழகத்திற்கும் இடையிலான வரலாற்றுரீதியான அரசியல், வர்த்தக, பண்பாட்டு உறவுகளின் அடிப்படையில் தமிழகத்திலிருந்து கொண்டுவரப்பட்டவையாகக் கூறப்பட்டுள்ளது.

பண்டைய காலத்தில் அநுராதபுரம் பலம்மிக்க அரசாக இருந்தபோது இதற்கு வடக்கிலும் தெற்கிலும் பல சிற்றரசுகள் இருந்ததற்கான சான்றுகள் பாளி இலக்கியங்களிலும், கல்வெட்

டுக்களிலும் காணப்படுகின்றன. இச்சிற்றரசுகளில் ஆட்சி புரிந்த சிலர் காலப்போக்கில் அநுராதபுர மன்னர்களாக வந்ததற்கும் சான்றுகள் உண்டு. ஆனால் அநுராதபுர அரசையே மையமாகக் கொண்டு எழுதப்பட்ட பாளி நூல்களில் அநுராதபுர அரசின் அரசியல் வரலாறே இலங்கை வரலாறாகக் காட்டப்பட்டுள்ளது. கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து இவ் அரசின் வரலாற்றைத் தொடர்ச்சியாகக் கூறும் தீபவம்சம், மகாவம்சம், தூளவம்சம் முதலான பாளி நூல்கள் இவ்வரசைத் தமிழ் மன்னர்களும், சிங்கள மன்னர்களும் (தொடக்க காலப் பாளி நூல்கள் இவர்களைச் சிங்கள மன்னர் எனக் கூறாவிட்டாலும் வரலாற்றறிஞர்கள் சிங்கள மன்னர்கள் என்றே எடுத்துள்ளனர்) மாறி மாறி ஆட்சி புரிந்ததாகக் கூறுகின்றன. இதில் கி.மு.1 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட முதல் 250ஆண்டு காலத்தில் ஆட்சி புரிந்த 22மன்னர்களில் 10தமிழ் மன்னர்கள் 80ஆண்டுகளுக்கு மேல் ஆட்சி புரிந்தனர். இந்நிலை பிற்காலத்திலும் தொடர்ந்த அதே வேளை, சிங்கள மன்னர்களில் ஆட்சியிழந்தவர்கள், ஆட்சி யிலிருந்தவர்கள் தமது ஆட்சியை நிலைநாட்ட அடிக்கடி அயல் நாடு சென்று தமிழர் படையுடன் வந்த வரலாற்றை இந்நூல்கள் கூறுகின் றன. இவர்களில் தமிழ் மன்னர்களை வர்த்தகர், படையெடுப்பாளர் என அக்கரையிலிருந்து வந்து ஆட்சியைக் கைப்பற்றிய அன்னியர் எனக் கூறும் பாளி நூல்கள் இலங்கை வரலாற்றில் அவர்களுக்கிருந்த பங்களிப்புப் பற்றி ஏதுவுமே கூறவில்லை. இந்நூல்களை அடிப்படையாகக் கொண்டு பிற்காலத்தில் வரலாற்றை எழுதிய வரலாற்றறிஞர்கள் பலரும் இத்தகைய நோக்குடன் இலங்கை வரலாற்றைப் பார்த்ததால் சமகாலத்திற்குரிய பிற வரலாற்று மூலங்களை இங்கு ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்களுடன் தொடர்புபடுத்திப் பார்க்கத் தவறிவிட்டனர். இந்நிலையே இலங்கை யில் கிடைத்த தமிழ் நாணயங்களைப் பொறுத்தும் காணப்பட்டது.

இலங்கையின் பல வட்டாரங்களில் அதிலும் சிறப்பாக வடஇலங்கையில் பலவகை நாணயங்கள் கிடைத்துள்ளன. அவற்றை இதுவரை ஆராய்ந்த அறிஞர்கள் பலரும் அதற்குப் பல்லவ, சோழ,

பாண்டிய, விஜயநகர, நாயக்கர் கால நாணயங்கள் எனப் பெயரிட்டு அவை அவ்வப்போது தமிழகத் திலிருந்து வந்ததாகக் கூறியுள்ளனர். இதற்கு கி.பி.13ஆம் நூற்றாண்டுக்கு முன் இலங்கையில் தமிழ் அரசு தோன்றவில்லை என்ற நம்பிக்கையும், பண்டைய காலத்தில் ஆட்சிபுரிந்த தமிழ் மன்னர்கள் அனைவரும் தமிழகத்திலிருந்து வந்தவர்கள் என்ற எண்ணமும், அவர்கள் சிங்கள மன்னர்களைப் போல் இலங்கையில் நாணயங்களை வெளியிடவில்லை என்ற ஆழமான கருத்தும் அடிப்படைக் காரணங்களாக இருந்தன. ஆனால் இலங்கையில் கிடைத்த தமிழ் நாட்டுக்குரிய நாணயங்களுடன், பிற தமிழ் நாணயங்களை ஒப்பிடுகின்ற போது அவற்றிடையே ஒருவித ஒற்றுமையும், வேறுபாடும் இருப்பதைக் காணலாம். இந்த வேறுபாட்டைத் தமிழக நாணயங்கள் தொடர்பாக இதுவரை வெளிவந்த ஆய்வுகளுடனும், தமிழகத்தில் கண்டுபிடிக்கப்பட்டு தற்போது தமிழக நூதன சாலைகளிலும், தனிப்பட்டவர்களிடமும் உள்ள நாணயங்களுடனும் ஒப்பிட்டு ஆராய்வதன் மூலம் கண்டு கொள்ளலாம். அதன் அடிப்படையிலேயே இந்த ஆய்வு அமைந்துள்ளது. ஆயினும் இவற்றின் காலத்தையோ, வெளியிட்ட மன்னர்களையோ எழுத்தாதாரங்கள் அற்ற நிலையில் திட்டவட்டமாகக் கூறமுடியாதுள்ளது. இருப்பினும் நாணயங்களின் வடிவமைப்பு, அவற்றில் உள்ள சின்னங்கள், இலங்கைத் தமிழ் மன்னர்களின் வரலாறு என்பவற்றின் பின்னணியில் சில முடிவுகளை முன்வைக்க முடிகிறது.

### மீன்சின்ன நாணயங்கள்

இலங்கையில் கிடைத்த பண்டைய தமிழ் நாணயங்களில் மீன் சின்னம் பொறித்த நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இவற்றில் ஐந்து வகையான நாணயங்கள் இலங்கையில் கிடைத்துள்ளன (Codrington 1924. Seyone 1998:40-41, Bopearachchi 1998:156,1999). இவை சதுரவடிவில் அமைந்திருப்பதுடன், அதன் பின்புறத்தில் உள்ள மீன் சின்னம் கோட்டுருவிலும் காணப்படுகின்றது. மீன் பாண்டியரின் குலச்சின்னமாக இருந்ததைத் தமிழ்நாட்டில் கிடைத்த

பெருவழுதி என்ற பெயர் பொறித்த சங்க கால நாணயங்களில் வரும் கோட்டுருவ மீன் சின்னம் உறுதிப்படுத்துகிறது. தமிழகத்தில் கிடைத்த சங்க காலப் பாண்டிய நாணயங்கள் பற்றி ஆராய்ந்த இரா.கிருஷ்ணமூர்த்தி 1917 இல் வடஇலங்கையில் கந்தரோடை என்ற இடத்தில் போல்பீரிஸ் என்பவரால் கண்டுபிடித்த நாணயங்களை ஆராய்ந்து அவற்றில் சங்க காலப் பாண்டியரால் வெளியிடப்பட்ட பெருவழுதி வகையைச் சேர்ந்த நாணயங்களும் இருப்பதை முதன்முதலில் தெரியப்படுத்தினார் (Krishnamurthy 1997:36). இவ்வகை நாணயங்களுடன் மேலும் மூன்று வகையான சங்க காலப் பாண்டிய நாணயங்கள் அண்மையில் பூநகரியில் கிடைத்துள்ளன (புஷ்பரட்ணம் 1999). இவை தமிழகத்திற்கும் இலங்கைக்கும் இடையிலான பலதரப்பட்ட உறவுகளுக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். ஆனால் வடஇலங்கையில் மேலும் கோட்டுருவத்துடன் கூடிய இருவகை நாணயங்கள் கிடைத்துள்ளன. இவ்வகை நாணயங்கள் தமிழகத்தில் இதுவரை கிடைத்ததாகத் தெரியவில்லை.

இந்நாணயங்கள் வடஇலங்கையில் பூநகரி வட்டாரத்தில் உள்ள பள்ளிக்குடா, மண்ணித்தலை, வீரபாண்டியன்முனை ஆகிய இடங்களிலும், யாழ்ப்பாணத்தில் கந்தரோடையிலும் கிடைத்துள்ளன. இவை அனைத்தும் சதுர வடிவில் அமைந்த செப்பு நாணயங்களாகும். இவற்றுள் பூநகரி வட்டாரத்ளதில் கிடைத்த மூன்று நாணயங்களின் முன்புறத்தில் கவிழ்ந்த பிறைவடிவுள்ள கூரைக்கோயிலும், இரண்டு நாணயங்களின் முன்புறத்தில் ஸ்ரீவத்ஷா உருவமும் இடம் பெற்றுள்ளன. இவ்வகை நாணயங்கள் வடஇலங்கையைத் தவிர இலங்கையின் ஏனைய பாகங்களில் கிடைத்ததாகத் தெரியவில்லை. இவற்றின் அமைப்பும், மீன் குறியீட்டுச் சின்னமும் சங்ககால நாணயங்களுடன் தொடர்புபடுத்தக் கூடியவை. ஆனால் முன்புறத்தில் உள்ள சின்னங்கள் சங்ககால நாணயங்களிலிருந்து வேறுபடு கின்றன (புஷ்பரட்ணம் 1998114-119). அவற்றின் பொதுவான விபரம் வருமாறு




| | | |
|---|---|---|
| 1.இடம் | : | பள்ளிக்குடா. |
| உலோகம் | : | செப்பு. |
| அளவ | : | 1,5 x 1,3 செ.மீ. |
| எடை | : | 2.3 கிராம். |
| முன்புறம் | : | ஐந்து தூண்கள் தாங்கி நிற்கும் கவிழ்ந்த பிறை வடிவுள்ள கூரைக் கோயில். |
| பின்புறம் | : | மீன் குறியீட்டுச் சின்னம். |




| | | |
|---|---|---|
| 2.இடம் | : | வீரபாண்டியன்முனை |
| உலோகம் | : | செப்பு |
| அளவு | : | 1.6 x 1.4செ.மீ. |
| எடை | : | 2.0கிராம். |
| முன்புறம் | : | ஸ்ரீவத்ஷா சின்னம். |
| பின்புறம் | : | மீன் குறியீட்டுச் சின்னம். |

இந்நாணயங்களின் பின்புறத்தில் மீன் கோட்டுருவம் இருப்பதனால் இவற்றைச் சங்ககாலப் பாண்டியர் வெளியிட்ட நாணயங்கள் என்ற கருத்து நிலையை ஏற்படுத்தலாம். ஆனால் முன்புறத்தில் உள்ள சின்னங்கள் பாண்டியர் வெளியிட்ட நாணயங்களில் இருந்து இவற்றை வேறுபடுத்துகின்றன (படம்–1). கவிழ்ந்த பிறைவடிவுள்ள கூரைக்கோயிலும், ஸ்ரீவத்ஷாவும் சங்க கால நாணயங்களில் சிறப்பாகப் பாண்டிய நாணயங்களில் பிற சின்னங்களுடன் சேர்ந்து வருகின்றனவே தவிர தனித்து இடம் பெற்றி

ருந்ததற்கு இதுவரை சான்றில்லை (படம்-2). இதனால் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களைத் தனித்துவமானவை எனக்கூறலாம். சங்க காலத்தில் பாண்டியரால் வெளியிடப்பட்ட இந்நாணயங்கள் தமிழகத்தில் கிடைக்காமல் இலங்கையில் கிடைத்திருக்கலாம் என வாதிடவும் இடமுண்டு. ஆனால் பாண்டியர் வெளியிட்ட நாணயங்கள் தமிழகத்தில் பரவலாக கிடைக்கும்போது, அவை இலங்கையில் இதுவரை அரிதாகவே கிடைத்துள்ளன. இந்நிலையில் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்கள் தமிழகத்தில் கிடைக்காமல் இருப்பது வியப்புக்குரிய ஒன்றாகும். இதனால் இந்நாணயங்களை இலங்கையில் வாழ்ந்த தமிழர்கள் வெளியிட்டார்கள் எனக் கூறுவதே பொருத்தமாகும்.

நாணயத்தில் வரும் மீன் கோட்டுருவம் இங்கு வாழ்ந்த தமிழர்களுக்கும் பாண்டி நாட்டிற்கும் இடையிலான பூர்விகத் தொடர்பு அல்லது சமகாலத்தில் பாண்டிய மன்னர்களுக்கும் இலங்கையில் ஆட்சி புரிந்த மன்னர்களுக்கும் இடையிலான உறவு காரணமாக இருந்திருக்கலாம். பண்டைய காலத்தில் இலங்கை, தமிழ்நாட்டில் ஏனைய பிராந்தியங்களை விட அருகிலுள்ள பாண்டிநாட்டுடனும், பாண்டிய வம்சத்துடனும் நெருக்கமான தொடர்பு கொண்டிருந்ததற்குப் போதிய சான்றுகள் உண்டு. கி.மு.5,4-ஆம் நூற்றாண்டில் இலங்கையில் ஏற்பட்ட தென்னிந்தியக் குடியேற்றம், அரச தோற்றம், ஆரம்பகால மன்னர்கள் என்பன பாண்டிநாட்டுத் தொடர்பால் ஏற்பட்டதைப் பாளி இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம் (M.V.VIII). இலங்கையிலுள்ள கி.மு.3,2-ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டுக்கள் பாண்டிய வம்சம் பற்றியும், பாண்டியக் கிராமம் பற்றியும் கூறுகின்றன. சில கல்வெட்டுக்களில் பாண்டிய வம்சத்துடன் தொடர்புடைய பழைய, மாற போன்ற பெயர்கள் காணப்படுகின்றன (I.C.1970: Nos. 58, 159, 610, 968, 1097). ஏறத்தாழ இதே காலமளவில் பழைய மாறன், பிழையமாறன் போன்ற தமிழ் மன்னர்கள் இலங்கையில் ஆட்சிபுரிந்ததைப் பாளி இலக்கியங்கள் கூறுகின்றன (M.V.V 61).

தென்னிலங்கையில் உள்ள கி.மு.3-2-ஆம் நூற்றாண்டுக்

குரிய 16 கல்வெட்டுக்கள் மீன் அரசன் பற்றியும், அவன் வழிவந்த பத்து சகோதரர் ஆட்சிபற்றியும் கூறுகின்றன( பாளிமொழியில் மஜிமகாராஜா என்றால் மீன் அரசன் என்பது பொருள்). இதை உறுதிப்படுத்தும் வகையில் இக் கல்வெட்டுக்களில் மீன் கோட்டுருவச் சின்னம் காணப்படுகின்றது (I.C.1970:556-568). இச்சின்னம் ஆதிகாலத்தில் இலங்கையில் குடியேறிய தமிழர்களின் வழிவந்தவர்களைக் குறிக்கிறது எனவும், இவர்கள் சிங்கள மன்னர்களுக்கு கட்டுப்படாமல் சுதந்திரமாக ஆட்சிபுரிந்ததைக் காட்டுவதாகவும் கூறப்படுகிறது (வேங்கடசாமி 1983::610). சிற்றரசர்களாக இருந்தவர்களே பின்னர் இலங்கை மன்னர்களாக வந்ததைப் பாளி இலக்கியங்கள் வாயிலாக வரலாற்றில் காண்கின்றோம். இதனால் வடஇலங்கையில் கிடைத்த மீன் கோட்டுருவச் சின்னங்களுடன் கூடிய நாணயங்களை இலங்கையில் தமிழரச மரபை உருவாக்கிய தமிழர்கள் சிற்றரசரர்களாக அல்லது இலங்கை மன்னர்களாக இருந்து வெளியிட்டனர் எனக் கூறலாம். நாணயத்தின் முன்புறத்திலுள்ள கூரைக்கோயில், ஸ்ரீவத்ஷா என்பவை தமிழ்மன்னர்களின் சமய நம்பிக்கையைப் பிரதிபலிக்கலாம். பாளி இலக்கியங்கள் தமிழ்மன்னர்கள் பௌத்த மதத்திற்கு ஆதரவு கொடுத்து ஆட்சிபுரிந்தபோதிலும் தமது பழைய மத நம்பிக்கையைக் கைவிடவில்லை எனக் கூறியிருப்பதை இங்கு நினைவுபடுத்திப் பார்க்க இடமுண்டு.

### யானையும் மீன்சின்ன நாணயங்களும்

சங்க கால நாணய மரபைப் பின்பற்றி சமகாலத்தில் இலங்கையில் தமிழ், சிங்கள மன்னர்கள் நாணயங்கள் வெளியிட்டுள்ளார்கள் என்பதற்கு முன்புறம் யானையும் பின்புறம் சுவஸ்திகா அல்லது கோட்டுருவில் அமைந்த மீன் சின்னமும் கொண்ட நாணயங்கள் சிறந்த எடுத்துக்காட்டாகும். இவை கந்தரோடை, பூநகரி, வல்லிபுரம், இரணைமடு, அநுராதபுரம், அக்குறுகொட போன்ற இடங்களில் கிடைத்துள்ளன (Codrington 1924:20, Bopearachchi 1999::68, புஷ்பரட்ணம் 1999). இதில் மீன்

சின்னத்திற்குரிய நாணயங்கள் இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழர்களால் வெளியிடப்பட்டதெனக் கூறலாம். அவற்றின் பொதுவான விபரங்கள் வருமாறு (படம்–3).



(படம்–4)

இடம் : மண்ணித்தலை
உலோகம் : நிக்கலும் செம்பும்
அளவு : 1.1 x 0.9 செ.மீ.
எடை : 1.4 கிராம்.
முன்புறம் : இடப்புறம் நோக்கி நிற்கும் யானை.
பின்புறம் : மீன் கோட்டுருவம்

இதில் நாணயத்தின் முன்புறத்தில வரும் யானையையும், பின்புறத்தில் வரும் மீனையும் ஒத்த நாணயங்களைச் சங்க காலப்பாண்டியர் வெளியிட்டதற்குத் தமிழ் நாட்டில் பல சான்றுகள் உள்ளன (கிருஷ்ணமூர்த்தி 1977). அவை தமிழகத்துடனான தொடர்பால் சமகாலத்தில் இலங்கைக்கும் வந்துள்ளன (புஷ்பரட்ணம்1998:114–119). ஆனால் நாம் மேலே குறிப்பிட்ட நிக்கலும், செம்பும் கலந்த நாணயங்களின் அளவும், யானையின் உருவமைப்பும் மிகச் சிறியவை. இந்த அளவுகளில் சங்க கால மன்னர்கள் நாணயங்கள் வெளியிட்டதாகத் தெரியவில்லை. அத்துடன் இவ்வகை நாணயங்கள் எவையும் இதுவரை தமிழகத்தில் கிடைத்ததற்குச் சான்றுகள் இல்லை. ஆனால் இதேவடிவுடைய நாணயங்களின் பின்புறத்தில மீனுக்குப் பதிலாக சுவகூஷ்திகாவுடன் கூடிய நாணயங்கள் இலங்கையில் பல இடங்களில் கிடைத்துள்ளன(படம்–4). இதில் வரும் பீடத்துடன் கூடிய சுவகூஷ்திகா இலங்கையில் மட்டும் காணப்படும் சிறப்பம்சமாகும். இவற்றின் அடிப்படையில் யானையும், மீன் சின்னமும் கொண்ட மேற்கூறப்பட்ட

நாணயங்கள் சங்க கால, இலங்கை நாணயமரபு கலந்த நிலையில் இலங்கைத் தமிழ் மன்னர்கள் வெளியிட்டனர் எனக் கூறுவதே பொருத்தமாகும்.

## காளையுருவம் பொறித்த நாணயங்கள்

இலங்கையில் கிடைத்த பண்டைய தமிழ் நாணயங்களில் காளையுருவம் பொறித்த நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவை கந்தரோடை, யாழ்ப்பாணம், மாதோட்டம் (Seyone 1998:26-30), வல்லிபுரம், அநுராதபுரம் (Codrington 1924:24), பூநகரி (புஷ்பரட்ணம் 1998:114-119), தென்னிலங்கையில் அக்குறுகொட (Bopearachchi 1999:90-91) போன்ற இடங்களில் கிடைத்துள்ளன. இவற்றிலிருந்து இந்நாணயங்கள் பரந்துபட்ட அளவில் புழக்கத்திலிருந்த மையை உணரமுடிகிறது. ஆயினும் எண்ணிக்கையில் அதிகமானவை வடஇலங்கையில் கிடைத்திருப்பதை பூநகரி வட்டாரத்தில் உள்ள பள்ளிக்குடா, வீரபாண்டியன்முனை, ஈழஊர் ஆகிய இடங்களிலிருந்து பெறப்பட்ட நாணயங்கள் உறுதிப்படுத்துகின்றன.

இவை அனைத்தும் சதுரவடிவில் அமைந்த செப்பு மற்றும் ஈய நாணயங்களாகும். ஆயினும் வடிவமைப்பு, நீள அகலம், எடை, அவற்றில் இடம்பெற்றுள்ள சின்னங்கள் என்பவற்றில் வேறுபாடுகள் உள்ளன. மிகச்சிறிய நாணயங்களின் முன்புறத்தில் இடம் அல்லது வலப்புறம் நோக்கி நிற்கும் காளையுருவம் காணப்படுகிறது. காளை உருவத்தின் முகத்திற்கு கீழே பூரணகும்பம் போன்ற பொருள் உள்ளது. காளைக்கு வெளியே ஒன்று அல்லது இரண்டு சதுரக் கோடுகள் காணப்படுகின்றன. நாணயத்தின் பின்புறத்தில் வட்டமும் வட்டத்திற்குள் மூன்று அல்லது நான்கு புள்ளிகளும் வட்டத்திற்கு வெளியே நான்கு நேர்கோடுகளாலான சதுரமும் உள்ளது. சில நாணயங்களின் பின்புறத்தில் வட்டத்திற்குப் பதிலாக முக்கோணமும் அதன் மத்தியில் சிறுபுள்ளியும் காணப்படுகிறது. பெரிய நாணயங்களின் முன்புறத்தில் இடப்புறம் நோக்கி நிற்கும் காளை

உருவத்திற்கு வெளியே இரு சதுரக் கோடுகள் உள்ளன. இக்கோடுகளுக்கு இடையிலும், வெளியிலும் சில புள்ளிகள் காணப்படுகின்றன. காளையின் பாதத்திற்கு முன்னால் பலிபீடமும், காளைக்கு மேலே முன்பக்கமாக சுவஸ்திகா உட்பட நான்கு சின்னங்களும் காணப்படுகின்றன. பின்புறத்தில் மூன்று அல்லது நான்கு புள்ளிகளும், அதைச் சுற்றி வட்டமும், வட்டத்திற்கு வெளியே இரு சதுரக் கோடுகளும் உள்ளன. இவற்றை நாணயத்தின் பின்புறத்தில் உள்ள சின்னங்களை அடிப்படையாகக் கொண்டு இருபிரிவாகப் பிரிக்கலாம். அவற்றின் பொதுவான விபரம் வருமாறு (படம்–5,6).



| | | |
|---|---|---|
| 1 ) இடம் | : | வீரபாண்டியன்முனை. |
| உலோகம் | : | செம்பு. |
| அளவு | : | 1.6x 1.3 செ.மீ. |
| எடை | : | 2.3 கிராம். |
| முன்புறம் | : | வலப்புறம் நோக்கி நிற்கும் காளை. முகத்திற்குக் கீழே பூரணகும்பம், வெளியே இரு சதுரக்கோடுகள் |
| பின்புறம் | : | நான்கு புள்ளிகள் அதைச் சுற்றி வட்டம். வட்டத்திற்கு வெளியே இரு சதுரக் கோடுகள். கோட்டுக்குள் சில புள்ளிகள். |

| | | |
|---|---|---|
| 1) இடம் | : | அக்குறுகொட. |
| உலோகம் | : | ஈயம் |
| அளவு | : | 10x10 மி.மீ. |
| எடை | : | .24 கிராம். |
| முன்புறம் | : | இடப்புறம் நோக்கி நிற்கும் காளை. முகத்திற்குக் கீழே பூரணகும்பம், வெளியே இரு சதுரக்கோடுகள் |
| பின்புறம் | : | முக்கோணம், அதன்மத்தியில் சிறுபுள்ளி. வெளியே இரு சதுரக் கோடுகள். |

இந்நாணயத்தில் காளை முக்கிய சின்னமாக இடம்பெற்றுள்ளது. காளையை நாணயங்களில் பயன்படுத்தும் மரபு இந்தியாவில் மிகத் தொன்மையானது. இதன் தொடக்கத்தை சிந்துவெளியின் நாகரிக கால முத்திரைகளில் காணலாம். பிற்கால முத்திரை நாணயங்களிலும், வார்ப்பு நாணயங்களிலும் காளை முக்கிய சின்னங்களில் ஒன்றாகப் பயன்படுத்தப்பட்டது (Mansukhal, N. 1988). சங்க கால மூவேந்தர்கள் வெளியிட்ட நாணயங்களில் காளையும் இடம்பெற்றது (Krishnamurthy 1997). குறிப்பாகச் சங்க காலப் பாண்டியர் வெளியிட்ட நாணயங்களில் காளை முக்கிய சின்னமாக இடம்பெற்றிருந்தது. பிற்காலத்தில் பல்லவரும், பாண்டியரும், சேரரும் காளையைப் பயன்படுத்தத் தவறவில்லை. இதனால் காளை உருவத்தை மட்டும் வைத்து ஒரு நாணயத்தை யார் வெளியிட்டிருப்பார்கள் என அடையாளம் காண்பது கடினமாகும்.

பல்லவர் காளையை அரச முத்திரையாகப் பயன்படுத்தியதுடன், அதை நாணயங்களிலும் பயன்படுத்தியுள்ளனர். இதனால் இலங்கையில் கிடைத்த மேற்குறிப்பிட்ட வகை நாணயத்தைப் பல்லவரே வெளியிட்டு தமிழகத்துடனான தொடர்பால் இங்கு வந்ததென்ற கருத்து நீண்டகாலமாக இருந்து வருகிறது (Codrington 1924:24,Seyone 1998:27, Mitchiner1997:135, சிற்றம்பலம் 1993:501). ஆனால் பல்லவர் வெளியிட்ட நாணயங்கள் பெரும்பாலும் வட்ட வடிவமானவை.

சதுர வடிவில் நாணயங்கள் வெளியிடும் மரபு பல்லவர் காலத்திற்கு முன் சங்க காலத்தில் பெரிதும் வழக்கிலிருந்த ஒன்றாகும். மேலும் பல்லவ நாணயங்களில் முன்புறத்தில் பெரும்பாலும் காளை அல்லது பிற சின்னங்களுடன் லக்ஷிதா, அலரி, தண்டிக்கலா, ஸ்ரீவம்பு, வபு, பகாபிருகு, கரும்பிருகு, காடவ, தந்திஹி, ஸ்ரீநிதி, பரம போன்ற பட்டம் அல்லது விருதுப் பெயர்களுடன் பின்புறத்தில் சங்கு, சக்கரம், கூட்டல்குறி, நண்டு, கப்பல், மீன், சைத்தியம், விளக்கு போன்ற உருவங்களும் இடம்பெற்றுள்ளன (Elliot 1970, Nagaswamy 1981, சீதாராமன் 1994, 2000, காசிநாதன் 1995:52-58). இவ்வகை நாணயங்கள் சில வடஇலங்கையில் மாதோட்டத்திலும் கிடைத்துள்ளன (Seyone 1998:37-38). ஆனால் இலங்கையில் கிடைத்த காளையுருவ நாணயத்தின் பின்புறத்தில் வரும் சின்னங்கள் பல்லவ நாணயங்கள் எதிலுமே காணப்படவில்லை. ஆயினும் இலங்கை நாணயத்தில் வரும் காளை உருவத்திற்கும் சங்க காலத்தில் பாண்டியர், சோழர் வெளியிட்ட நாணயங்களில் வரும் காளை உருவத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அண்மையில் அழகன்குளம் அகழாய்வில் கிடைத்த பாண்டிய நாணயம் ஒன்றில் இடப்புறம் நோக்கி நிற்கும் காளையும், அதன் முகத்திற்கு கீழே பூரண கும்பமும் காணப்படுகிறது (காசிநாதன் 1995:21). இவை அப்படியே இலங்கையில் கிடைத்த நாணயங்களை ஒத்துள்ளன. ஆனால் அழகன்குள நாணயத்தின் பின்புறத்தில் மீனும், இலங்கை நாணயங்களில் புள்ளிகளுடன் கூடிய வட்டம் அல்லது சதுரமும் காணப்படுவது முக்கிய வேறுபாடாகும். இச்சின்னங்கள் தமிழக நாணயங்களில் மட்டுமன்றி இந்திய நாணயங்கள் எதிலும் காணப்படவில்லை. வடஇந்தியாவில் காளை உருவத்துடன், சில நாணயங்களில் பிராமி எழுத்துக்களுடன் கூடிய நாணயங்கள் மற்றும் நாணயங்களுக்குரிய அச்சினால் பதிக்கப்பட்ட களிமண் தட்டுக்கள் கிடைத்துள்ளன (Thaplyal 1972:418-419, plats.II-III). ஆனால் இவற்றின் உருவ அமைப்புக்கள் வேறுபட்டிருப்பதுடன் காலரீதியில் பிற்பட்டவையாகவும் உள்ளன. ஆந்திர நாணயங்களில் இதன் சாயல் தென்பட்டாலும் பல்வேறு அம்சங்களில் அவற்றிடையே வேறுபாடு காணப்படுகின்றன. ஆனால் இலங்கையில் வசபன் அல்லது

மகாசேனன் போன்ற சிங்கள மன்னர்களால் வெளியிடப்பட்டதாகக் கருதப்படும் சிங்க உருவம் பொறித்த நாணயங்களின் பின்புறத்தில் காளை உருவ நாணயத்தில் வரும் வட்டமும், அதற்குள் நான்கு புள்ளிகளும் கொண்ட சின்னமும் அப்படியே வருகின்றது(படம்–7). அண்மையில் தென்னிலங்கையில் காளையுருவம் கொண்ட நாணயத்திற்குரிய அச்சால் பதிக்கப்பட்ட களிமண் நாணய வடிவங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன (Bopearachchi 1999:90-91,plates22-24,Nos.J22-K32).

(படம்–8)



இவ்வகை நாணயங்கள் தமிழகத்தில் வெளியிடப்பட்டு இலங்கைக்கு கொண்டுவரப்பட்டிருந்தால் அதற்குரிய அச்சுக்கள் இங்கு கிடைத்திருக்க வாய்ப்பில்லை. இவற்றின் அடிப்படையில் இவ்வகை நாணயங்கள் இலங்கையில் வெளியிடப்பட்டவை எனக் கூறுவதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

(படம்–7)



இலங்கை வரலாற்றில் சிங்கத்தை அரச சின்னமாக, முத்திரையாகப் பயன்படுத்தும் மரபு சிங்கள மன்னர்களிடையே நீண்ட காலமாக இருந்து வருகிறது. இடைக்காலத்தில் சிங்கள மன்னர்கள் தாம் வெளியிட்ட நாணயங்களில் தமது பெயரோடு, சிங்கத்தையும் பொறித்தனர் (Seyone 1998:39). இதற்கு சிங்கள மக்களின் பூர்விக வரலாறு சிங்கத்துடன் தொடர்புபடுத்திப் பாளி இலக்கியங்களில் கூறப்பட்டிருப்பது காரணமாக இருக்கலாம். சிங்கம் பெற்றிருந்த முக்கியத்துவத்தைப் பௌத்த சிங்களப் பண்பாட்டில் காளை பெற்றிருந்

தது எனக் கூறமுடியாது. ஆனால் தமிழர் பண்பாட்டில் காளை அவர்களது வழிபாட்டிற்குரிய மங்களச் சின்னமாக இருந்த துடன் அவற்றை நாணயங்களில் பொறிக்கும் மரபையும் கொண்டிருந்தனர். வடஇலங்கையில் அரசமைத்த தமிழ் மன்னர்கள் நாணயங்களில் மட்டு மன்றி அரச கொடிகளிலும், அரச முத்திரைகளிலும் காளை யையே அரச லட்சனையாகப் பயன்படுத்தினர்.

மேற்கூறப்பட்ட காளை உருவம் கொண்ட நாணயங்கள் இலங்கையின் பல வட்டாரங்களில் கிடைத்திருப்பதைக் கொண்டும், அவற்றின் வடிவமைப்புச் சமகாலத்தில் சங்க கால நாணயங்களின் வடிவ மைப்பை ஒத்திருப்பதைக் கொண்டும் இவற்றை சமகாலத்தில் இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்கள் வெளியிட்டிருக்கலாம் எனக் கூறலாம். இக்காலத்தில் இலங்கையில் பல தமிழ் மன்னர்கள் ஆட்சி புரிந்துள்ளனர். ஆனால் மன்னர்களைக் குறிக்கும் எந்தப் பெயரும் இந்நாணயங்களில் இல்லை. இந்நிலையில் இந்நாண யங்களை எந்த மன்னர்கள் வெளியிட்டிருப்பார்கள் எனத் திட்டவட்ட மாகக் கூறமுடியாது. பாளி நூல்கள் கி.மு.2ஆம் நூற்றாண்டில் எல்லாளன் என்ற தமிழ் மன்னன் 44ஆண்டுகள் தொடர்ச்சியாக ஆட்சி புரிந்தான் எனக் கூறுகின்றன. இவனே பண்டைய காலத்தில் நீண்ட காலம் ஆட்சி புரிந்த முதல் மன்னனாவான். இவன் ஆட்சியில் இருந்துதான் முதன்முதலாக இலங்கை மன்னர்கள் நாணயங்கள் பயன்படுத்த தொடங்கிய வரலாறு பாளி இலக்கியங்களில் காணப்படுகின் றன. இவன் இடிந்து போன பௌத்த விகாரையைப் புதிப்பிக்க 15000 கஹபணா கொடுத்தான் என மகாவம்சம் கூறுகிறது (XXI:26). பாளியில் *கஸபணா* என்பது சதுரவடிவிலமைந்த செப்பு நாணயங்களைக் குறிப்பதாகும் (Geiger1950:144). எல்லாளன் ஆட்சிக் காலமான கி.மு.2ஆம் நூற்றாண்டில் சதுரவடிவில் அமைந்த செப்பு நாணயங்கள் புழக்கத்தில் இருந்ததற்கு போதிய சான்றுகள் உண்டு. இவற்றின் அடிப்படையில் இலங்கையில் கிடைத்த காளை உருவம் கொண்ட சதுர நாணயங்களை எல்லாளன் ஆட்சியோடு தொடர்புபடுத்திப் பார்ப்பது பெருமளவுக்குப் பொருத்தமாகும்.

## லக்ஷ்மி நாணயங்கள்

வகையிலும், தொகையிலும் இலங்கையில் கிடைத்த பண்டைய நாணயங்களில் லக்ஷ்மி உருவம் பொறித்த நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவை பண்டைய காலக் குடியிருப்புக்களுக்குரிய கலாசாரச் சின்னங்கள் தொட்டு கி.பி.5ஆம் நூற்றாண்டுக்குரிய ரோம நாணயங்கள் காணப்படும் கலாசாரப் படைகளுடனும் சேர்ந்து கிடைத்திருப்பதால் ஏனைய நாணயங்களைவிட இவற்றின் வெளியீடும், இதன் பயன்பாடும் நீண்ட காலத்திற்கு இருந்ததெனக் கூறலாம். இதை உறுதிப்படுத்தும் வகையில் இவற்றின் வடிவமைப்புக்களும் பல வடிவங்களில் அமைந்துள்ளன. இவை பரந்துபட்ட அளவில் பல வட்டாரங்களில் கிடைக்கப்பட்டாலும் எண்ணிக்கையில் அதிகமான நாணயங்கள் தென்னிலங்கையிலும், வடஇலங்கையிலும் கிடைத்துள்ளன. கி.பி.1885–இல் முல்லைத்தீவில் மட்குடம் ஒன்றிலிருந்து 51 நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன (Parkar 1981:463-82). அதையடுத்து கி.பி.1917இல் கந்தரோடையில் நூற்றுக்கு மேற்பட்ட நாணயங்கள் பெறப்பட்டன. இவற்றைத் தொடர்ந்து நல்லூர், மாதோட்டம், வல்லிபுரம், ஆனைக்கோட்டை, பூநகரி, உருத்துறை ஆகிய இடங்களிலும், வடஇலங்கைக்கு வெளியே அநுராதபுரம், திஸமாறகம, சிலாபம், புத்தளம், நிந்தவூர் அண்மையில் அக்குறுகொட ஆகிய இடங்களிலும் இந்நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன (Peris 1917.Codrington, 1924, சிவசாமி, 1974, கிருஷ்ணராஜா 1983, புஷ்பரட்ணம் 1998, Bopearachchi 1998, 1999). இவை செம்பிலும், செம்பு, ஈயம், மிகச்சிறிய அளவில் சிலிக்கா, இரும்பு, நிக்கல் போன்ற உலோகக் கலப்பாலும் ஆனவை. கந்தரோடையில் கிடைத்த நாணயங்களை ஆராய்ந்த பீரிஸ் இதில் உள்ள பெண் வடிவங்களுக்கு லக்ஷ்மி எனப் பெயரிட்டார். அப்பெயரே இந்நாணயத்திற்குரிய பெயராக இன்றும் வழங்கி வருகிறது.

இந்நாணயங்கள் அனைத்தும் நீள்சதுர வடிவில் உள்ளன. இது சமகாலத்தில் தென்னாசியாவில் வெளியிடப்பட்ட வட்டம், சதுரம்

போன்ற வடிவமைப்பிலிருந்தும் வேறுபட்டவை. இந்தியாவில் கி.மு. 3ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்டதாகக் கருதப்படும் நாணயம் ஒன்று இதேவடிவமைப்புடன் கூடியது. ஆனால் அதன் ஒருபக்கத்தில் மட்டும் கற்பகதரு எனப்படும் விருட்சம் பல இலைகளுடன் கூடியதாகக் காணப்படுகிறது (Mansukhlal 1998). ஏனைய அம்சங்களில் இருநாணயங்கள் இடையேயும் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவற்றைத் தவிர இதே வடிவமைப்புடன் கூடிய நாணயம் எதுவும் இக்காலத்தில் இந்தியாவில் வெளியிடப்பட்டதாகத் தெரியவில்லை. இலங்கையில் தொடக்க காலத்தில் இந்நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்ட போது இவற்றை நாணயமாக எடுக்காது சமயச்சின்னமாகக் கருதப்பட்டது. ஆனால் காலப்போக்கில் இவை புராதன நகரங்களிலும், வர்த்தக மையங்களிலும் ஏனைய நாணயங்களுடனும் கிடைத்ததால் இவை பண்டைய காலத்தில் புழக்கத்திலிருந்த நாணயங்கள் என்பது தெரியவந்தது. அண்மையில் தமிழ் நாட்டில் சங்க காலச் சேரரின் தலைநகராக இருந்த கருரிலும் ரோம, சங்க கால நாணயங்களுடன் இவை கிடைத்துள்ளன (Nagaswamy 1995:37-39). இவற்றிலிருந்து இவை உள்நாட்டு வர்த்தகத்தில் மட்டுமன்றி வெளிநாட்டு வர்த்தகத்திலும் பயன்படுத்தப்பட்டமை தெரிகிறது (Krishnamurthy Vol.Lil:59-61).

இந்நாணயத்தின் முன்புறத்தில் நிற்கும் நிலையில் பெண் வடிவமும், பின்புறத்தில் பீடத்துடன் கூடிய சுவஸ்திகாவும் முக்கிய சின்னங்களாக இடம் பெற்றுள்ளன. ஆனால் நாணயத்திற்கு நாணயம் வடிவமைப்பு, அளவு, எடை, சின்னங்கள் என்பவற்றால் வேறுபடுகின்றது. அண்மையில் பூநகரி வட்டாரத்திலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட நாணயங்கள் பெறப்பட்டன. இவற்றின் வடிவமைப்பு, சின்னங்கள் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு பதினொரு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன (புஷ்பரட்ணம் 1998 அ 1-13). அவை பின்வருமாறு.

| நாணய வகை | அளவு (அங்குலம்) | எடை (கிராம்) |
|---|---|---|
| 1 | 1.2 x 0.1 | 1.4 |
| 2 | 1,4 x 0,1 | 1.5 |
| 3 | 1,6 x 0,4 | 2.0 |
| 4 | 1,7 x 0,4 | 2.4 |
| 5 | 2,5 x 1,6 | 2.5 |
| 6 | 2,6 x 1,5 | 3.0 |
| 7 | 3,2 x 2,4 | 3.2 |
| 8 | 3.4 x 2,4 | 3.9 |
| 9 | 3.4 x2,5 | 5.8 |
| 10 | 3.4 x 2.6 | 5.6 |
| 11 | 3.7 x 2.8 | 5.3 |

நாணயத்தின் முன்புறத்தில் உள்ள பெண் லக்ஷ்மி வடிவம் எனக் கூறப்பட்டாலும் எல்லா நாணயங்களிலும் அவை ஒரேமாதிரியாக இருப்பதாகக் கூறமுடியாது. சில நாணயங்களில் இவ்வுருவம் அதிகம் வளர்ச்சியடையாது ஆரம்ப நிலையில் காணப்படுகிறது. பெரும்பாலான நாணயங்களில் தாமரை மலரில் நிற்கும் பெண்ணின் இரு கரங்கள் பாதத்திலிருந்து தோள்வரை செல்லும் தாமரைத் தண்டினைப் பிடித்தவாறு உள்ளது. சில நாணயங்களில் தாமரைத் தண்டிற்குப் பதிலாக வேல், சூலம், குத்துவிளக்குப் போன்ற உருவங்கள் காணப்படுகின்றது. பெரும்பாலான நாணயங்களில் பெண் ஆடையற்ற நிலையில் சித்தரிக்கப்பட்டாலும், சில நாணயங்களில் ஆடையுடன் காணப்படுகிறாள். சில நாணயங்களில் திரண்ட மார்பும், ஒடுங்கிய இடையும், வேறு சில நாணயங்களில் தட்டையான மார்பும், அகன்ற இடையும் கொண்டு காணப்படுகின்றது. பல நாணயங்களில் நேராக நிற்கும் பெண் உருவம் சில நாணயங்களில் இடம் அல்லது வலப்பக்கம் திரும்பி இடது கையால் முகத்தைத் தாங்கியவாறு காணப்படுகின்றது. சில பெண் உருவங்கள் காதணி, கைவளையல், காற்சலங்கை முதலான ஆபரணங்களுடன் காணப்பட, சில பெண் உருவங்கள் குறைந்த அல்லது ஆபரணமற்ற தன்மை கொண்டதாக உள்ளன. பல செப்பு நாணயங்களில் தாமரை மலரில் நிற்கும் பெண் உருவம் காணப் படுகிறது. தாமரை மலரிலிருந்து இரு தண்டுகள் பெண்ணின் இரு பக்கங்களிலும் மேலெழுந்து தோள் வரை சென்று பூத்துக் காணப்படுகின்றன (புஷ்பரட்ணம் 1998). பூவின் மேல் உள்ள இரு யானைகள் தும்பிக்கையால் பெண்ணின் மேல் நீர் தெளித்து அபிஷேகம் செய்யும் காட்சி இடம் பெற்றுள்ளது. இது ஸ்ரீசூக்கமத்தில் கஜலட்சுமி பற்றி வரும் வர்ணனையைப் பெருமளவு ஒத்துள்ளது (சிவசாமி 1974:29). கந்தரோடை, மாதோட்டம், அநுராதபுரம் போன்ற இடங்களில் கிடைத்த சில நாணயங்களில் தலைவிரி கோலமாகக் குந்தியிருக்கும் நிலையில் பெண் உருவம் காணப்படுகிறது (Seyone 1998:47, Parkar 1981:463-82). இதில் இடதுகால் தொங்கவிடப்பட்டு வலதுகால் மடிக்கப்பட்டுக் காணப்படுகிறது. இடதுகை தோள்வரை உயர்ந்து தாமரை மலரைத் தாங்கியவாறு உள்ளது. வலதுகை

மடிக்கப்பட்ட வலதுகாலைத் தொட்டு நிற்கிறது. தலைக்குப் பின்னால் திருவாசி போன்ற உருவம் காணப்படுகிறது. இந்த வேறுபாடுகளை நோக்கும் போது இவற்றில் உள்ள பெண்வடிவங்கள் கஜலக்ஷ்மியை மட்டும் குறிக்காது துர்க்கை, காளி போன்ற பிற பெண் தெய்வங்களையும் குறித்ததெனக் கருதலாம் (Sitrampalam 1992:51-58).

நாணயத்தின் பின்புறத்தில் சுவஸ்திகா முக்கிய சின்னமாக இடம் பெற்றிருந்தபோதிலும் எல்லா நாணயங்களிலும் முக்கியத்துவம் பெற்றிருந்ததாகக் கூறமுடியாது. மண்ணித்தலையில் கிடைத்த நாணயம் ஒன்றில் சுவஸ்திகாவுக்குப் பதிலாக சங்க காலப் பாண்டிய நாணயங்களில் வருவது போன்ற வேலியிடப்பட்ட மரம் காணப்படுகிறது. நிந்தவூரில் கிடைத்த இதே பெண் வடிவமுள்ள நாணயத்தின் பின்புறத்தில் சுவஸ்திகாவுடன் வேறு எட்டுச் சின்னங்கள் இடம் பெற்றுள்ளன (புஷ்பரட்ணம் 1998அ5). அவற்றுள் முக்கோண வடிவில் அமைந்த கொடிக்கம்பம், மத்தளம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. ஈழவூர், மண்ணித்தலை ஆகிய இடங்களில் கிடைத்த ஏனைய சில நாணயங்களில் சுவஸ்திகாவுடன் பூரணகும்பம், சிவலிங்கம், சக்கரம், விளக்கு போன்ற சின்னங்களும், சில குறியீடுகளும் உள்ளன. கந்தரோடை, முல்லைத்தீவு ஆகிய இடங்களில் கிடைத்த நாணயங்களில் சேவல், வேல், மயில், நந்திபாதம் போன்ற சின்னங்களும் காணப்படுகின்றன. கந்தரோடையில் கிடைத்த நாணயம் ஒன்றின் பின்புறத்தில் பீடத்துடன் கூடிய சுவஸ்திகாவுக்கு வலப்புறமாக ஸ்ரீவத்ஷாவும், இடப்புறமாக காளையும் காணப்படுவது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது (Seyone 1998:) (படம்–9). அண்மையில் அக்குறுகொட என்ற இடத்தில் கிடைத்த ஈய, செப்பு நாணயங்களின் பின்புறத்தில் கப்பல் உருவங்களும் பொறிக்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது (Bopearachchi 1999:95-96).

இந்நாணயங்கள் எங்கே, எப்போது தோன்றியதென்பதில் அறிஞர்கள் இடையே மாறுபட்ட கருத்துக்கள் உண்டு. ஒருசில அறிஞர்கள் இவற்றை இலங்கைக்கு உரிய சுதேச நாணயங்களாகக்

கருதுகின்றனர். பாக்கர் என்ற அறிஞர் இந்நாணயங்களை தென்னிந்தியாவிலிருந்து வந்து ஆட்சி செய்த தமிழ்மன்னர்கள் வெளியிட்டதாகக் கூறுகிறார் (Parkar 1981:94). பல அறிஞர்கள் இந்தியாவுடனான வணிகத் தொடர்பால் இந்நாணயங்கள் வந்திருக்கலாம் என நம்புகின்றனர். வடஇந்திய நாணயங்களில் கஜலக்ஷ்மி உருவங்கள் பொறிக்கப்பட்ட நாணயங்கள் கிடைத்திருப்பதால் அவற்றின் அடிப்படையில் காலப்போக்கில் இங்கும் வெளியிடப்பட்டிருக்கலாம் என்ற கருத்துண்டு. அண்மையில் தமிழ்நாட்டில் கரூர் என்ற இடத்தில் இவ்வகை நாணயங்கள் கிடைத்துள்ளன. இவைபற்றி ஆராய்ந்த இரா கிருஷ்ணமூர்த்தி தமிழ்நாட்டிற்கும் இலங்கைக்குமிடையிலான வணிகத் தொடர்பால் இவை இலங்கை சென்றதாகக் குறிப்பிட்டார் (Krishnamurthy 1991:59-61). ஆனால் இக்கூற்று பொருத்தமாகத் தோன்றவில்லை. தமிழ்நாட்டில் மூவேந்தரும், குறுநில மன்னரும் வெளியிட்ட நாணயங்கள் பரவலாகக் கிடைக்கப்பெற்றுள்ளன. இவ்வகை நாணயங்கள் ஒப்பீட்டளவில் மிக அரிதாகவே இலங்கையில் கிடைக்கப் பெற்றுள்ளன. இலங்கையில் எண்ணிக்கையில் அதிகமாகக் கிடைத்துவரும் லக்ஷ்மி நாணயங்கள் தமிழ்நாட்டில் அரிதாக கருவூரைத் தவிர பிற இடங்களில் இதுவரை கிடைத்ததாகத் தெரியவில்லை. தமிழ்நாட்டில் அல்லது இந்தியாவில் இவை வெளியிடப் பட்டிருக்குமாயின் அங்கு கூடுதலாகக் கிடைத்திருக்க வாய்ப்புண்டு.

அதேவேளை இவற்றை வடஇந்தியாவில் இருந்து கொண்டுவரப்பட்டதாகவோ அல்லது வடஇந்திய நாணயங்களைப் பார்த்து காலப்போக்கில் அதே வடிவத்தில் வெளியிடப் பட்டதாகவோ கூறுவதும் பொருந்துமாறில்லை. நாணயத்தில் பீடத்துடன் கூடிய சுவஸ்திகா காணப்படுகிறது. இந்த அம்சத்தை இந்திய நாணயங்கள் எதிலும் காணமுடியவில்லை. இது இலங்கைக்கு உரிய மரபு என்பதை ஏற்கனவே விளக்கியுள்ளோம். நாணயங்களில் லக்ஷ்மியின் உருவத்தைப் பொறிக்கும் மரபு இந்தியாவில் தொன்மையானது. இதன் ஆரம்பத்தை குஷான, குப்த நாணயங்களில்

காணலாம். ஆனால் இந்நாணயங்களில் வரும் லக்ஷ்மியின் தோற்றத்திற்கும், இலங்கையில் உள்ள லக்ஷ்மி நாணயத்தின் தோற்றத்திற்கும் எந்தவித தொடர்பும் காணப்படவில்லை. இலங்கை நாணயங்களில் உள்ள லக்ஷ்மியின் வடிவத்தை தொகுத்து நோக்கினால் அதில் பல படிமுறை வளர்ச்சி இருப்பதனைக் காணலாம். சில நாணயங்கள் புள்ளி கொண்டு வார்க்கப்பட்டுள்ளது. சில நாணயங்களில் வழக்கத்திற்கு மாறாக தட்டையான மார்பும், அகன்ற இடையும் காணப்படுகிறது. பூநகரியில் கிடைத்த சில நாணயங்களில் இவ்வுருவம் ஸ்ரீவத்ஷா நிலையிலிருந்து சற்று வளர்ச்சி அடைந்து காணப்படுகிறது. இன்னும் சில நாணயங்களின் முன்புறத்தில் லக்ஷ்மி வடிவமும், அதேநாணயத்தின் பின்புறத்தில ஸ்ரீவக்ஸ வடிவமும் காணப்படுகின்றன. அதேவேளை பல நாணயங்களில் ஸ்ரீ சூக்கத்தில் வரும் வர்ணனைபோல் லக்ஷ்மியின் தோற்றம் காணப்படுகிறது. வேறுபட்ட இந்த வடிவங்களை நோக்கும்போது பீடத்துடன் கூடிய சுவஸ்திகாபோல், நாணயங்களில் இடம் பெற்றுள்ள லக்ஷ்மியின் வடிவமும் இலங்கைக்குரிய மரபெனக் கருத இடமுண்டு.

இந்நாணயங்களை ஆராய்ந்த அறிஞர்களில் ஒருசாரார் இவற்றில் உள்ள சின்னங்கள் பௌத்த மதம் சார்ந்தவை எனவும், இன்னொரு சாரார் இந்து மதம் சார்ந்தவை எனவும் குறிப்பிட்டுள்ளனர். இந்தியாவின் பண்டைய கால நாணயங்களை ஆராய்ந்தால் அவற்றில் உள்ள சின்னங்கள் பலமதங்களுடன் தொடர்புடையதாக இருப்பதைக் காணலாம். தமிழகத்திலும், இலங்கையிலும் கிடைத்த சங்க கால நாணயங்கள் பற்றித் தொடக்க காலத்தில் ஆராய்ந்த அறிஞர்கள் அவற்றைச் சங்க கால மன்னர் வெளியிட்ட நாணயங்கள் எனக் குறிப்பிடாது, பௌத்த நாணயங்கள் என்றே குறிப்பிட்டனர். இதற்கு இந்நாணயங்களில் பௌத்த மதத்திற்கும் பொதுவான சின்னங்கள் இடம்பெற்றிருந்ததே காரணமாகும். இங்கே லக்ஷ்மி உருவம் பொறித்த நாணயங்களில் வரும் பூரணகும்பம், சுவஸ்திகா, தாமரை, யானை போன்ற சின்னங்கள் பௌத்த மதத்தோடும் தொடர்பு உடையதால் முன்புறத்தில் வரும்

சில பெண் உருவங்களுக்கும் பௌத்த விகாரையில் வரும் யக்ஷின் உருவங்களுக்கும் இடையே தொடர்பிருக்கலாம் என்ற கருத்துண்டு (Hettiaratchi 1950:104-122). ஆனால் இச்சின்னங்கள் பௌத்த மதத்திற்கு மட்டுமன்றி இந்து மதத்திற்கும் பொதுவானது. அதேவேளை இந்நாணயங்களில் வரும் நந்திபாதம், எருது, மயில், சேவல், வேல், குத்துவிளக்கு, சிவலிங்கம் போன்ற சின்னங்கள் சைவமதத்துடன் தொடர்புடையவை. சமகாலத்தில் வடஇந்திய நாணயங்கள் பலவற்றில் புத்தரது உருவத்துடன் கூடிய நாணயங்கள் வெளியிடப்பட்டிருந்தும் அவற்றின் செல்வாக்கை இலங்கையில் காணமுடியவில்லை. அதேவேளை பௌத்தமதச் சின்னங்களைப் பெரிதும் பிரதிபலிக்கின்ற இலங்கைக்குரிய திஸ, யானை–சுவஸ்திகா, சிங்கம்–சுவஸ்திகா, மரம்–சுவஸ்திகா போன்ற நாணயங்களில் வரும் சின்னங்களை லக்ஷ்மி உருவம் பொறித்த நாணயங்களில் அதிகம் காணமுடியவில்லை. குறிப்பாக பௌத்த சிங்களப் பண்பாட்டில் முதன்மைப்படுத்தப்படும் சிங்கம் இந்நாணயத்தில் இருந்ததற்கு இதுவரை சான்றுகள் இல்லை. இதனால் இவற்றை வெளியிட்டவர்கள் பெரும்பாலும் பிற்கால இந்துமதத்துடன் தொடர்புடையவர்கள் என்றே கூறலாம்.

இந்நாணயங்கள் எப்போது புழக்கத்திற்கு வந்தன என்பது குறித்து வேறுபட்ட கருத்துக்கள் உண்டு. அறிஞர்களில் ஒருசாரார் இவை கிறிஸ்துவுக்குப் பிற்பட்ட காலத்தில் புழக்கத்திற்கு வந்ததாகக் கருதுகின்றனர். முல்லைத்தீவில் கிடைத்த நாணயங்கள் பற்றி ஆராய்ந்த பாக்கர் நாணயங்களில் வரும் சின்னங்களையும், பாளி இலக்கியங்கள் கூறும் அரசியல் வரலாற்றையும் தொடர்புபடுத்தி இவை தோன்றிய காலம் கி.மு.2–ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதாக இருக்கலாம் எனக் கணித்துள்ளார் (Parkar 1981:94). அண்மையில் அநுராதபுர அகழாய்வில் பெறப்பட்ட கலாசாரச் சின்னங்களுடன் இவ்வகை நாணயங்களும் கிடைத்துள்ளன (Bopearachchi 1998:154). இக்கலாசாரப்படை கி.மு.2–ஆம் நூற்றாண்டெனக் கணிப்பிடப்பட்டுள்ளது. ஆனைக்கோட்டையில் பெருங்கற்காலப் புதைகுழியிலிருந்து ஒரு நாணயம் பெறப்பட்டது (Ragupathy 1987:124). இப்புதை

குழியில் கிடைத்த சாசன முத்திரையொன்றின் காலம் கி.மு.3,2–ஆம் நூற்றாண்டெனக் கணிப்பிடப்பட்டுள்ளது. இக்காலக்கணிப்புகளை வைத்து நோக்கும்போது லக்ஷ்மி நாணயத்தின் தோற்றகாலம் கி.மு. 2–ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதென எடுத்துக் கொள்ள இடமுண்டு. ஆயினும் பல இடங்களில் பிற்பட்ட உரோமர் கால நாணயங்களுடனும் இவை கிடைத்து இருப்பதால் இதன் புழக்கம் கி.பி.4,5–ஆம் நூற்றாண்டு வரை இருந்ததெனக் கூற முடியும்.

இற்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்நாணயங்கள் பற்றி ஆராய்ந்த பாக்கர் இவற்றை வெளியிட்டவர்கள் தமிழ்நாட்டிலிருந்து வந்து ஆட்சி புரிந்த எல்லாளன் போன்ற தமிழ் மன்னர்களாக இருக்கலாம் என்றார். அவரின் கூற்று இன்று பல நிலையிலும் ஏற்கக் கூடியதாகவே உள்ளது. ஆனால் இக்காலத்தில் வெளியிடப்பட்ட பிற நாணயங்களின் பயன்பாடு பெரும்பாலும் குறிப்பிட்ட காலப்பகுதிக்குரியதாக இருக்கும் போது இந்நாணயங்கள் 700ஆண்டுகளுக்கு மேல் புழக்கத்தில் இருந்தன எனக் கூறக்கூடிய சான்றுகள் கிடைத்துள்ளன. அத்துடன் நாணயங்களின் வடிவமைப்பு, சின்னங்கள் என்பவற்றிலும் பல மாறுபாடுகள் உள்ளன. இதற்கு இந்நாணயங்கள் வெளியிடப்பட்ட காலங்கள் அல்லது வட்டாரங்கள் வேறுபட்டதாக இருக்கலாம். இந்நிலையில் இவற்றைக் குறிப்பிட்ட மன்னன் அல்லது குறிப்பிட்ட வம்சம் குறிப்பிட்ட காலப்பகுதிக்குள் வெளியிட்டதெனக் கூறுவது மேலும் ஆராயப்பட வேண்டிய ஒன்று. நாணயத்தில் வரும் லக்ஷ்மி, ஸ்ரீவக்ஷா, சுவஸ்திகா என்பன செல்வச் செழிப்பைக் காட்டுபவை. நாணயத்தில் கப்பல் உருவம் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளமை இவற்றை வெளியிட்டவர்களுக்கு கடல் வாணிபத்துடன் தொடர்பு இருக்கலாம் என்பதை உறுதிப்படுத்துவதாக உள்ளது. தென்னிலங்கையில் கிடைத்த சாத்தன் என்ற தமிழ் வணிகன் பெயர் கொண்ட நாணயத்தில் வரும் மயில் சின்னம் லக்ஷ்மி உருவம் பொறித்த நாணயங்களிலும் காணப்படுகிறது. பண்டைய காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்கள் பலவும் இலங்கைக்குள் கிடைத்திருக்கும் போது இந்நாணயங்கள் மட்டும் சங்க காலச் சேரரின் முக்கிய

வர்த்தக மையமாக இருந்த கரூரில் கிடைத்துள்ளன. சமகாலக் கல்வெட்டுக்களிலும், பாளி இலக்கியங்களிலும் தமிழ் வணிகர்கள் பற்றியும், அவர்கள் ஒரு குழுவாக வணிகத்தில் ஈடுபட்டமை பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன. இப்பின்னணியில் வைத்துப் பார்க்கும் போது இந்நாணயங்களை அநுராதபுரத்தில் ஆட்சிபுரிந்த தமிழ் மன்னர்களுடன் தொடர்புபடுத்துவதைவிட தமிழ் வணிகர்களுடன் அல்லது வட்டார அடிப்படையில் அதிகாரம் செலுத்திய தமிழ்த் தலைவர்களுடன் தொடர்புபடுத்துவதே பொருத்தமாகத் தெரிகிறது.

## தலையுருவம் பொறித்த நாணயம்

இலங்கையில் மன்னன் உருவம் பொறித்த நாணயங்கள் பிற்காலத்திலேயே வெளியிடப்பட்ட தென்ற கருத்து நீண்டகாலமாக இருந்து வந்துள்ளது. அதிலும் மார்புடன் கூடிய மனித தலையுருவம் (Portrait) இலங்கையில் வெளியிடப்படவில்லை என்பது பலரது கருத்தாகும். அவ்வாறு வெளியிடப்பட்டவை கிரேக்க, ரோம நாணயங்கள் எனக் கூறப்பட்டன. இந்தியாவில் இம்மரபு பண்டு தொட்டு இருந்து வந்துள்ளது. சங்க காலத்தில் மன்னனின் மார்பளவு உருத்துடன் அவன் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளன. இதற்கு மாக்கோதை, குட்டுவன் கோதை, கொல்லிப்புறை, கொல் இரும்புறை போன்ற சேரமன்னர்களின் நாணயங்களைக் குறிப்பிடலாம் (கிருஷ்ணமூர்த்தி 1986, 1987, 1990, சீதாராமன் 1994). இலங்கையின் பண்டைய நாணயங்கள் பெரும்பாலும் இந்திய நாணய மரபின் சிறப்பாக ஆந்திர நாணய மரபின் செல்வாக்கிற்கு உட்பட்டதினால் இம்மரபு இலங்கையிலும் ஏற்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இதையுறுதிப்படுத்தும் வகையில் தென்னிலங்கையில் முழுமனித வடிவங்கள் பொறிக்கப்பட்ட பண்டைய கால நாணயங்கள் சில கிடைத்துள்ளன. அவற்றில் சிலவற்றில் பிராமி எழுத்தில் மல்லக திஸஹ, நாஹ போன்ற பெயர்களும் இடம்பெற்றுள்ளன (Bopearachchi 1999:53,57). அத்துடன் மார்பளவு உருவம் கொண்ட நாணயங்களும் வெளியிடப்பட்டிருக்கலாம் என்பதை இங்கு கிடைத்த களிமண் நாணயம்

ஒன்று உறுதிப்படுத்துகிறது (Bopearachchi 1999:105). இது நாணயத்திற்குரிய அச்சால் களிமண்ணில் பதிக்கப்பட்டதைக் (Seal impression on clay) காட்டுகிறது. இவற்றில் இருந்து சங்க காலத்தைப் போல் இலங்கையிலும் மன்னன் அல்லது மனிதனின் மார்பளவு உருவம் பொறித்த நாணயங்கள் வெளியிடப்பட்டன எனக் கூறலாம். அவற்றை உறுதிப்படுத்துவதாக வடஇலங்கையில் கிடைத்த நாணயம் ஒன்று விளங்குகின்றது. அதன் விபரம் வருமாறு (படம்-10).



| | | |
|---|---|---|
| இடம் | : | கல்முனை(பூநகரி) |
| உலோகம் | : | செப்பு |
| விட்டம் | : | 0.8செ.மீ. |
| எடை | : | 1.8 கிராம். |
| முன்புறம் | : | இடப்புறம் நோக்கிய மன்னன் உருவம். |
| பின்புறம் | : | இடப்புறம் நிற்கும் உருவம், மத்தியில் கைப்பிடியுடன் கூடிய சூலம். வலப்புறம் நிற்கும் நிலையில் மனித உருவம். |

இந்நாணயத்தில் உள்ள மனிதனின் முகம் அகன்றும், உதடு தடித்தும் மூக்கு நீண்டும், கண் புடைப்பு நிலையிலும் காணப்படுகின்றது. நெற்றியில் சாதவாகன நாணயங்களில் வருவது போன்ற நெற்றிப் பட்டயமும், தலையின் பின்புறத்தில் குஞ்சமும் காணப்படுகின்றது. நாணயத்தின் பின்புறத்தில் இடது, வலது பக்கமாக நிற்கும் நிலையில் இரு மனித உருவங்கள் உள்ளன. அதன் தலைமேல் உயரமான தலைக்கவசம் காணப்படுகின்றது.

இரு மனித உருவங்களுக்கிடையில் கைப்பிடியுடன்கூடிய சூலம் உள்ளது. இந்நாணயத்தில் வரும் உருவங்களுக்கும், கிரேக்க, உரோம நாணயங்களுக்கும் இடையே எந்தவித ஒற்றுமையும் காணப்படவில்லை. சங்க காலத்தில் சேரமன்னர் இவ்வகை நாணயங்களை வெளியிட்டிருந்த போதிலும் இவற்றிற்கும் வடஇலங்கையில் கிடைத்த நாணயத்தில் உள்ள மனித முகபாவங்களிடையேயும் எந்தவித ஒற்றுமையும் காணப்படவில்லை. மேலும் நாணயத்தின் பின்புறத்தில் இடம் பெற்றுள்ள கைப்பிடியுடன் கூடிய சூலத்தை சங்ககால நாணயங்களில் மட்டுமன்றி இந்திய நாணயங்களிலும் காணமுடியவில்லை.ஆனால் தென்னிலங்கையில் கிடைத்த மல்லக திஸஹ என்ற பெயர் பொறித்த நாணயத்தில் வரும் சூலத்திற்கும் இந்நாணயத்தில் வரும் சூலத்திற்கும் இடையில் நெருங்கிய தொடர்பு காணப்படுகின்றது. இவற்றின் அடிப்படையில் வடஇலங்கையில் கிடைத்த நாணயத்தை இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்களுடன் தொடர்புபடுத்த இடமுண்டு.

உரோம நாட்டிற்கும், தமிழ் நாட்டிற்கும் இடையிலான வணிகத் தொடர்பால் தமிழ்நாட்டிலேயே உரோம நாணயங்கள் வெளியிடப்பட்டன. இது சங்ககால மன்னர் தலை உருவம் பொறித்த நாணயங்கள் வெளியிடக் காரணமாக அமைந்தது (Krishnamurthy 1997). இம்மரபு இலங்கையில் இருந்ததா? என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாதுள்ளது. ஆனால் உரோம மன்னன் உருவம் பொறித்த சுடுமண் நாணய அச்சு ஒன்று வடஇலங்கையில் பூநகரி மண்ணித்தலை என்ற இடத்திலிருந்து எமக்கு கிடைத்துள்ளது. இது 1.2 செ.மீ., விட்டமும், 3.9 கிராம் நிறையும் உடையது (படம்–11).





இதுபோன்ற சுடுமண் அச்சு கந்தரோடையிலும் கிடைத்ததாகப் பேராசிரியர் இந்திரபாலா அவர்கள் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இவை உரோம நாணய முறையைப் பின்பற்றி அல்லது அவற்றில் சில மாற்றங்களைச் செய்து தலை உருவம் பொறித்த நாணயங்கள் இலங்கையில் வெளியிட்டிருக்கலாம் என்பதைக் காட்டுகின்றன. இதுபோன்ற நாணயங்கள், நாணய அச்சுக்கள் எதிர்காலத்தில் கிடைக்கும் பட்சத்தில் இக்கருத்து மேலும் உறுதிபெறலாம்.

மேற்கூறப்பட்டவற்றில் இருந்து பண்டைய காலத்தில் தமிழகத்தைபோல் இலங்கையிலும் தமிழ் மன்னர்கள் நாணயங்கள் வெளியிடப்பட்டமை தெரிகிறது. இவற்றை இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்கள், வர்த்தகர்கள் மற்றும் வட்டார அடிப்படையில் அதிகாரம் செலுத்திய தலைவர்கள் வெளியிட்டிருக்கலாம். இலங்கையின் அரசியல் வரலாறு பற்றிக் கூறும் பாளி நூல்களில்

அக்காலத்தில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்களின் வரலாறு சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. அவர்களுள் இலங்கையில் ஆட்சி புரிந்த முதல் தமிழ்மன்னர்களாக சேன (Sena) குத்தக (Guttaka) என்போர் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் அநுராதபுரத்தில் கி.மு.3ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த *சூரதிஸ்ஸ* (Suratissa) என்ற மன்னனைப் பெரும் படையுடன் வந்து வெற்றி கொண்டு 22 வருடங்கள் (கி.மு.177–155) நீதிதவறாது ஆட்சிபுரிந்தனர் (M.V.XXI :10-11). இவர்கள் குதிரை வர்த்தகம் செய்தவனின் பிள்ளைகள் எனப் பாளி நூல்கள் கூறுவதால் இவர்கள் அரசசார்பின்றிப் படையெடுத்தவர்கள் எனக் கூறப்படுகிறது. இம்மன்னர்களைத் தொடர்ந்து மீண்டும் ஒரு தமிழர் படையெடுப்பு கி.மு.2ஆம் நூற்றாண்டில் அசேலா மன்னன் ஆட்சியில் ஏற்பட்டது. சோழ உயர்குடியிற் பிறந்த எல்லாளன் (Elara– எல்லாரா) என்ற தமிழன் ஆட்சியிலிருந்த மன்னனை வெற்றி கொண்டு 44 ஆண்டுகள்(கி.மு. 145–101) தொடர்ச்சியாக ஆட்சி புரிந்தான். இலங்கை அரசியல் வரலாற்றில் நீண்டகாலம் ஆட்சிபுரிந்த முதல் மன்னன் என்ற பெருமை இவனுக்குரியது. இவனது நெறிதவறாத, நீதிமாறாத ஆட்சி பற்றிப் பல கதைகள் கூறப்பட்டுள்ளன (M.V. XXI :15-34). இவன் தனது ஆட்சியில் பௌத்த மதத்திற்கு ஆதரவு கொடுத்த போதிலும் பழைய மதநம்பிக்கையைக் கைவிடவில்லையென மகாவம்சம் கூறுகிறது (XXI :34). இம்மன்னன் துட்டகாமினி (Duttagamini) மன்னனால் தோற்கடிக்கப்பட்ட ஏழாவது நாள் இவனின் மருமகன் பல்லுக (Balluka) தலைமையில் 6000 வீரர்களைக் கொண்ட படையொன்று மாதோட்டத்தில் வந்திறங்கி அநுராதபுரம் நோக்கி முன்னேறிய போது அப்படையைத் துட்டகாமினியின் படைத் தளபதி புஸ்ஸதேவ (Phussadeva) என்பவன் கொலம்பகலா (Kolambahala) என்ற இடத்தில் தோற்கடித்தான் (M.V. XXV :76- 87).

கி.மு.2ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குறிப்பாக வட்டகாமினி மன்னன் ஆட்சி செய்த காலத்தில் (கி.மு.104) ஏழு தமிழர்கள் தமது படையுடன் மாதோட்டத்தில் வந்திறங்கினர், அப்போது

தென்னிலங்கையிலிருந்து தனக்கு எதிராகப் போராடிய *திஸ* என்ற பிராமணனுடன் வட்டகாமினி சமாதானம் செய்து திஸனை தமிழருக்கு எதிராகப் போராடுமாறு தூண்டினான் (M.V. XXXIII :37-41). ஆயினும் படையெடுத்து வந்த தமிழர்கள் கொலம்பகலா என்ற இடத்தில் திஸனுடைய படைகளை வெற்றி கொண்டு அநுராதபுர அரசை வெற்றி கொண்டனர். இத்தமிழர்களில் ஒருவன் வட்டகாமினியின் மனைவியுடனும், இன்னொருவன் புத்தரது பிச்சாபாத்திரத்துடனும் மறுகரைக்குத் திரும்பிச் சென்றனர். ஏனைய ஐந்து தமிழர்களான புலகத்தா (Pulahattha), பாகியா (Bahiya), பணயமாற ( Pana ya mara), பிளையமாற (Pilayamara), தாடிக (Dathika) என்போர் மாறி மாறி 14 வருடம் 7 மாதங்கள் ( கி.மு.102–87) ஆட்சி புரிந்தனர் (XXXIII :55-61). இத்தமிழ் மன்னர்களைத் தொடர்ந்து ஆட்சிக்கு வந்த மகாதிஸன் ஆட்சியில் பல குழப்பங்கள் ஏற்பட்டன. அரசமரபைச் சாராத சோரநாக தனக்கு புகலிடம் அளிக்காத விகாரைகளைத் தரைமட்டமாக்கினான். இதனால் இவன் ஆட்சியை முடிவுக்கு கொண்டு வந்த இவன் மனைவி அனுலாதேவி வடுக (ஏயவரமய) என்ற தமிழனை அரசனாக்கினாள். இவன் 1வருடம் 2மாதங்கள் (கி.மு. 47) ஆட்சி புரிந்தான். பின் இவனைக் கொன்றுவிட்டு அரண்மனைப் புரோகிதனாகவிருந்த நீலிய ( Niliya) என்ற தமிழனை அரசனாக்கினாள். இவன் 6மாதங்கள் (கி.மு.47) ஆட்சி புரிந்தான். இவர்கள் இருவரும் படையெடுப்பின்றியே ஆட்சிக்கு வந்துள்ளனர்.

கி.பி. 1ஆம் நூற்றாண்டின் பின்னர் இலங்கை – தமிழக அரசியல் உறவில் சிறிய மாறுதல் ஏற்பட்டதைப் பாளி இலக்கியங்கள் கூறுகின்றன. இக்காலத்திலிருந்து முன்னரைப் போல் தமிழர் படையெடுத்து வந்து இலங்கையில் ஆட்சியைக் கைப்பற்றிய அதேவேளை இலங்கையில் அரசுரிமையை இழந்த மன்னர்கள் மற்றும் அரசவம்சத்தினர் சிலர் தமிழ்நாடு சென்று தமிழர் படையுடன் வந்து மீண்டும் ஆட்சியைக்கைப்பற்றும் நிலை காணப்படுகிறது. இலம்பகர்ண மன்னனால் சிறையில் அடைக்கப்பட்ட இளநாக என்பவன் அங்கிருந்து தப்பி மறுகரைக்குச் சென்று 3ஆண்டுகளின் பின்னர் பெரும் படையுடன்

வந்து ஆட்சியைக் கைப்பற்றி 6வருடங்கள் (கி.பி. 38–44) ஆட்சிபுரிந்தான் ( M.V. XXXV :45). இவனுடைய மனைவி தமிழாதேவி (Damiladevi) எனக் குறிப்பிடுவதிலிருந்து இவள் ஒரு தமிழ்ப் பெண் என்பது தெரியவருகிறது. சங்க இலக்கியத்தில் நாகன் என்ற பெயருடன் இளநாகன் (இளநாகனார்) என்ற பெயரும் சில இடங்களில் வருகின்றன (நற் 151, 205, 231). வங்கநாகதிஸ மன்னன் ஆண்ட காலத்தில் (கி.பி.110–112) சங்ககால மன்னர்களில் ஒருவனாகிய கரிகாற் சோழன் இலங்கை மீது படையெடுத்து 12000 பேரைச் சிறை பிடித்து காவேரிக்கு அணைகட்டுவித்தான் எனக் கி.பி.13 ஆம் நூற்றாண்டுக்குரிய இராசவலிய என்ற சிங்கள நூல் கூறுகிறது. இதற்குப் பதிலாக கஜபாகு மன்னன் தமிழ்நாட்டின் மீது படையெடுத்து இரண்டு மடங்கு தமிழர்களை இலங்கைக்கு கொண்டு வந்ததாக இந்நூல் மேலும் கூறுகிறது.

கி.பி.5ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பண்டு என்பவன் தலைமையில் படையெடுத்து வந்த தமிழர்களில் பண்டு, அவன் மகன் பரிந்த, குட்டபரிந்த, திரிந்தர, தாட்டிக, பிட்டிய ஆகிய தமிழ் மன்னர்கள் மாறிமாறி 27 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் (C.V.38:29-34). இப்படையெடுப்புக்கு தலைமைவகித்தவன் பண்டு என இருப்பதால் இவர்களைப் பாண்டிய வம்சத்தவர் எனக் கூறப்படுகிறது. ஆனால் இராஜவலிய என்ற நூல் இவர்களைச் சோழ நாட்டிலிருந்து வந்தவர்கள் எனக் குறிப்பிடுகிறது (Pillai 1975:49). இவர்கள் ஆட்சி தென்னிலங்கை வரை பரவியிருந்ததை அறகம, கதிர்காமம் போன்ற இடங்களில் கிடைத்த கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன (E.Z.III:111-115).

இத்தமிழ் மன்னர்களுடன் மேற்குறிப்பிட்ட சில வகை நாணயங்களைத் தொடர்பு படுத்தினால் இவற்றை வெளியிட்ட தமிழர்கள் இலங்கைக்குரியவர்களா? அல்லது அவ்வப்போது தமிழ் நாட்டிலிருந்து வந்து ஆட்சியைக் கைப்பற்றிய தமிழர்களா? என்ற கேள்வி எழுகின்றது. பாளி நூல்கள் வடுகன், நீலியன் தவிர்ந்த ஏனைய தமிழ் மன்னர்கள் படையெடுப்பாளர், வர்த்தகர் என

அக்கரையில் இருந்து வந்த அன்னியர் எனக் கூறுகின்றன. இவற்றின் அடிப்படையில் இவர்கள் தமிழகத்தில் இருந்து வந்தவர்கள் என வரலாற்றறிஞர்கள் பலரும் கூறுகின்றனர். பண்டு தொட்டு தமிழகத்துடன் இருந்து வரும் உறவு இக்காலத்திலும் இருந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இதனால் இக்காலத்தில் ஆட்சியில் இருந்த தமிழர்கள் அனைவரும் அவ்வப்போது தமிழகத்தில் இருந்து வந்தவர்கள் என்ற முடிவுக்கு வருவதில் பல முரண்பட்ட நிலைகள் காணப்படுகின்றன. பாளி இலக்கியங்கள் தமிழ் மன்னர்களைத் தமிழகத்துடன் தொடர்பு படுத்திக் கூறினாலும், இலங்கையுடனான வர்த்தகப், பண்பாட்டுத் தொடர்புகளைக் கூறும் சங்க இலக்கியத்தில் இலங்கையுடனான அரசியல் உறவு பற்றி எந்தக் குறிப்பும் காணப்படவில்லை. அத்துடன் இக்காலத்தில் தமிழ் நாட்டின் இயற்கை எல்லையைத் தாண்டி இன்னொரு நாட்டின் மீது படையெடுக்கும் அளவிற்கு தமிழ் நாட்டில் பலமான அரசு தோன்றியதாகவும் தெரியவில்லை. இலங்கைத் தமிழ் மன்னர் தொடர்பான பெயர்களையும், சங்க இலக்கியத்தில் வரும் தமிழ் நாட்டு மன்னர்கள் தொடர்பான பெயர்களையும் ஒப்பிடுகின்ற போது அவற்றிடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. இலங்கைத் தமிழ் மன்னர்களை சோழர், பாண்டியர் போன்ற வம்சங்களுடன் தொடர்புபடுத்திப் பாளி இலக்கியங்கள் கூறுகின்றன. தமிழ் நாட்டில் இவ்வம்சங்கள் வெளியிட்ட நாணயங்கள் அனைத்திலும் அவர்களின் குலச் சின்னங்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் இலங்கையில் கிடைத்த தமிழ் நாணயங்களில் இந்த அம்சத்தை காணமுடியவில்லை. ஒரு சில நாணயங்களில் பாண்டிய வம்சத்துடன் தொடர்புடைய மீன் சின்னம் காணப்பட்டாலும், ஏனைய அம்சங்கள் சங்க காலப் பாண்டிய நாணயங்களில் இருந்து வேறுபடுகின்றன. ஆகவே இலங்கையில் பண்டு தொட்டு வாழ்ந்து வரும் தமிழர் தொடர்பாகக் கிடைத்த நம்பகரமான சான்றுகளின் அடிப்படையில் வைத்து நோக்கும் போது மேற்குறிப்பிட்ட நாணயங்களை இலங்கைத் தமிழர்களே வெளியிட்டார்கள் எனக் கூறுவது முற்றிலும் பொருத்தமாகும்.

## வடஇலங்கை அரசு கால நாணயங்கள்

இலங்கையில் ஒரு மன்னன் ஆளுகைக்குட்பட்ட தமிழரசு எப்போது தோன்றியதென்பதில் அறிஞர்களிடையே வேறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. யாழ்ப்பாண அரசு தொடர்பாகத் தோன்றிய தமிழ் இலக்கியங்கள் கதிரைமலையைத் தலைநகராகக் கொண்ட அரசு சோழர் வருகையுடன் சிங்கை நகருக்கு இடம் மாறியதாகவும், பின்னர் அது நல்லூருக்கு இடம் மாற்றப்பட்டதாகவும் கூறுகின்றன (இரகுநாதையர் 1942, சபாநாதன் 1953). சிங்கள இலக்கியங்கள் இவ்வரசின் தலைநகராக யாழ்ப்பாணத்தைக் கூறுகின்றன (Gunawardene 1924:246). இச்சான்றுகள் வேறுபட்ட தலைநகரங்களின் கீழ் தமிழரசு இருந்திருக்கலாம் என்பதைக் காட்டுகின்றன. ஆனால் 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் முதன்முதலில் ஒரு மன்னன் ஆளுகைக்கு உட்பட்ட அரசு நல்லூரைத் தலைநகராகக் கொண்டு தோன்றியதென்ற கருத்துடைய அறிஞர்களில் ஒருசாரார் சிங்கையும், யாழ்ப்பாணமும் நல்லூருக்கு உட்பட்ட இடம் எனவும், தமிழ் இலக்கியத்தில் வரும் கதிரைமலை அரசு கற்பனைப்படுத்தப்பட்டதெனவும் கூறுகின்றனர்.

ஆதிகாலம் தொட்டு இலங்கை வரலாறு கூறும் பாளி இலக்கியங்களில் வடஇலங்கை நாகதீபம் என்ற பெயரால் தனித்து இனங்காணப்பட்டுள்ளது. ஆயினும் கி.பி.7ஆம் நூற்றாண்டுவரை இவ்வட்டாரத்துடன் அநுராதபுர அரசிற்கிருந்த அரசியல் உறவு பற்றி எதுவுமே கூறப்படவில்லை. கி.பி.7ஆம் நூற்றாண்டிலிருந்து சில சம்பவங்கள் கூறப்பட்டாலும் அவை அநுராதபுர அரசிற்கெதிராக

மேற்கொள்ளப்பட்ட கிளர்ச்சிகள், படையெடுப்புக்கள் பற்றியதாகவே உள்ளன (C.V44:70-73, 47:2-750:12-42). தமிழ் நாட்டில் பத்தியியக்கத்தின் தோற்றமும், வணிக கணங்களின் எழுச்சியும், பல்லவ அரசின் வளர்ச்சியும் சமகாலத்தில் இலங்கையில் பல பாதிப்புக்களை ஏற்படுத்தின. இக்காலத்திலிருந்து தமிழ் நாட்டு வம்சங்கள் இலங்கை மீது படையெடுத்த போது வடஇலங்கை அதற்கு முக்கிய களமாக அமைந்தது (Silva 1981:20-21). அத்துடன் இங்கிருந்த தமிழர்களும் தமிழகப் படையெடுப்பாளருடன் இணைந்து சிங்கள மன்னர்களைத் தோற்கடிக்கக் காரணமாக அமைந்தது (C.V.49:84). மேற்கூறப்பட்ட ஒருசில வரலாற்றுச் சம்பவங்களுடன், அண்மைக் காலத்தில் கிடைத்த தொல்லியல் சான்றுகளையும் ஒப்பிடுகின்றபோது தமிழ் இலக்கியங்கள் கூறும் வேறுபட்ட தலைநகரங்களை கொண்ட தமிழ் அரசுகளை முற்றாகக் கற்பனைப்படுத்தப்பட்டவை எனக் கூறமுடியாதிருக்கிறது.

நாணயங்களை அடிப்படையாகக் கொண்டு கதிரமலை அரசு காலத்திலும், சிங்கை நகரைத் தலைநகராகக் கொண்ட அரசு காலத்திலும் பல வகை நாணயங்கள் வெளியிடப்பட்டதெனக் கூறமுடிகிறது. இதில் கதிரமலை எனத் தமிழ் இலக்கியங்கள் கூறும் தலைநகர் கந்தரோடை என்பது வரலாற்றறிஞர்கள் பலரது கருத்தாகும் (Rasanayagam 1926, சுவாமி ஞானப்பிரகாவர் 1928). இதற்கு பண்டைய காலத் தொல்லியற் சின்னங்கள் பலவும் இவ்வட்டாரத்தில் கிடைத்திருப்பதை முக்கிய சான்றுகளில் ஒன்றாகக் காட்டியுள்ளனர். சிங்கை நகரை சிலர் வல்லிபுரமாகவும் (சுவாமி ஞானப்பிரகாவர் 1928), இன்னும் சிலர் நல்லூருக்கு உட்பட்ட இடமாகவும் குறிப்பிட்டுள்ளனர் (இந்திரபாலா 1972, Pathmanathan 1978). ஆனால் சமகால பாளி, தமிழ் இலக்கியங்களில் வரும் வரலாற்றுச் சம்பவங்கள், இடப்பெயர்கள், தொல்லியல் சான்றுகள் என்பவற்றின் அடிப்படையில் இதை வன்னிப்பிராந்தியத்தில் இருந்த தலைநகராக எடுக்கலாம் (புஷ்பரட்ணம் 2000:108-196) இதற்கு வடஇலங்கையில் சிறப்பாக வன்னிப்பிராந்தியத்தில் பெறப்பட்ட நாணயங்கள் மேலும் ஒரு முக்கிய சான்றாகக் காணப்படுகின்றன.

## கதிரைமலை அரசு கால நாணயங்கள்?

வடஇலங்கையில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வின் போது காலத்திற்கு காலம் பல வகை நாணயங்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் சில சங்க கால நாணயங்களை ஒத்த வடிவிலும் ஆனால் அவற்றின் சின்னங்கள் சற்றுப்பிற்பட்ட கால நாணயங்களில் வருவதனையும் ஒத்துக் காணப்படுகின்றன. தமிழகத்தில் கிடைத்த பாண்டிய நாணயங்கள் பற்றி 1966இல் பிடுப் எழுதிய நூல் ஒன்றில் வடஇலங்கையில் கிடைத்த பாண்டிய நாணயங்களை அவற்றின் அமைப்பு, சின்னங்கள் என்ற அடிப்படையில் மூன்று வகையாகப் பிரித்து ஆராய்ந்துள்ளார் (Biddulph1966:32-5, 54-55, Plate.III, Nos 51-65). இது போன்ற ஒரு ஆய்வையே அண்மையில் மைக்கல் மிச்சினரும் மேற்கொண்டுள்ளார் (Mictchiner1999:134-137). இவர்கள் இருவரும் இந்நாணயங்களில் காணப்படும் சில தனித்துவமான அம்சங்களைக் குறிப்பிட்டுள்ள போதிலும், இவற்றில் மீன் சின்னம் இடம்பெற்றிருப்பதால் இவற்றைத் தமிழகத்தில் ஆட்சிபுரிந்த பாண்டிய மன்னர்களே வெளியிட்டனர் என்ற கருத்தை முன்வைத்துள்ளனர். இவர்கள் இந்நாணயங்களை வடஇலங்கையில் கிடைத்ததாகப் பொதுவாகக் குறிப்பிட்டுள்ளபோதிலும் அவை எந்த இடத்தில் கிடைத்ததென்பதைக் குறிப்பிடவில்லை. ஆனால் இவர்கள் குறிப்பிட்டுள்ள மூன்றுவகை நாணயங்களில் பெரும்பாலானவை வடஇலங்கையில் சிறப்பாக வன்னிப்பிராந்தியத்தில் குறிப்பிட்ட சில மையங்களில் எமக்கும் கிடைத்துள்ளன. அவற்றுள் முதலாவது வகை நாணயங்களை நோக்கலாம்(படம்–1 ).

இந்நாணயங்கள் பூநகரி வட்டாரத்திலுள்ள கல்முனை, மட்டுவில் நாடு, பாலாவி போன்ற இடங்களில் கிடைத்தவை. இவையனைத்தும் சதுரவடிவில் அமைந்த செப்பு நாணயங்களாகும். இவற்றின் நீள அகலம் எடை என்பவற்றில் பல வேறுபாடுகள் காணப்பட்டாலும் இவை சராசரி 1. 8x1. 6 செ.மீ நீள அகலமும், 2. 8 கிராம் எடையும் உடையன. இவற்றின் முன்புறத்தில் விளிம்பைச்



சுற்றி சிறு புள்ளிகளாலான வட்டமும் வட்டத்திற்குள் இரு குத்து விளக்கும், அதன் நடுவில் கிடையான அமைப்பில் மீன் சின்னமும் காணப்படுகிறது. இந்த அம்சமே நாணயத்தின் பின்புறத்திலும் காணப்படுகிறது. இதே சின்னங்கள் வடஇலங்கையில் கிடைத்த வட்டவடிவில் உள்ள நாணயங்களிலும் காணப்படுகின்றன.

பிடுப்பே இந்நாணயங்களை இலங்கையை வெற்றி கொண்ட ஸ்ரீமாறஸ்ரீபல்லவன் ஒன்பதாம் நூற்றாண்டில் வெளியிட்டிருக்கலாம் எனக் கூறுகிறார் (1966:32). ஆனால் தமிழகத்தில் இவன் வெளியிட்ட நாணயங்கள் வட்டவடிவில் இருப்பதுடன் முன்புறத்தில் இரு மீன் சின்னங்களுடன் பின்புறத்தில் தமிழில் "ஸ்ரீஅபனிபசேகர கோளக" என்ற பெயரும் காணப்படுகிறது (Nagaswamy 1981:83). இந்த அம்சம் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களில் இருந்து முற்றிலும் வேறுபட்டது. வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களில் பெரும்பாலானவை சதுரவடிவில் உள்ளன. இவ்வடிவ நாணயங்கள்

தமிழ் நாட்டில் பெரும்பாலும் சங்ககாலத்திலேயே வெளியிடப்பட்டன. ஆனால் சங்க கால நாணயங்களுக்கும் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களுக்கும் அடிப்படையில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. சங்ககால நாணயங்களில் கோட்டுருவில் காட்டப்பட்டுள்ள மீன் சின்னம் இங்கே உருவமாக வார்க்கப்பட் டுள்ளது. சங்ககால நாணயங்களின் பின்புறத்தில் தனியொரு சின்னமாக இடம்பெற்றுள்ள மீன் சின்னம் இங்கே குத்து விளக்குகளுடன் நாணயத்தின் இருபுறமும் இடம்பெற்றுள்ளது. இதில் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய அம்சம் இவ்வகை நாணயங்கள் வடஇலங்கைக்கு வெளியே குறிப்பாகத் தமிழகத்தில் இதுவரை கிடைத்ததாகத் தெரியவில்லை. அத்துடன் இதில் காணப்படும் மீன் சின்ன அமைப்பு பாண்டியர் வெளியிட்ட நாணயங்களில் வரும் மீன் சின்ன அமைப்புக்கு அன்னியமானதாகத் தெரிகிறது. இதனால் இவை வடஇலங்கையில் வெளியிடப்பட்டதென்பது தெளிவாகிறது. இதற்கு இந்நாணயங்கள் இதுவரை வடஇலங்கையில் மட்டும் கிடைத்திரு ப்பதை இங்கு சிறப்பாகக் கவனிக்க வேண்டும்.

சிங்கள மன்னர்கள் தாம் வெளியிட்ட நாணயங்களில் மீனையோ அல்லது குத்துவிளக்கையோ முக்கிய சின்னமாகப் பயன் படுத்தியதற்கு இதுவரை சான்றுகள் இல்லை. மேலும் அவர்களது அரச தலைநகர் இருந்த அநுராதபுரத்திலும், தென்னலங்கையிலும் இவை கிடைக்காது வடஇலங்கையிலேயே எண்ணிக்கையில் அதிகமாகக் கிடைத்துள்ளன. இதனால் இவை வடஇலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்களால் வெளியிடப்பட்டதெனக் கூறலாம். இந்நாணயங்கள் சங்க காலத்திற்குப் பின் கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்கு முன் வெளியிடப்பட்டிருக்கலாம் என்பதை அவற்றின் வடிவமைப்பிலும், இங்கு பயன்பாட்டிலிருந்த பிற நாணயங்களைக் கொண்டும் ஒரளவு கணிக்க முடிகிறது. மிற்சினர் இவை கி.பி 7ஆம் நூற்றாண்டிலிருந்து வெளியிடப்பட்டவை எனக் கூறுகிறார் (1998:137). அவரது காலக் கணிப்பு பெருமளவு பொருத்தமாகவே உள்ளது. இதையொத்த சின்னங்களுடன் கூடிய வட்ட நாணயங்கள்

சதுரவடிவிலிருந்து வட்ட நாணயங்களை வெளியிடும் நிலைமாறும் காலத்தைச் சுட்டிக்காட்டுகின்றன. இவை காலத்தால் சற்றுப்பிற்பட்டதுடன் அதை வெளியிட்ட மன்னர்களும் வேறாக இருக்கலாம் என எடுத்துக் கொள்ளலாம்.

## பராந்தகனின் நாக நாட்டு வெற்றியும் உரக நாணயமும்.

வடஇலங்கை அரசு தொடர்பாகத் தோன்றிய தமிழ் இலக்கியங்களில் ஒன்றான யாழ்ப்பாணவைபவமாலை கி,பி. 8ஆம் நூற்றாண்டில் கதிரமலையிலிருந்து அரசாண்ட உக்கிர சிங்கன் சோழ இளவரசியான மாருதப்புரவல்லியைத் திருமணம் செய்து சில ஆண்டுகள் இங்கு ஆட்சிபுரிந்ததன் பின்னர் தலைநகரைச் சிங்கைநகருக்கு (செங்கடநகரிக்கு) மாற்றியதாகக் கூறுகின்றது (நடராசா 1980:56-57).

இத்தலைநகர் மாற்றத்திற்கும் முதலாம் பராந்தக சோழ மன்னனது இலங்கை மீதான படையெடுப்புகளுக்கும் இடையில் ஒருவித தொடர்பு இருப்பதாகத் தெரிகிறது. முதலாம் பராந்தக சோழன் மதுரையைக் கைப்பற்றிய போது தோல்வியடைந்த பாண்டிய மன்னன் இராசசிம்மன் தன் முடியையும், செல்வத்தையும் இலங்கை மன்னனிடம் அடைக்கலமாக வைத்து விட்டுத் தன் தாய் நாடான கேரளத்திற்குச் சென்றான் (C.V. 50:40-5). இதைப்பெறுவதற்காக பராந்தகன் இலங்கை மன்னனிடம் தூதனுப்பிய போது அதை ஆட்சியிலிருந்த நான்காம் மகிந்தன் கொடுக்க மறுத்ததும் பராந்தகன் இலங்கை மீது படையெடுத்து அநுராதபுர அரசை வெற்றிகொண்டான் (S.I.I. II:35). இலங்கைப் பாளி நூலான சூளவம்சம் நான்காம் மகிந்தன் ஆட்சி செய்த காலத்தில் (கி.பி.956–972) தென்னிந்திய மன்னன் வல்லபன் நாகதிபத்தின் மீது படையெடுத்து தோல்வியடைந்தான் எனக் கூறுகிறது (53:12-16). இச்சம்பவத்தை வெசகிரியில் கிடைத்த கல்வெட்டும் உறுதிப்படுத்துகிறது (E.Z. I:35-51). இப்போர் நாகதீபத்தைக் கைப்பற்ற நடந்ததா அல்லது நாகதீபத்திலிருந்து அநுராதபுர அரசைக்

கைப்பற்ற நடந்ததா என்பது தெரியவில்லை. ஆனால் பாளி இலக்கியத்தில் வழக்கத்திற்கு மாறாக தென்னிந்தியப்படையெடுப்போடு நாகதீபம் தனித்து இனங்காணப்பட்டிருப்பது இங்கு சிறப்பாக நோக்கத்தக்கது. அத்துடன் இவ்வரலாற்றுச் சம்பவங்கள் கால அடிப்படையில் தமிழ் இலக்கியங்கள் கூறும் கதிரமலை மாற்றத்தோடு தொடர்புபடுத்திப் பார்க்கக் கூடியவையாகவும் உள்ளன.

முதலாம் பராந்தக சோழனின் இலங்கை மீதான வெற்றியைப் பற்றிச் சூளவம்சம் எதுவுமே கூறாத நிலையில் அவனது 38வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு "மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி வர்மன்" எனச் சிறப்பித்துக் கூறுகிறது (S.I.I.II:35). இவ்வெற்றியை கலிங்கத்துப் பரணியும் (பாட்டு 200), இராஜராஜன்உலாவும் (வரி 39–40) கூறுகின்றன. இவற்றில் மிகைப்படுத்தப்பட்ட செய்திகளும் இருக்கலாம். ஆனால் யாழ்ப்பாணத்திற்கு வெளியே பூநகரி மண்ணித்தலை என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஆலயமும், பல்லவராயன் கட்டுப்பகுதியில் கிடைத்த சூரிய சிற்பமும் இங்கு புழக்கத்தில் இருந்து வரும் குடமுறுட்டியாறு, மண்ணியாறு, நல்லூர், சோழியகுளம் போன்ற இடப்பெயர்களும் பராந்தகன் காலத்துடன் தொடர்புபடுத்தக் கூடியவை (புஷ்பரட்ணம் 2000:108–196). தமிழ் நாட்டு வம்சங்கள் அநுராதபுர அரசை வெற்றி கொள்ள முன்னர் வடஇலங்கையில் தமது ஆதிக்கத்தைத் நிலை நாட்டியிருக்கலாம். அவ்வாறு கருதுவதற்குப் பாளி இலக்கியங்களிலும் சில சான்றுகள் உண்டு. பேராசிரியர் கே.எம்.டி. சில்வா இக்காலத்தில் தமிழகப் படையெடுப்பாளர்களுக்கு வடஇலங்கையே தளமாக இருந்ததென்பதை சான்றாதாரங்களுடன் குறிப்பிட்டுள்ளார் (1981:21). இவற்றின் பின்னணியில் வைத்து நோக்கும் போது முதலாம் பராந்தகன் அநுராதபுரத்தின் மீது படையெடுக்க முன்னர் வடஇலங்கையை வெற்றி கொண்டிருக்கலாம். இவ்வெற்றியையே அவனது கல்வெட்டுக்கள் முக்கியப்படுத்திக் கூறியிருக்கலாம். இதற்குச் சார்பாக உரக என்ற பெயர் பொறித்த நாணயத்தை எடுத்து ஆராயலாம்.

இலங்கையிலும் தமிழகத்திலும் *உரக* என்ற பெயர் பொறித்த பொன், செப்பு நாணயங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்நாணயத்தின் வடிவமைப்பு, உலோகம், அவற்றில் இடம்பெற்றுள்ள சின்னங்கள் தமிழ் நாட்டில் வெளியிடப்பட்ட சோழர் கால நாணயங்களில் இருந்து பெரிதும் வேறுபடுவதால் இவற்றை சோழமன்னன் இலங்கையில் உள்ள அக்கசாலையில் வெளியிட்டான் என்பது பலரது கருத்தாகும். தமிழ் நாட்டில் இலங்கை மனித உருவம் (Ceylon Man Type Coins) பொறித்த நாணயங்கள் முதலாம் இராஜராஜசோழன் காலத்திலிருந்து கிடைப்பதால் அவனே *உரக* என்ற பெயர் பொறித்த நாணயங்களை வெளியிட்டான் என்ற கருத்து நீண்ட காலமாக இருந்து வருகிறது (Srinivasn 1969:171-175, *சீதாராமன்* 1986:1–10). ஆனால் இதை இலங்கை வெற்றிக்காக இராஜராஜ சோழன் வெளியிட்டான் எனக் கூறுவதைவிட நாகநாட்டு வெற்றிக்காக முதலாம் பராந்தக சோழன் வெளியிட்டான் எனக் கூறுவதே பொருத்தமாகும்(படம்-2).



உரக என்ற வடமொழிச் சொல்லிற்கு பாம்பு, நாகம், நாகர்(உரகர்) எனப் பல பொருளுண்டு. சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் நாகம் என்பதைக் குறிக்க உரக என்றும், நாகரைக் குறிக்க உரகர் என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதன் பின் மூவர் தேவாரத்தில் நாகம் என்பதைக் குறிக்க உரகம் என்னும் சொல்லும், பின்னர் ஜெயங்கொண்டார் கலிங்கத்துப்பரணியில் நாகர் என்பதைக் குறிக்க உரகர் என்ற சொல்லாட்சியும் கையாளப் பட்டுள்ளது (பாலசுப்பிரமணியம் 1988). கி.பி.8ஆம் நூற்றாண்டில் சோழ நாட்டின் காவிரியின் தென்கரையில் உள்ள பாம்பூர் உரகபுரம்

என அழைக்கப்பட்டதை பல்லவர் கால கூரம் செப்பேடுகள் கூறுகின்றன (பல்லவ செப்பேடுகள் முப்பது 44,65). இவ்வுரகபுரத்தை அறிஞர்கள் சிலர் உறையூர் எனவும் கருதுகின்றனர் (வேங்கடசாமி19 83:251).

ஆதியில் இலங்கையில் வாழ்ந்த மக்களில் ஒரு பிரிவினரை நாகர் எனப் பாளி நூல்கள் கூறுகின்றன. கி.பி1 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட 80கல்வெட்டுக்கள் நாக மக்கள் பற்றியும், நாக என்ற பெயரிலுள்ள சிற்றரசர்கள் பற்றியும் கூறுகின்றன. பாளி நூல்கள் அநுராதபுரத்தில் ஆட்சிபுரிந்த நாக என்ற பெயரிலுள்ள பல மன்னர்களைப்பற்றிக் கூறுகின்றன. வடஇலங்கையில் கிடைத்த நான்கு பிராமிக் கல்வெட்டுக்கள் நாகச் சிற்றரசர்கள் பற்றிக் கூறுகின்றன (Paranavithana 1970:Nos.1-375). கி.பி.7ஆம் நூற்றாண்டில் தமிழர் படையுடன் வந்து ஸ்ரீநாக என்பவன் வடஇலங்கையை(உத்தரதேசம்) கைப்பற்ற முற்பட்டான் எனச் சூளவம்சம் கூறுகிறது (C.V. 44:703). பண்டைய கல்வெட்டுக்களிலும், மட்பாண்டங்களிலும் வரும் "ம" என்ற ஒலிப்பெறுமானத்தைக் கொடுக்கும் பிராமி எழுத்தையொத்த குறியீட்டை நாகர்களின் குலச்சின்னமாகக் கூறும் பேராசிரியர் வேலுப்பிள்ளை அக்குறியீடு இலங்கையின் ஏனைய வட்டாரங்களை விட வடஇலங்கையில் கூடுதலாகக் காணப்படுவதற்கு இங்கு நாக இன மக்கள் வாழ்ந்ததே காரணம் என்றார் (Veluppillai1980A:54). ஆதியில் நாக என்ற பெயர் இலங்கையில் பரந்துபட்ட மக்களோடு தொடர்புடைதாக இருந்தாலும் காலப்போக்கில் அப்பெயர் பெரும்பாலும் தமிழ் மக்களுடனும், அவர்கள் வாழும் இடங்களுடனும் தொடர்புடையதாக இருப்பதை இன்றும் நடைமுறையில் காணலாம்.

நாக இனமக்கள் பற்றிக் கூறும் பாளி நூல்கள் அநுராதபுரத்திற்கு வடக்கிலுள்ள பிராந்தியத்தை நாகதீப(ம்)எனவும், இங்கு இரு நாக மன்னர்களிடையே நடந்த சிம்மாசனப் போட்டியை புத்தர் தீர்த்து வைத்ததாகவும் கூறுகின்றன (M.V. VIII:54-3). இந்நிகழ்ச்சியை மணிமேகலை, சிலப்பதிகாரத்தில் வரும்

சம்பவங்களுடன் தொடர்புபடுத்தி அவற்றில் வரும் நாக நாடு இலங்கையில் உள்ள நாகதீபத்தைக் குறிப்பதாகச் சுட்டிக்காட்டப்படுகிறது (சிற்றம்பலம் 1993:67-80). யாழ்ப்பாணத்தில் வல்லிபுரம் என்ற இடத்தில் கிடைத்த கி.பி.3ஆம் நூற்றாண்டிற்குரிய பொற்சாசனத்தில் நாகதீவ(ப) என்ற பெயர் வருவதைக் கொண்டு இக்கருத்து மேலும் உறுதியாகிறது (Paranavithana 1932:220-237). வடமத்தியமாகாணத்தில் கிடைத்த பிராமிக் கல்வெட்டு ஒன்று நாகங்கள் பற்றிக் கூறுகிறது. கலாநிதி இரகுபதி இவ்விடம் கந்தரோடையைக் குறித்திருக்கலாம் எனக் கருதுகிறார் (Ragupathy 1991). கலிங்கத்துப்பரணியில் ஜெயங்கொண்டார் இராஜபாரம்பரியம் பற்றிக் கூறும் போது சோழவம்சத்து கிள்ளிவளவன் நாகநாட்டு இளவரசியை மணந்த கதையைக் கூறுகிறார். இதேபோல் பல்லவர்கால வேலூர்ப் பாளையச் செப்பேடு பல்லவ மன்னன் ஒருவன் நாகர் குலமகளை மணந்த செய்தியைக் கூறுகிறது (பாலசுப்பிரமணியம்1988). முதலாம் பராந்தக சோழன் காலத்தில் வடஇலங்கை நாக என்ற பெயரால் அழைக்கப்பட்டதற்குச் சில சான்றுகள் உண்டு. திருகோணமலை மாவட்டத்தில் நிலாவெளி என்ற இடத்தில் கிடைத்த 10ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டு அங்குள்ள மச்சகேஷ்வர ஆலயத்திற்கு தேவதானம் வழங்கிய ஊர்களில் ஒன்றாக "உராகிரிகாம" என்னும் இடத்தைக் கூறுகிறது (பத்மநாதன்1998:17-18). உராகிரிகம என்பது நாகநாட்டில் உள்ள ஒரு இடத்தைக் குறிப்பதாக எடுத்துக் கொள்ளலாம். யாழ்ப்பாண அரசு கால இலக்கியங்களில் வெளிநாடு எனக் குறிப்பிடப்படும் பூநகரிப் பிராந்தியம் போத்துக்கேய ஆவணங்களில் "உரயில் பூநரிம்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது (Ray 1960:552-553). இங்குள்ள வரலாற்றுப்பழமைவாய்ந்த சில இடங்கள் நாகமுனை, நாகதாழ்வு, நாகபடுவான் என அழைக்கப்படுவதை நினைவுபடுத்தலாம். கி.பி. 13ஆம் நூற்றாண்டில் வடஇலங்கையில் அடைந்த வெற்றியை நாகநாட்டு வெற்றியாக பாண்டியரது குடுமியாமலைக் கல்வெட்டுக் கூறுகிறது. இவற்றிலிருந்து வடஇலங்கை நாகநாடு, உரக என்ற பெயரால் அழைக்கப்பட்டமை தெரிகிறது.

உரக பெயர் பொறித்த நாணயத்தை முதலாம் இராஜராஜ சோழன் வெளியிட்டான் எனக் கூறும் போது பல ஐயப்பாடுகள் எழுகின்றன. தமிழ் நாட்டு மன்னர்கள் இன்னொரு நாட்டை வெற்றி கொண்டதன் நினைவாக அந் நாட்டுப் பெயரில் நாணயங்கள் வெளியிட்டதற்குப் போதிய சான்றுகள் உண்டு. மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழநாட்டை வென்றதற்காக "சொனாநாடு கொண்டான்" என்ற பெயரிலும், முதலாம் இராஜராஜசோழன் சேரநாட்டை வெற்றி கொண்டதன் நினைவாக "மலைநாடுகொண்ட சோளன்" என்ற பெயரிலும், இராஜேந்திரசோழன் கங்கை வெற்றிக்காக "கங்கை கொண்ட சோழன்" என்ற பெயரிலும் நாணயங்களை வெளியிட்டுள்ளனர் (Nagaswamy1981). ஆனால் ஒரு நாட்டு வெற்றிக்காக இரு பெயரில் தமிழ்நாட்டு மன்னர்கள் நாணயங்கள் வெளியிட்டதற்கு இதுவரை சான்றுகள் கிடைக்கவில்லை. இராஜராஜசோழனின் இலங்கை வெற்றிக்காக "ஸ்ரீலங்கவீர" என்ற பெயரில் நாணயம் வெளியிட்டான் என்பதைப் பல்வேறு சான்றாதாரங்களின் அடிப்படையில் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. அப்படியிருக்கும் போது இந்நாணயத்துடன் ஏன் "உரக" என்ற பெயரில் இன்னொரு நாணயத்தை வெளியிட்டான் என்பது புரியவில்லை. மேலும் இவன் கால நாணயங்கள் இவனது பட்டம் அல்லது விருதுப்பெயர்களை அடிப்படையாகக் கொண்டே வெளியிடப்பட்டுள்ளன. உரக என்பது பட்டப் பெயராக அமையாது நாக நாட்டை அல்லது நாக இனமக்களைக் குறிக்கின்றது. இராஜராஜசோழனது இலங்கை வெற்றி நாக நாட்டை மட்டும் உள்ளடக்கவில்லை. அது சிங்கள இராசதானியுட்பட இராஜரட்டைப்பிரதேசம் அனைத்தையும் உள்ளடக்கியிருந்தது. இதனால் இவன் சிங்களாந்தன் என்ற பட்டத்தையும் பெற்றான். இராஜரட்டை வெற்றியின் பின்னர் பொலநறுவையைத் தனது தலைநகராகத் தெரிவு செய்த இராஜராஜசோழன் அதற்கு தனது விருதுப்பெயர்களில் தலைநகருக்கு ஜனநாதமங்கலம் எனவும், இலங்கைக்கு மும்முடிச்சோழ மண்டலம் எனவும் பெயரிட்டான். இவ்வாறான நிலையில் இவன் நாக நாட்டையோ, நாக மக்களையோ

தனித்து இனம் காட்டி அதன் வெற்றிக்காக நாணயம் வெளியிட்டிருப்பான் எனக் கூறுவதற்கு எந்தக் காரணமும் இல்லை. ஆனால் பாளி இலக்கியங்களில் கூறப்படாத பராந்தகனின் வெற்றி அவனது கல்வெட்டுகளில் முக்கியப்படுத்திக் கூறப்பட்டுள்ளமைக்கு நாக நாட்டில் அவன் அடைந்த வெற்றியே காரணம் என எடுத்துக்கொள்ள இடமுண்டு.

பராந்த சோழனது 38வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மதுரை வெற்றியோடு ஈழ வெற்றியையும் சேர்த்துக் கூறுகிறது. ஈழம் என்பது வரலாற்று மூலங்களில் சில சந்தர்ப்பங்களில் முழுஇலங்கையைக் குறித்தாலும், பல இடங்களில் நாக நாட்டிற்குரிய (வடஇலங்கை) பெயராகவே இருந்துள்ளது. கி.பி.9ஆம் நூற்றாண்டுக்குரிய உதயணன் பெருங்கதையும், பிற்பட்ட மயிலநாதர் உரையும் இலங்கையைச் சிங்களம், ஈழம் எனத் தனித்தனியாகக் கூறுகின்றன (வேலுப்பிள்ளை 1986:10). பாண்டியர்காலக் கல்வெட்டில் நாகநாட்டைக் குறித்த ஈழம் (A.R.E1917:No588of 1916), விஜயநகரக்கல்வெட்டில் நாக நாட்டில் உள்ள யாழ்ப்பாணத்தைக் குறிக்கிறது (S.I.I.:No778). நாக நாட்டுக்குள்ளேயே இந்த வேறுபாடு ஆள்புலத்தைக் குறிக்காது அரச தலைநகரத்தைக் குறிக்கின்றது. ஏனெனில் விஜயநகர காலத்தில் யாழ்ப்பாணத்தில் இருந்த தலைநகர் பாண்டியர் காலத்தில் யாழ்ப்பாணத்தில் இருந்ததற்குச் சான்றில்லை. இவ்வாதாரங்களிலிருந்து பராந்தகன் காலத்தில் வடஇலங்கை நாக நாடு, ஈழம் என்ற பெயரால் அழைக்கப்பட்டமை தெரிகிறது. இந்த இடத்தில் நாக நாடு அல்லது ஈழ வெற்றிக்காக உரக என்ற பெயரில் முதலாம் பராந்தகனே நாணயம் வெளியிட்டான் என்பதற்கு அவன் காலக் கல்வெட்டில் வரும் நாணயங்கள் பற்றிய குறிப்பை எடுத்துக் காட்டலாம்.

இவன்காலத்தில் இருந்துதான் இலங்கையோடு தொடர்புடைய ஈழக்காசு, ஈழக்கருங்காசு என்ற செய்தி கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. இதுவரை தமிழகத்தில் கிடைத்த

கல்வெட்டுக்களில் 17 கல்வெட்டுக்கள் ஈழக்காசு, ஈழக்கருங்காசு பற்றிக் கூறுகின்றன. இதில் 15 கல்வெட்டுக்கள் முதலாம் பராந்தக சோழன் காலத்திற்குரியவை. இவற்றுள் 12 கல்வெட்டுக்கள் தஞ்சாவூரில் கிடைத்தவை (பவானி 2000: 130-134). இப்புள்ளிவிபரம் பராந்தகனுக்குப் பின்னர் ஈழக் காசு பற்றிய செய்தி தமிழ் நாட்டில் படிப்படியாக மறைந்து போவதைக் காட்டுகின்றன. இத்தனைக்கும் பரந்தகனால் வெளியிடப்பட்டவை எனக் கூறக்கூடிய எந்தவொரு நாணயமும் தமிழ் நாட்டில் இதுவரை அடையாளம் காணப்படவில்லை. சிலர் "மதிராந்தன்" என்ற பெயர்பொறித்த நாணயத்தை மதுரை வெற்றிக்காக பராந்தகன் வெளியிட்டிருக்கலாம் என்பதற்கு மதுரை வெற்றிபற்றிய கல்வெட்டை ஆதாரமாகக் காட்டுகின்றனர் (நடன காசிநாதன் 1995: 59-60). ஆனால் முன்னாள் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் நாகசுவாமி அதை உத்தம சோழன் வெளியிட்ட நாணயமாகக் கூறுகின்றார் (Nagaswamy1981:36). "மதிராந்தகன்" என்ற பெயர் பொறித்த நாணயத்தை வெளியிட்ட மன்னன் யாராக இருப்பினும் ஈழ வெற்றிக்காக பராந்தகன் நாணயங்களை வெளியிட்டான் என்பதையே அவன் கல்வெட்டுக்களில் வரும் ஈழக் காசு, ஈழக்கருங்காசு என்ற குறிப்பு தெளிவுபடுத்துகிறது. அப்படியானால் அவன் வெளியிட்ட ஈழக்காசு எது என்ற கேள்வி எழுகின்றது.

இங்கே உரக, நாகநாடு என்பது ஒரே பிராந்தியத்தைக் குறிப்பதால் அதன் வெற்றிக்காகவே முதலாம் பராந்தகன் உரக என்ற பெயர் பொறித்த நாணயத்தை வெளியிட்டான் எனக் கூறுவதில் எந்த தவறும் இல்லை. கல்வெட்டில் ஈழம் எனத் தமிழில் குறிப்பிட்டு நாணயத்தில் உரக என வடமொழியில் எழுதியமைக்கு அயல் நாடுகளுடனான வர்த்தக நோக்கம் முக்கிய காரணமாக இருக்கலாம். ஏனெனில் இக்காலத்தில் சோழ மன்னர்கள் மட்டுமன்றிச் சிங்கள மன்னர்கள் கூட கல்வெட்டுக்களைத் தமிழிலும், சிங்கள மொழியிலும் பொறிப்பித்த அதேவேளை நாணயங்களை வடமொழியில் வெளியிட்டுள்ளனர். இங்கே ஈழமும், நாகநாடும் ஒன்றாக

இருப்பதினால் கல்வெட்டுக்களில் ஈழம் என்ற பெயரையும், நாணயங்களில் உரக என்ற பெயரையும் பயன்படுத்தினான் எனக் கூறலாம்.

நாக நாட்டு வெற்றியையும் உரக நாணயத்தையும் பராந்தகனுடன் தொடர்பு படுத்தும் போது சோழர் வருகையுடன் தலைநகர் கதிரமலை சிங்கை நகருக்கு மாறியதாகத் தமிழ் இலக்கியங்கள் கூறுவது பராந்தகன் வெற்றியோடு ஏற்பட்ட சம்பவம் எனக் கூறலாம். அவ்வாறு கூறுவதற்கு இவன் காலத் தலைநகரங்கள் இரண்டு தமிழ் நாட்டில் சிங்கபுரம் என்ற பெயரைப் பெற்றதுடன் இவன் படையில் கொங்கு நாட்டுச் சிங்கை நகரைச் சேர்ந்த படைவீரர்களும் பங்கெடுத்ததைக் கல்வெட்டுக்கள் கூறுவதும் சான்றாக அமைகின்றன (புலவர் குழந்தை 1953:40). உரக நாணயம் இலங்கை அக்கசாலையில் வெளியிடப்பட்டதென்பதே நாணயவியலாளர் பலரின் கருத்தாகும். அப்படியானால் நாக நாட்டில் இவன் ஆட்சி நிலவியதாலேயே இந்நாணயங்கள் வெளியிடப்பட்டதெனக் கூறலாம். அவ்வாறு கருதுவதற்கு இந்நாணயங்கள் பெரும்பாலும் வடஇலங்கையில் கிடைத்திருப்பதும் சான்றாக உள்ளன. இதற்குச் சான்றாக இன்னொரு நாணயத்தையும் குறிப்பிடலாம்.

வடஇலங்கையில் உரக நாணயங்களுடன் ஏறத்தாழ அதே காலத்திற்குரிய லக்ஷ்மி என்ற பெயர் பொறித்த பொன், செப்பு நாணயங்கள் பற்றி கொட்றிங்ரன் (1924:60-2), மிற்சினர் (1998:137) போன்ற நாணயவியலாளர் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளனர். இந்நாணயத்தின் முன்புறத்தில் தலையை இடப்புறம் திருப்பிய நிலையில் ஒரு மனித உருவம் காணப்படுகிறது. இதன் வலது கை மேலே உயர்த்தியவாறு பூரணகும்பம் போன்ற ஒரு பொருளைத்தாங்கியுள்ளது. இதற்கு கீழே குத்துவிளக்கும், சூலமும் காணப்படுகிறது. தலைக்கு வலப்புறமாக சங்கு போன்ற உருவம் உள்ளது. இதன் வலது கை கீழ்நோக்கியவாறு வச்சிராயுதம் போன்ற பொருளைப் பிடித்துள்ளது.

இதன் பின்புறத்தில் லக்ஷ்மி என்ற பெயரும், மேற்புற விளிம்பையொட்டி சூரியனும் காணப்படுகின்றன. நாணயத்தின் முன்புறத்தில் உள்ள உருவம் நிற்கும்நிலையிலுள்ள மன்னன் எனக் கூறப்பட்டுள்ளது (Mitchiner1998:137). ஆனால் இடது கால் மடிக்கப்பட்டு வலது காலைத் தொடுவதுடன் அமர்ந்த நிலையில் இருப்பது போன்ற தோற்றத்தில் உள்ளது. இதனால் இவ்வுருவத்தை அமர்ந்த நிலையில் உள்ள லக்ஷ்மியாகக் கூறலாம். இதை நாணயத்தில் வரும் லக்ஷ்மி என்ற பெயரும் உறுதிப்படுத்துகிறது(படம்–3).



இவ்வகை நாணயங்கள் பெருமளவுக்கு வடஇலங்கையில் மாதோட்டம், அச்சுவேலி (Seyone 1998:32-4), பூநகரி, கந்தரோடை போன்ற இடங்களில் கிடைத்துள்ளன. இவற்றைத்தவிர கொழும்பு, சென்னை அருங்காட்சியகங்களிலும் காணப்படுகின்றன. ஆனால் இவை தமிழ் நாட்டு மன்னர்களால் வெளியிடப்பட்டதற்குச் சான்றுகள் இல்லை. மேலும் வடஇலங்கையில் பரவலாகக் கிடைத்துவரும் இந்நாணயங்கள் தமிழகத்தில் இதுவரை கிடைத்ததாகவும் தெரியவில்லை. இதனால் இந்நாணயங்கள் இலங்கையில் வெளியிடப்பட்டதென்பதில் சந்தேகமில்லை. இலங்கையில் இவை கிடைத்து வருவதால் இவற்றைச் சிங்கள மன்னர்களால் கி. பி 7ஆம், 8ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்டதாகக் கூறப்படுகிறது (Seyone 1998:14-1). ஆனால் நாணயத்தில் வரும் எழுத்தமைதியை அடிப்படையாகக் கொண்டு இவை கி.பி.10ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியெனக் கணிப்பிடமுடிகிறது (Mitchiner1998:137). நாணயத்தில்

இடம்பெற்றுள்ள சின்னங்கள் இந்து மதத்தோடு இந்நாணயங்களை வெளியிட்ட மன்னர்களுக்குள்ள தொடர்பைக்காட்டுகிறது. இவற்றின் வடிவமைப்பு, சின்னங்கள் என்பன ஏற்கனவே வடஇலங்கை அரசால் வெளியிடப்பட்ட நாணயங்களுடன் ஒற்றுமை கொண்டு காணப்படுகின்றன. இவற்றின் அடிப்படையில் இந்நாணயங்கள் பராந்தகனைத் தொடர்ந்து வடஇலங்கையில் ஆட்சி புரிந்த மன்னனால் வெளியிடப்பட்டதெனக் கூறலாம்.

## சிங்கைநகர் கால நாணயங்கள்

அண்மைக்கால களஆய்வின் போது வடஇலங்கையில் கி.பி.11ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி.13ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வெளியிடப்பட்டதாகக் கணிக்கக் கூடிய பல வகை நாணயங்கள் கிடைத்துள்ளன. இவ்வகை நாணயங்கள் பல ஆண்டுகளுக்கு முன்னரே இங்கு கண்டுபிடிக்கப்பட்டதை பலர் தமது நூல்களில் குறிப்பிட்டுள்ளனர் (Perinsep 1858:419-423,Codrinton 1924:89,Mahadevan 1970:111-120). 1966இல் டுல்பேயும், அண்மையில் மிச்சனரும் தமிழகத்தில் பாண்டியர் வெளியிட்ட நாணயங்கள் பற்றி ஆராய்ந்த போது வடஇலங்கையில் கிடைத்த நாணயங்கள் பற்றியும் சிறப்பாக ஆராய்ந்துள்ளனர். இவற்றைச் சின்னங்களின் அடிப்படையில் இருபெரும் பிரிவாக வரையறை செய்துள்ளனர். முதலாவது பிரிவில் இடம் அல்லது வலப்புறம் பார்த்த நிலையில் பீடத்தின் மேல் அமர்ந்த காளை உள்ளது. இதற்கு இருபுறமும் குத்துவிளக்கும், மேலே பிறைச் சந்திரனும் காணப்படுகின்றன. நாணயத்தின் பின்புறத்தில் கிடையாக அல்லது பக்கவாட்டில் இரு மீன் சின்னங்கள் காணப்படுகின்றன(படம்–4).

 










எமக்குக் கிடைத்த சில நாணயங்களில் நடுவில் செண்டும் அதன் இருபக்கத்தில் மீன் சின்னமும் காணப்படுகின்றன(படம்-5).




வேறுசிலவற்றில் நாணயத்தின் முன்புறத்தில் மத்தியில் மிகப் பெரிய மீன் சின்னமும் இருபுறமும் குத்துவிளக்கும் பின்புறத்தில பீடத்துடன் கூடிய செண்டுக்கு இருபுறமும் மீன் சின்னங்களும் காணப்படுகின்றன (படம்-6).



இரண்டாவது பிரிவில் இடப்புறம் பார்த்த நிலையில் நிற்கும் குதிரை. இதன்முகத்திற்கு கீழே பலிபீடம் காணப்படுகிறது. விளிம்பையொட்டி மேல்புறமாக இடப்புறத்தில் சந்திரனும், மத்தியில் சங்கும் காணப்படுகின்றன. பின்புறத்தில் பீடத்தின் மேல் கிடையாகவுள்ள மூன்று மீன் சின்னங்களும், இதன் இருபுறமும் குத்துவிளக்கும் உள்ளன. இவ்வகை நாணயங்கள் சிலவற்றின் பின்புறத்தில் வரும் பீடத்துடன் காணப்படும் மீன்சின்னங்கள் சில நாணயங்களில் கடலினுள் இருக்கும் தாவரபட்சியை உண்பது போல வடிவமைக்கப்பட்டுள்ளன (Seyone 1998:54-55). சில நாணயங்களில் முன்புறம் மூன்று மீன் சின்னங்களும், பின்புறம் இரு மீன்சின்னங்களும் உள்ளன.

மேற்கூறப்பட்ட நாணயங்களில் முன்புறம் காளையும் பின்புறம் இரு மீன் சின்னமும் கொண்ட நாணயங்கள் பல ஆண்டுகளுக்கு முன்னரும், அண்மைக்கால அகழ்வாய்வின்போது மிக அரிதாக அநுராதபுரத்திலும் கிடைத்துள்ளன (Bopearacgchi 1998:157). அதேபோ தமிழ் நாட்டில் தென்மாவட்டங்களில் இருந்து தனிப்பட்ட ஒருவரால் மூன்று நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆயினும் இதுவரை வெளிவந்த எமக்குத் தெரிந்த நூல்களில் மேற்கூறப்பட்ட நாணயங்கள் வடஇலங்கையில் கிடைத்ததாகவே குறிப்பிடப்பட்டுள்ளன. ஆயினும் வடஇலங்கையில் எங்கெந்த இடங்களில் இவை கிடைத்தன என்பதைப் பெரும்பாலானோர் குறிப்பிடத்தவறிவிட்டனர்.

கொட்றிங்ரன், சேயோன் போன்ற நாணயவியலாளர்கள் தமக்கு கிடைத்த இவ்வகை நாணயங்கள் மன்னார், மாதோட்டம், யாழ்ப்பாணம், அநுராதபுரம், யட்டகல போன்ற இடங்களில் கிடைத்ததாகத் தமது நூல்களில் குறிப்பிட்டுள்ளனர் (Codrington 1924:87, Seyone 1998:54-7). எமக்குக் கிடைத்தவற்றில் 600 நாணயங்கள் ஈழஊரைச் சேர்ந்த குமாரசாமி உடையார் என்பவரால் மாதோட்டத்தில் இருந்து சேகரிக்கப்பட்டவை. மேலும் பல நாணயங்கள் அவரிடம் உண்டு. 302 நாணயங்கள் பூநகரி வட்டாரத்தில் வசிக்கும் வடிவேலு என்பவரால் சேகரிக்கப்பட்டவை. ஏனையவை கள ஆய்வின் போது இங்குள்ள தென்னியங்குளம், புலச்சேரி, மட்டுவில் நாடு, பள்ளிக்குடா, மண்ணித்தலை, கல்முனை, நல்லூர் ஆகிய இடங்களிலும், யாழ்ப்பாணத்தில் கந்தரோடை, உடுத்துறை போன்ற இடங்களிலும் கிடைத்தவையாகும்.

பிடுல்ப்பேயும் (1966:32-33), மிச்சினரும் முதலிருவகை நாணயங்களையும் பாண்டிய மன்னர்கள் முதலாம் பராக்கிரமபாகுவின் பாண்டி நாட்டின் மீதான படையெடுப்புக்கு முன்னர் (கி,பி,1153-186) அதாவது பதினொராம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வெளியிட்டிருக்கலாம் என்ற காலக்கணிப்பை மேலோட்டமாகக் கொடுத்துள்ளனர். ஆனால் இவற்றின் காலத்தை ஒரளவுக்கு வரையறை செய்யக்கூடிய வகையில் அண்மைக் காலத்தில் எழுத்துப் பொறிப்புக்களுடன் இவ்வகையை சார்ந்த நாணயங்கள் பல கிடைத்துள்ளன. இவற்றுள் எண்ணிக்கையில் கூடுதலான நாணயங்கள் மாதோட்டத்தில் கிடைத்துள்ளன. அண்மையில் கந்தரோடையிலும் இவ்வகை நாணயம் ஒன்று கிடைத்துள்ளது (கிருஷ்ணராஜா1998). 1970இல் மாதோட்டத்தில் கிடைத்த இரு நாணயங்களை ஆய்வு செய்த மகாதேவன் அவற்றை அரிய நாணயங்கள் எனக் குறிப்பிட்டு அதில் உள்ள எழுத்துக்களை "ஸ்ரீராஜசேகர" என வாசித்தார் (Mahadevan 1970:111-20). அதேவகை நாணயத்தை 1858இல் பிறின்செப் தனது இலங்கை நாணயங்கள் என்ற கட்டுரையில் குறிப்பிட்டு அதனை "ஸ்ரீவி--கச"

எனவாசித்தார் (1858:424). மிக்சினர் இந்நாணயங்களைச் சேரமன்னர் வெளியிட்டதாகக் கூறி இதில் "ஸ்ரீசேரபராக்ரம" என்ற பெயர் இருப்பதாகக் கூறுகிறார் (1998:136).

1999இல் பாண்டிச்சேரியில் நடந்த தமிழகத் தொல்லியல் கழகக் கருந்தரங்கில் எம்மிடமுள்ள நாணயங்களை ஆய்வு செய்த சாசனவியல் அறிஞர்கள் பலரும் இவற்றில் வேறுபட்ட மன்னர்களுக்குரிய பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளதையும், எழுத்தமைதி கொண்டு இவை கி.பி. 12, ஆம்13ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்டதென்பதையும் ஏற்றுக் கொண்டனர். ஆனால் அவற்றில் உள்ள பெயர்களை ஒரே கருத்துப்பட பலரும் வாசிக்கவில்லை. இதற்கு நாணயங்களில் உள்ள எழுத்துக்கள் தெளிவற்றதாக இருப்பது ஒரு காரணமாக இருப்பினும், அதில் இடம்பெற்றிருக்கக் கூடிய பெயர் தமிழ் நாட்டு வரலாற்றில் அறியப்படாத ஒன்றாக இருப்பதும் ஒரு காரணமாக இருக்கலாம். இவ்வெழுத்துப் பொறிப்புள்ள நாணயங்களை அடிப்படையாகக் கொண்டு மேலே குறிப்பிட்ட முதலிருவகை நாணயங்களும் கி.பி.11 ஆம், 12ஆம் நூற்றாண்டிற்கு உரியவை எனக் கூறலாம். ஏறத்தாழ இதே கருத்தையே கொட்றிங்ரனும் கொடுத்துள்ளார் (1924:86).

இந்நாணயங்களைப் பொறுத்து எழுப்பப்படும் முக்கிய கேள்வி இந்நாணயங்கள் யாரால்? எங்கே? வெளியிடப்பட்டது என்பதாகும். இந்நாணயங்களை ஆராய்ந்த அறிஞர்கள் பலரும் பாண்டியரின் குலமரபுச்சின்னமான மீன் முக்கிய சின்னமாக இடம்பெற்றிருப்பதால் தமிழ் நாட்டில் ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர்களே வெளியிட்டனர் என்று கூறுகின்றனர். ஆனால் மேற்சுட்டிக்காட்டப்பட்ட நாணயங்களில் முன்புறம் காளையும் பின்புறம் இரு மீன் சின்னங்களையும் கொண்ட நாணயங்கள் மிகஅரிதாகத் தமிழ் நாட்டில் தனிப்பட்டவரிடம் இருப்பதைத் தவிர தமிழகத்தில் இவை கிடைத்ததாக இதுவரை வெளியிட்டுள்ளமையும் ஒரு சான்றாகக் காட்டப்படுகிறது. ஆனால் பாண்டிய நாணயங்களில் பெரும்பாலும் மன்னன் உருவத்துடன் தமிழில்

வெளிவந்த நாணயங்கள் பற்றிய நூல்களில் குறிப்பிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. மாறாக வடஇலங்கையிலேயே இவை பரவலாகக் கிடைத்து வருகின்றன. இதுவரை வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களில் குறிப்பாக யாழ்ப்பாண மன்னர்கள் வெளியிட்ட சேது நாணயங்களை விட எண்ணிக்கையில் இவை அதிகமாகும். வடஇலங்கையில் எமக்குக் கிடைத்த 1200 நாணயங்கள் எடை, அளவு, அமைப்பு, சின்னங்கள் என்பவற்றின் அடிப்படையில் 30 வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது (புஷ்பரட்ணம் 1999இ: 6-9). இவை தமிழகத்தில் பாண்டிய மன்னரால் வெளியிடப்பட்டிருந்தால் இலங்கையைக் காட்டிலும் அங்குதான் கிடைத்திருக்க வேண்டும்.

இவற்றைப் பாண்டியர் தமது வெற்றியின் நினைவாக இலங்கையில் வெளியிட்டிருக்கலாம் என்ற ஒரு கருத்து முன்வைக்கப்படுகிறது. பிடுல்ப்பே இக்கருத்தை மேலும் வலுவுள்ளதாக்க பாண்டியரும் இலங்கை மன்னர்களும் காளையை சின்னமாகப் பயன்படுத்தி கலிங்க வம்சத்துடன் கொண்டிருந்த அரசியல் உறவைக் காட்டி அதன் விளைவால் இருவம்சக் கலப்புள்ள வகையில் பாண்டியர் இவற்றை வெளியிடக் காரணம் என்ற பொருளில் கூறுகிறார். ஆனால் இக்கருத்தும் ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இல்லை. சோழ மன்னர்கள் இலங்கையில் அடைந்த வெற்றியின் நினைவாக வெளியிடப்பட்டதாகக் கூறப்படும் "உரக" ஸ்ரீலங்கவீர" என்ற பெயர் பொறித்த நாணயங்கள் இலங்கையில் கிடைப்பது போல் தமிழ் நாட்டிலும் கிடைத்து வருகின்றன. மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழரை வெற்றி கொண்டதன் நினைவாக வெளியிட்ட "சோணாடு கொண்டான்" என்ற பெயர் பொறித்த நாணயமும், பிற நாணயங்களும் தமிழ்நாட்டின் பல இடங்களில் கிடைப்பது போல் வடஇலங்கையிலும் ஓரளவு கிடைத்துள்ளன (புஷ்பரட்ணம் 1993:22-24). ஆனால் பாண்டியரின் இலங்கை மீதான வெற்றியின் நினைவாக இவை வெளியிடப்பட்டதாயின் வடஇலங்கையில் பரவலாகக் கிடைக்கும் போது ஏன் தமிழகத்தில் கிடைக்கவில்லை என்பது புரியவில்லை. பாண்டியர் மீன் சின்னத்துடன் காளை உருவம் பொறித்த நாணயங்களை

வெளியிட்டுள்ளமையும் ஒரு சான்றாகக் காட்டப்படுகிறது. ஆனால் பாண்டிய நாணயங்களில் பெரும்பாலும் மன்னன் உருவத்துடன் தமிழில் மன்னன் பெயரும் பொறிக்கும் மரபு காணப்பட்டது. இந்த அம்சம் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களின் மரபில் இருந்து முற்றாக வேறுபடுகிறது.

பாண்டியரின் ஆட்சி இலங்கையில் இருந்ததன் காரணமாக இந்நாணயங்கள் வெளியிடப்பட்டிருக்கலாம் என்ற இன்னொரு கருத்து முன்வைக்கப்படுகிறது. இலங்கையின் நீண்ட வரலாற்றில் பாண்டியர் இலங்கைமீது படையெடுத்ததற்கும், பல வெற்றிகளைப் பெற்று தமது மேலாண்மையை ஏற்கச் செய்ததற்கும், இலங்கை மன்னர்களிடம் திறைபெற்றதற்கும் பல சான்றுகள் உண்டு. ஆனால் சோழரைப் போல் இலங்கையின் ஒரு பகுதியையோ அல்லது முழுஇலங்கையையோ கைப்பற்றி தமது நேரடி நிர்வாகத்தின்கீழ் வைத்திருந்ததற்குச் சான்றுகள் இல்லை. இந்நாணயங்களில் பெரும்பாலானவை கி.பி 1070க்கும் 1215க்கும் இடைப்பட்ட காலத்தைச் சார்ந்தவை. இக்காலகட்டத்தில் சோழருக்கு அடிபணிந்த நிலையிலிருந்த பாண்டியரும், ஏனைய வம்சங்களும் இவற்றை வெளியிட்டிருப்பார்கள் எனவும் கூறமுடியாது. இரண்டாம் பாண்டியப் பேரரசு காலத்தில் (கி.பி.1215க்கும் 1256க்கு இடைப்பட்ட காலத்தில்) பாண்டிய மன்னர்கள் நான்கு தடவை இலங்கை மீது படையெடுத் ததாக ஆறு மன்னர்களின் மெய்க்கீர்த்திச் சாசனங்கள் கூறுகின்றன. இதன் மூலம் பாண்டியமன்னர்கள் இங்கு ஆட்சியில் இருந்த மன்னர்களிடம் திறை பெற்று தமது மேலாண்மையையும் ஏற்கச் செய்தனரே தவிர தம்மையோ தமது பிரதிநிதிகளையோ ஆட்சியில் அமர்த்தவில்லை. ஆகவே பாண்டியர் இலங்கை மன்னர்களாக இருந்து இந்நாணயங்களை வெளியிட்டனர் எனக் கூறுவது பாண்டியர் வரலாற்றைத் தெரிந்த நிலையில் கூறப்பட்ட கருத்தாகத் தெரியவில்லை.

மேற்கூறப்பட்டவற்றிலிருந்து இந்நாணயங்கள் அனைத்தும் இலங்கை நாட்டவரால் வெளியிடப்பட்டவை என்பது தெரியவருகிறது. இவற்றைத் தனிப்பட்டவர்களோ வணிகக் குழுக்களோ

வெளியிட்டிருக்க முடியாது. அம்மரபு இக்காலத்தில் இருந்ததற்கு தமிழ் நாட்டிலோ, இலங்கையிலோ இதுவரை சான்றுகள் கிடைக்கவில்லை. ஆகவே இலங்கையில் இருந்த அரசு ஒன்றினால் இவை வெளியிடப்பட்டவை என்பது ஏற்றுக்கொள்ளக் கூடிய உண்மையாகும். நாணயங்களிடையே காணப்படுகின்ற வேறுபாடுகள் கால அடிப்படையில் பல மன்னர்களால் வெளியிடப்பட்டவை என்பதை உறுதிப்படுத்துகின்றன. நாணயங்களில் இடம்பெற்றுள்ள பெரும்பாலான சின்னங்கள் இந்நாணயங்களை வெளியிட்ட மன்னர்களுக்கு சைவசமயத்தின் மீதிருந்த ஈடுபாட்டைக் காட்டுகின்றன. ஆகவே இவற்றைச் சிங்கள மன்னர்கள் வெளியிட்டிருக்க முடியாது. கிடைக்கின்ற நாணயங்கள் பெரும்பாலும் வடஇலங்கையாக இருப்பதால் இவற்றை வடஇலங்கையில் சிங்கை நகரிலிருந்து ஆட்சி புரிந்த மன்னர்களே வெளியிட்டனர் எனக் கூறலாம்.

## சாவக மன்னர்கள் வெளியிட்ட நாணயங்கள்

பொலநறுவைக்குப் பின்னர் கலிங்கமாகன் ஆட்சி கி.பி13ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதில் வடஇலங்கையில் ஏற்பட்டிருக்கலாம் என்பது வரலாற்றாய்வாளர் பலரின் கருத்தாகும். ஆனால் நீண்ட காலம் இலங்கையில் ஆட்சிபுரிந்தவன் என்ற பெருமை இவனுக்கு வரலாற்று நூல்களில் காணப்பட்டாலும், அவன் வெளியிட்ட கல்வெட்டுக்களோ, நாணயங்களோ இதுவரை கிடைக்கவில்லை. ஆனால் மேற்கூறப்பட்ட நாணயங்கள் முழுமையாக வாசிக்கப்பட்டால் அவன் வரலாறும் தெளிவு பெற வாய்ப்புண்டு. கலிங்கமாகனுக்குப் பின் வடஇலங்கை சாவக மன்னனால் ஆட்சி செய்யப்பட்டது. பாண்டியரின் குடுமியாமலைக் கல்வெட்டு இலங்கையில் இரு மன்னர்களிடையே ஏற்பட்ட தகராற்றில் ஒரு மன்னன் (சிங்கள அமைச்சன்) உதவி கேட்டதன் பேரில் பாண்டியர் படையெடுத்து நாக நாட்டு *சாகவ* மன்னனைக் கொன்றதாகவும், பின்னர் இவன் மைந்தன் பணிந்ததன் பேரில் அவனிடம் ஆட்சியை ஒப்படைத்ததாகவும் கூறுகிறது (Puthukoddai Inscriptions.239,No.366).

இவற்றிலிருந்து சாகவனுக்குப் பின் அவன் மகனின் ஆட்சியும் வடஇலங்கையில் இருந்தமை தெரிகிறது.

இவற்றை உறுதிப்படுத்துவதாக எம்மிடம் உள்ள நாணயங்கள் சிலவற்றில் "ஸ்ரீசாகவ" என்ற பெயர் இருப்பதை அடையாளம் காணப்பட்டுள்ளது(படம்-7). இதே பெயருள்ள நாணயத்தையே பிரின்செப் "ஸ்ரீவி--கச" என வாசித்துள்ளார் (1958:424) (படம்-8). இதே வாசிப்பையே யாழ்ப்பாணத்தில் கிடைத்த நாணயங்களுக்குக் கொட்றிங்ரனும் கொடுத்துள்ளார்(1924:90).


(படம்-7)


(படம்-8)
பிரின்செப் வாசிப்புக்கு உட்படுத்திய நாணயம்

இக்காலகட்ட நாணயங்களில் வரும் "வ", "ச" போன்ற எழுத்துக்கள் ஒரேமாதிரியான அமைப்புடையதாக இருப்பதைத் தமிழக நாணயங்களில் காணமுடிகிறது. இதில் "ச" வாசிக்கப்பட வேண்டிய முதல் எழுத்தை "வி" எனவும் "வ" என வாசிக்கப்பட வேண்டிய கடைசி எழுத்தை "ச" எனவும் வாசித்துள்ளார். இதற்கு சாவகன் என்ற மன்னன் பற்றி அறிந்ததை விட இவர்கள் விஜயபாகு, வீரபாகு,

போன்ற மன்னர்களின் வரலாற்றையும், நாணயங்களையும் நன்கு அறிந்திருந்தமை முக்கிய காரணமாக இருக்கலாம். எனவே இதைச் ஸ்ரீசாகவ என வாசிப்பதே பொருத்தம் என்பது சீதாராமணதும் கருத்தாகும்.

இந்நாணயங்களுக்கும் மேலே கூறப்பட்ட வடஇலங்கை நாணயங்களுக்கும் அடிப்படையில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. மற்றைய நாணயங்களில் மீன் முக்கிய சின்னமாக இடம் பெற்றுள்ளது. ஆனால் ஸ்ரீசாகவ பெயர் பொறித்த நாணயங்களில் மீனிற்குப் பதிலாக காளை உருவமும், தேவநாகரி எழுத்தில் மன்னன் பெயரும் இடம்பெற்றுள்ளது. சாவக மன்னன் பாண்டியருக்குப் பணிந்து திறைகொடுக்க மறுத்ததன் காரணமாகவே அவனைக் கொன்று அவன் மைந்தனை ஆட்சியில் அமர்த்தியதாகக் குடுமியாமலைக் கல்வெட்டுக் கூறுவதை நாணயங்களில் இடம்பெறாத மீன் சின்னமும் உறுதிப்படுத்துவதாக எடுத்துக் கொள்ள இடமுண்டு.

சாவகனைத் தொடர்ந்து அவன் மைந்தன் நாகநாட்டில் ஆட்சி செய்ததைக் குடுமியாமலைக் கல்வெட்டுக் கூறுகிறது. பூநகரி வட்டாரத்திலிருந்து எமக்கு கிடைத்த இருவகை நாணயங்களின் பின்புறத்தில் மூன்று மீன் சின்னம் காணப்படுகின்றது. ஆனால் பாண்டிய மன்னர்கள் மூன்று மீன் சின்னம் பொறித்த நாணயங்களை வெளியிட்டதற்கு இதுவரை சான்றுகள் இல்லை. மதுரையைக் கைப்பற்றி ஆட்சி செய்த போது ஒரு மீன் சின்னம் பொறித்த நாணயத்தையும், தின்னவேலியை கைப்பற்றி ஆட்சி செய்த போது இரு மீன் சின்னம் பொறித்த நாணயத்தையும் வெளியிட்டுள்ளனர். வடஇலங்கையைப் பாண்டியர் வெற்றி கொண்ட போது தமது கொடியில் இரு மீன் சின்னங்களையே பொறித்ததாகக் குடுமியாமலைக்கல்வெட்டுக் கூறுகிறது. இதனால் பாண்டியர் இலங்கையிலும் மூன்று மீன் சின்னம் பொறித்த நாணயங்களை வெளியிடவில்லை என்பது தெளிவாகிறது. அதேவேளை மூன்று மீன் சின்னம் பொறித்த நாணயங்கள் வடஇலங்கையைத்தவிர தமிழ் நாட்டிலோ பிற இடங்களிலோ இதுவரை கிடைத்ததாகத் தெரியவில்லை. 1284 இன் பின்னர் யாழ்ப்பாணத்தில் நல்லூரில்

அரசமைத்து ஆட்சி புரிந்த ஆரியச்சக்கர வர்த்தி மன்னர்கள் தமது நாணயங்களில் சேது என்ற மொழியோடு, காளையைத் தமது அரச இலட்சனையாகப் பயன்படுத்தியுள்ளனர். அத்தோடு அவ்வரசு தொடர்பான இலக்கியங்கள் இம்மன்னர்களின் அரச சின்னமாகக் காளையையும், சேது மொழியையும் மட்டுமே கூறுகின்றன. எந்த இடத்திலும் மீன் அரச சின்னமாகப் பயன்படுத்தியது பற்றிக் கூறவில்லை. இதனால் மூன்று மீன் சின்னம் பொறித்த நாணயங்கள் 1256இல் பாண்டியரால் சாவகன் வெற்றி கொள்ளப்பட்டதற்குப் பின் 1284இல் யாழ்ப்பாண அரசு தோன்ற முன் வெளியிடப்பட்டமை என்பது உறுதியாகிறது. இக்காலத்தில் சாவகன் மைந்தன் ஆட்சியிலிருந்தான் என்பது பாண்டியக் கல்வெட்டால் தெரியவருகிறது. இதனால் இவன் காலத்திலேயே இந்நாணயங்கள் வெளியிடப்பட்ட தெனக் கூறமுடியும். பாண்டியரின் குலச் சின்னமான மீனைப் பிற வம்சத்தினர் பல்வேறு காரணங்களுக்காகப் பயன்படுத்தியுள்ளனர். சோழர் பாண்டி நாட்டை வெற்றி கொண்டதன் நினைவாக அவர்களின் மீனைத் தமது நாணயங்களில் பயன்படுத்தியுள்ளனர். இங்கே சாவகன் மைந்தன் பாண்டியரிடம் அடிபணிந்து திறை கொடுக்கச் சம்மதித்ததன் பேரில் அவனை ஆட்சி செய்ய அனுமதித்ததாகக் கல்வெட்டுக் கூறுகிறது. இதன் மூலம் பாண்டியரின் மேலாண்மையை ஏற்றதன் நினைவாக மூன்று மீன் சின்னம் பொறித்த நாணயங்களை வெளியிட்டான் எனக் கூறலாம்(படம்-9).








சேயோனின் நூலில் இருந்து எடுக்கப்பட்டது

சில நாணயங்களின் முன்புறத்தில் இரு மீன் சின்னமும், பின்புறத்தில் மூன்று மீன் சின்னமும் காணப்படுகின்றது(படம்–10).



இதில் மூன்று மீன் சின்னம் பாண்டியரின் மேலாண்மையையும், இரு மீன் சின்னம் ஏற்கனவே இங்கு ஆட்சியிலிருந்த மன்னர்கள் வெளியிட்ட நாணய மரபையும் நினைவுபடுத்துவதாக இருக்கலாம். இக்கால நாணயங்களில் காணக்கூடிய இன்னொரு சிறப்பு மூன்று மீன் சின்னத்துடன் நாணயத்தின் முன்புறத்தில் கம்பீரமான தோற்றத்தில் [illegible], வேள்விகுண்டம், குத்துவிளக்கு போன்ற சின்னங்கள் இடம்பெற்றிருப்பதாகும். இவை இம்மன்னன் மேற்கொண்ட அசுவமேத யாகத்தைக் காட்டுகிறது எனலாம்.

இதுவரை கூறப்பட்டவற்றில் இருந்து கி.பி.7 ஆம்

நூற்றாண்டு முதல் கி.பி.1 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை வட இலங்கையில் நாணயங்களை வெளியிடுகின்ற மரபு ஒன்று இருந்தது என உறுதியாகக் கூறலாம். ஆனால் இக்கால வரலாற்றை அறிய உதவும் பாளி, சிங்கள, தமிழ் நூல்களில் இங்கிருந்த அரசு, மன்னர்கள், அவர்கள் ஆட்சி செய்த காலங்கள் பற்றிய தகவல்கள் பெருமளவுக்குப் புகைபடர்ந்த நிலையிலேயே காணப்படுகின்றன. இதனால் இவற்றை ஆட்சியாளர்கள், வணிகக் குழுக்கள் வெளியிட்டதாக நியாயப்படுத்தவும் ஒரு காரணம் உண்டு. தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழ் நாட்டில் பல்லவர் ஆட்சியுடன் எழுச்சி பெற்ற வணிக கணங்களின் வர்த்தக நடவடிக்கைகள் தொடர்பான கல்வெட்டுக்கள் சமகாலத்தில் இலங்கையில் மட்டுமன்றி தென்கிழக்காசியாவிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவர்கள் வர்த்தகத்தில் மட்டுமன்றி, தனிப்பட்ட படைகளை வைத்திருப்பதிலும், சுயாட்சி கொண்ட நகரங்களை உருவாக்குவதிலும், பண்பாட்டைப் பரப்புவதிலும் பெரும் பங்காற்றியுள்ளனர் என்பதை இக்கல்வெட்டுக்களில் இருந்து அறிய முடிகின்றது (பத்மநாதன்1984). ஆனால் இவர்கள் வெளியிட்டதெனக் கூறக்கூடிய நாணயங்கள் இலங்கையிலோ அல்லது தமிழ் நாட்டிலோ இதுவரை கிடைத்ததற்குச் சான்றுகள் இல்லை. வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களை அவ்வாறு எடுத்துக் கொண்டால் அவை வர்த்தகத் தொடர்பால் வடஇலங்கைக்கு வெளியே பல இடங்களிலும் கிடைத்திருக்க வாய்ப்புண்டு. அவ்வாறு கூறக் கூடிய வகையில் நாணயங்கள் கிடைக்கவில்லை. அத்துடன் இலங்கையில் வணிக கணங்கள் பற்றிய ஒரு சில கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டிருந்தாலும் அவை பெரும்பாலும் வடஇலங்கைக்கு வெளியே கிடைத்துள்ளன என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். இந்நிலையில் இவற்றை வணிக கணங்களுடன் தொடர்புபடுத்துவது எந்த வகையிலும் பொருந்தாது.

இந்நாணயங்களை தமிழ் நாட்டு வம்சங்களுடன் அதிலும் சிறப்பாக பாண்டிய வம்சத்துடன் தொடர்பு படுத்துவதற்கு இங்கு கிடைத்த நாணயங்களில் உள்ள மீன், காளை போன்ற சின்னங்கள்

பாண்டிய மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களில் உள்ள சின்னங்களை ஒத்திருப்பதை முக்கிய சான்றாகக் காட்டுகின்றனர். இதற்கு சமகாலத் தமிழக நாணயங்களின் செல்வாக்கு ஒரு காரணம் என எடுத்துக் கொண்டாலும், தமிழகத்தில் வெளியிடப்பட்ட நாணயங்களில் உள்ள சின்னங்களின் அதேவடிவத்தை இந்நாணயங்களும் கொண்டிருந்தன என்றோ அல்லது எல்லாக் காலத்திலும் பாண்டியரின் செல்வாக்கு ஏற்பட்டிருந்த போதுதான் இவை வடஇலங்கையில் வெளியிடப்பட்டன எனக் கூறுவதோ பொருத்தமாகத் தெரியவில்லை. கி.பி.7ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி.10ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வெளியிடப்பட்டதாகக் கூறப்பட்டுள்ள நாணயங்களை எடுத்தால் அவற்றின் இரு புறமும் மீன் சின்னம் காணப்படுகின்றன. ஆனால் பாண்டியர் வெளியிட்ட நாணயங்களில் பெரும்பாலும் ஒருபுறத்தில் மட்டுமே மீன் சின்னம் காணப்படுகின்றது. மேலும் இதே வடிவுள்ள மீன் சின்னம் பாண்டிய நாணயங்களில் மட்டுமன்றி இந்திய நாணயங்கள் எதிலும் இதுவரை காணப்படவில்லை. இவற்றில் சிறப்பாகக் கவனிக்கக் கூடிய அம்சம் தமிழ் நாட்டில் சங்க காலத்தின் பின் ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை அதாவது ஸ்ரீமாறஸ்ரீவல்லபன் வரை தமிழகத்தில் பாண்டியர் வெளியிட்ட நாணயங்கள் எவையும் இதுவரை கிடைக்கவில்லை. ஆனால் அக்காலத்தில் வடஇலங்கையில் மீன் சின்னம் கொண்ட நாணயங்கள் வெளியிடப்பட்டுள்ளது.

பதினொராம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம்நூற்றாண்டு முற்பகுதிவரை மீன் சின்னத்துடன் காளையுருவம் கொண்ட நாணயங்கள் வடஇலங்கையில் வெளியிடப்பட்டுள்ளன. இச்சின்னங்கள் பாண்டியர் வெளியிட்ட நாணயங்களிலிருந்து பல அம்சங்களில் வேறுபட்டுக் காணப்படுகின்றன. அவற்றில் உள்ள மீன் சின்ன அமைப்பு பாண்டியர் கால மீன் சின்ன அமைப்பிலிருந்து முற்றாக வேறுபட்டிருப்பதுடன், அவை பீடத்தின் மேல் இருப்பது போல் பொறிக்கப்பட்டுள்ளன. ஆனால் பீடத்துடன் கூடிய மீன் சின்னம் எவையும் தமிழகத்தில் பாண்டிய மன்னர்கள் வெளியிடப்பட்டதற்குச்

சான்றுகள் கிடைக்கவில்லை. சில நாணயங்களில் நாணயத்தின் பெரும்பகுதியை தத்துவரூபமாக வடிவமைக்கப்பட்ட மீன் சின்னமும், குத்து விளக்கும் அலங்கரிக்கின்றன. இவ்வகை மீன்வடிவம் கொண்ட நாணயங்கள் தமிழகத்திலோ அல்லது இந்தியாவிலோ புழக்கத்திலிருந்ததாகத் தெரியவில்லை. சிலவகை நாணயங்களில் பீடத்துடன் கூடிய செண்டும், அதன் மேல் சங்கும், இரு மீன் சின்னமும் காணப்படுகின்றன. இந்த அம்சம் தமிழகத்தில் பாண்டியர் வெளியிட்ட நாணயங்களில் இருந்து இவற்றை முற்றாக வேறுபடுத்துகின்றன. இங்கு சிறப்பாகச் சுட்டிக் காட்டக் கூடிய இன்னொரு அம்சம் வடஇலங்கையில் இந்நாணயங்கள் புழக்கத்திலிருந்த கி.பி.11ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி.13ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரைக்கும் பாண்டியரின் மேலாதிக்கமோ அல்லது தொடர்போ இலங்கையில் ஏற்பட்டதற்கு சான்றுகள் இல்லை. இக்காலத்தில் சோழருக்கு அடிபணிந்திருந்த பாண்டியர் தமிழ் நாட்டில் நாணயங்கள் வெளியிட்டதாகவும் தெரியவில்லை. கி.பி13ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து எழுச்சி பெற்ற பாண்டிய வம்சம் தமிழ் நாட்டில் இரு மீன் சின்னம் கொண்ட நாணயங்களை வெளியிட்டுள்ளன. ஆனால் வடஇலங்கையில் மூன்று மீன் சின்னம் கொண்ட நாணயங்கள் வெளியிடப்பட்டுள்ளது. இவற்றைப் பாண்டியரின் மேலாதிக்கத்தை ஏற்ற சாகவன் மைந்தன் வடஇலங்கையில் ஆட்சி செய்த போது வெளியிட்டான் எனக் கூறும் போது, இதற்கு முற்பட்ட நாணயங்களும் வடஇலங்கையில் ஆட்சி புரிந்த மன்னர்களால் வெளியிடப்பட்ட தென்பது தெரிகிறது.

வடஇலங்கை நாணயங்களில் காணக்கூடிய இன்னொரு சிறப்பம்சம் என்னவென்றால் அமர்ந்த நிலையிலுள்ள காளையுருவமாகும். யாழ்ப்பாண மன்னர்கள் நாணயங்களில் காளை உருவத்தைப் பொறிக்கும் மரபை கலிங்க மன்னர்களிடம் இருந்து பெற்றதாகப் பலரும் கூறி வந்துள்ளனர். ஆனால் தமிழ்நாட்டிற்கும் இலங்கைக்கும் இடையிலான பாரம்பரியத் தொடர்பை நோக்கும் போது சங்க காலத்திலேயே இம்மரபு இலங்கையில் ஏற்பட்டதெனக் கூறலாம்.

அதில் கூட இலங்கைக்கும் தமிழகத்திற்கும் இடையில் சில வேறுபாடுகள் உள்ளன. சங்ககாலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்களில் குறிப்பாக பாண்டிய நாணயங்களில் காளை ஒரு முக்கிய சின்னமாகப் பயன்படுத்தப்பட்டாலும் அவை பெரும்பாலும் நிற்கும் நிலையிலேயே உள்ளன (Loventhan, 1888, Krishnamurthy 1997:Plte.1-19. Nos.1-253). ஆனால் சமகாலத்தில் இலங்கையில் நிற்கும் காளையுருவத்துடன் அமர்ந்த காளையுருவம் நாணயங்களிலும், முத்திரைகளிலும் பயன்படுத்தும் மரபு இருந்ததை அண்மையில் தென்னிலங்கையில் கிடைத்த அச்சினால் பதிக்கப்பட்ட களிமண் நாணய வடிவங்கள் உறுதிசெய்கின்றன (Bopearachchi 1999:106-8, Plate. 23-4, Nos.K14-K31). இவற்றிலிருந்து காளை உருவம் கொண்ட நாணயங்கள் பண்டு தொட்டு இலங்கையில் வெளியிடப்பட்டமை தெரிவதோடு, அதன் தொடர்ச்சியே மேற்கூறப்பட்ட நாணயங்களில் வரும் காளையுருவம் எனவும் எடுத்துக் கொள்ள இடமளிக்கிறது. இந்நிலையில் வடஇலங்கையில் கிடைத்த நாணயங்களில் உள்ள காளை உருவத்தை நோக்கும் போது அவை பெரும்பாலான நாணயங்களில் கிடையாக உள்ள மூன்று கோடுகளையுடைய பீடத்தின் மேல் அமர்ந்து காணப்படுகின்றன. இந்த அம்சம் பாண்டிய நாணயங்களிலோ அல்லது இந்திய நாணயங்களிலோ இருப்பதாகத் தெரியவில்லை. இதேபோல் காளையின் கழுத்தும், ஏரியும் மிக நீண்டும், உயர்ந்தும் காணப்படுவதும் இந்நாணயத்தில் காணக்கூடிய மற்றைய சிறப்பம்சங்களாகும். இவற்றிலிருந்து வடஇலங்கையில் கிடைத்த நாணயங்கள் பெருமளவுக்கு இப்பிராந்தியத்திற்குரிய நாணய மரபை ஒட்டியே வெளியிடப்பட்டதெனக் கூறலாம்.

பாளி, சிங்கள, தமிழ் இலக்கியங்களிலும், பாண்டியக் கல்வெட்டுக்களிலும் யாழ்ப்பாணத்தில் நல்லூரைத் தலைநகராகக் கொண்ட அரசு தோன்று முன் வடஇலங்கையில் ஓர் அரசு இருந்ததென்பதைச் சூசகமாகத் தெரிவிக்கின்றன. ஆனால் எந்தெந்த

மன்னர் எப்போது ஆட்சி செய்தார்கள் என்பதற்குரிய சரியான சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை. ஆனால் இந்நாணயங்கள் கதிரமலையும், சிங்கையும் தலைநகராக இருந்த போது வெளியிடப்பட்டவை எனக் கூறலாம். கி.பி.13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து நல்லூரைத் தலைநகராகக் கொண்ட அரசு இருந்ததை வரலாற்றிலக்கியங்கள் கூறுகின்ற போதிலும் அதை ஆட்சிபுரிந்த மன்னர்களின் கால வரலாறோ ஏனைய அம்சங்களோ இன்னும் முறையாக அறியப்படவில்லை (Pathmanathan 1978) இந்நிலையில் தமிழ் அரசு ஒன்று வடஇலங்கையில் இருந்ததென்பதற்கு சேது மொழி பொறித்த நாணயங்கள், அதுவும் வடஇலங்கையில் பெருமளவு கிடைத்ததை முக்கிய சான்றுகளில் ஒன்றாகக் காட்டப்படுகிறது. இந்நிலையில் மேற்கூறப்பட்ட நாணயங்கள் பெரும்பாலும் வடஇலங்கையில் கிடைத்திருக்கும் போது எப்படித் தமிழ் இலக்கியங்களிலும், பாண்டியக் கல்வெட்டுக்களிலும் வரும் கதிரமலையும், சிங்கையையும் வரலாற்றுக் கற்பனையாகக் கொள்ள முடியும்?

## நல்லூர் இராசதானி கால நாணயங்கள்

சிங்கை நகரின் பின்னர் தோன்றிய தமிழரசின் தலைநகர் நல்லூர் எனத் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. இத்தலைநகர் யாழ்ப்பாணத்தில் அமைந்திருப்பதால் இதை யாழ்ப்பாண அரசு எனவும், நல்லூர் இராசதானி எனவும் அழைக்கப்படுகின்றன. இதைப் பாண்டியர்களின் படைத்தளபதிகளாக இருந்து இலங்கை மீது படையெடுத்த ஆரியச்சக்கரவர்த்திகள் என்னும் பிராமணர் தோற்றுவித்தனர் என்பது அறிஞர்கள் பலரது கருத்தாகும். இவ்வரசு கி.பி.13ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி.17ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை அதாவது போத்துக்கேயர் வெற்றி கொள்ளும் வரை வடஇலங்கையில் ஆட்சிபுரிந்ததைப் பாளி, சிங்கள, தமிழ் இலக்கியங்கள், இலங்கை, தென்னிந்தியக் கல்வெட்டுக்கள், போத்துக்கேய ஆவணங்கள் உறுதி செய்கின்றன. இதே காலமளவில் தென்னிலங்கையில் கண்டி, கோட்டை அரசுகளும், கிழக்கிலங்கையில் திருகோணமலை, பழுகாமம், பானமை முதலான சிற்றரசுகளும் இருந்தன. நல்லூர் இராசதானியின் கீழ் வடமராட்சி, தென்மராட்சி, வலிகாமம், பச்சிலைப்பள்ளி ஆகிய மாவட்டங்களும், மன்னார் மற்றும் பதின்மூன்று தீவுகளும், வன்னிமைகளான பணங்காமம், முள்ளியவளை, தென்னமரடி என்பனவும் உள்ளடங்கியிருந்தன. சில காலங்களில் இதன் ஆதிக்கம் கிழக்கிலங்கையிலும், தென்னிலங்கையிலும் பரவியிருந்ததாகத் தெரிகிறது. இவ்வரசு தோன்றியதற்கான சூழ்நிலைகளையும், இவ்வரசுகால வரலாற்றையும் கிடைத்த சான்றுகளின் அடிப்படையில் முழுமையாக வெளிப்படுத்திய பெருமை பேராசிரியர் இந்திரபாலா (1972), பேராசிரியர் பத்மநாதன்(1978) போன்ற அறிஞர்களுக்கே உரியது.

இவ்வரசு முன்னூற்றி ஐம்பது ஆண்டுகள் நல்லூரைத் தலைநகராகக் கொண்டு வடஇலங்கையில் ஆட்சி புரிந்துள்ள போதிலும், அதன் வரலாற்றை முழுமையாக அறியக் கூடிய சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை. இவ்வரசு தொடர்பாக சிங்கள, தமிழ் வரலாற்று இலக்கியங்களில் சில செய்திகள் காணப்பட்டாலும், அவை யாழ்ப்பாண மன்னர்களின் வரலாற்றைக் காலநிரைப்படுத்திக் கூற உதவவில்லை. ஓரிரு கல்வெட்டுக்கள் கிடைத்துள்ள போதிலும் அவை விரிவான தகவல்களைத் தரவில்லை. ஆனால் அரசு ஒன்று நீண்ட காலமாக ஆட்சி புரிந்ததையும், அது அரசியல், பொருளாதாம், பண்பாடு, உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகத் தொடர்புகள் போன்றவற்றால் மேம்பட்டிருந்ததையும் ஓரளவுக்கு எடுத்துக்காட்டும் சான்றுகளில் ஒன்றாக இவ்வரசு கால மன்னர்கள் வெளியிட்ட நாணயங் கள் விளங்குகின்றன.

### சேது நாணயங்கள்

யாழ்ப்பாண மன்னர்கள் தமது ஆட்சியின் போது பல அளவுகளில், பல வடிவங்களில் நாணயங்களை வெளியிட்டுள்ளனர். இவை தோற்ற அமைப்பில் சோழர்கால, பொலநறுவை அரசு கால நாணயங்களைப் பெரிதும் ஒத்துள்ளன. இந்நாணயங்கள் இலங்கையிலும், தமிழகத்திலும் கிடைத்து வருகின்ற போதிலும் எண்ணிக்கையில் அதிகமானவை வடஇலங்கையில் திருநெல்வேலி, நல்லூர், கோப்பாய், அச்சுவேலி, புத்தூர், சண்டிலிப்பாய், மாதோட்டம், மாங்குளம், பூநகரி, வேலணை, கந்தரோடை, வல்லிபுரம் போன்ற இடங்களில் கிடைத்துள்ளன. இவையனைத்தும் செப்பு நாணயங்களாகும் (Gnanapragasar 1928. Rasanayagam 1928, சிவசாமி 1974:1-12, Pathmanathan 1980:410. கிருஷ்ணராஜா 1983:71-84). இதனால் செப்பு நாணயங்களை மட்டுமே யாழ்ப்பாண மன்னர்கள் வெளியிட்டார்கள் எனக் கூறப்பட்டு வந்தது. ஆனால் பேராசிரியர் பத்மநாதன் பொஸ்ரன் நூதன சாலையில் இம்மன்னர் வெளியிட்ட பொன் நாணயம் ஒன்றிருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார்.

அண்மையில் இந்நுலாசிரியரால் இம்மன்னர் வெளியிட்ட வெள்ளி நாணயங்களைக் கண்டு பிடிக்கமுடிந்தது (1999:6-9). ஆனால் வகையிலும், தொகையிலும் செப்பு நாணயங்களே அதிகமாகக் கிடைத்திருப்பதனால் இந்நாணயங்களையே அதிகமாக வெளியிட்டனர் எனக் கூறலாம்.

இந்நாணயங்களில் "சேது" எனும் மொழியும், நந்தியும் முக்கிய அம்சங்களாகத் திகழ்ந்தன. சேது என்பதற்கு அணை, அலை, எல்லை, ஏரி, கரை, கடல் வழிப்பாதை, பாலம், இராமேஸ்வரம், சிவப்பு போன்ற பல பொருள்கள் உள்ளன (T.L.II:715, Pathmanathan:1980:411). தமிழகத்திற்கும் ஈழத்திற்கும் இடையேயுள்ள பாக்குநீரிணையில் காணப்படும் இராமர் கல்லணையும் சேது எனக் குறிப்படுவது வழக்கம். பாண்டி நாட்டிலுள்ள தலங்கள், இடங்கள் சேது என்ற பெயர் கொண்டு அழைக்கப்பட்டதற்கு இலக்கியங்களிலும், கல்வெட்டுக்களிலும் சான்றுகள் உள்ளன (S.I.I. 8:No402). நாணயங்களில் வரும் சேது என்னும் மொழி இவற்றை வெளியிட்ட ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்கள் இராமேஸ்வரத்திலிருந்து வந்தமையினையும், அத்தலத்துடன் தாங்கள் கொண்டிருந்த தொடர்பினையும் நினைவு கூரும் வண்ணம் இச்சொல்லை மங்கல மொழியாகவும், குலச்சின்னமாகவும் பயன்படுத்தினர் எனக்கூறலாம். இச்சொல்லை நாணயங்களில் மட்டுமன்றி தாம் வெளியிட்ட அரச ஆவணங்களிலும், கொடிகளிலும், கல்வெட்டுக்களிலும் பயன்படுத்தியுள்ளனர் (Pathmanathan 1980 :411-413). கல்வெட்டுக்கள் ஸ்வஸ்தி ஸ்ரீ அல்லது ஸித்தம் என்ற மங்கல மொழியுடன் தொடங்குவது வழக்கம். ஆனால் யாழப்பாண மன்னர்களுடைய கல்வெட்டுக்கள் சேது என்ற மொழியுடன் தொடங்குகிறது. இவற்றிலிருந்து யாழ்ப்பாண மன்னர்கள் சேதுவை ஒரு மங்கல மொழியாக, தெய்வீக ஆற்றல் பொருந்திய மொழியாகப் பயன்படுத்தினர் என்பது தெரிகிறது. யாழ்ப்பாண அரசின் கடைசி மன்னன் சங்கிலியனுக்கும் போத்துக்கேயருக்குமிடையிலே போர் நடைபெற்ற பொழுது சங்கிலியன் படை சேது என்ற மொழிவரையப்

பெற்ற ஒரு பட்டயத்தை எடுத்துச் சென்றதாகக் குவேறோஸ் சுவாமியார் கூறியுள்ளார்.

இம்மன்னர்கள் "சேது காவலன்" என்ற விருதினைக் கொண்டிருந்தனர் என்பதைச் *செகராசசேகரமாலை, தக்ஷிண கைலாயபுராணம்* முதலான நூல்கள் கூறுகின்றன. *செகராசசேகரமாலை* ஆரியச்சக்கரவர்த்தி மன்னருள் ஒருவனை "விடைக் கொடியுஞ் சேதுவும் நீள்கண்டிகள் ஒன்பதும் பொறித்தது மிகைத்த கோவும்" எனக் கூறுகிறது (செகராசசேகரமாலை செய்யுள்.7, கயிலாயமாலை 5). இவ்வாதாரங்களை அடிப்படையாகக் கொண்டு நாணயங்களில் வரும் சேது என்ற மொழியைச் *சேதுகாவலன்* என்ற விருதின் சுருக்கமாக இருக்கலாம் எனப் பேராசிரியர் பத்மநாதன் கருதுகிறார். நாணயங்களில் சேது என்ற மொழியோடு நந்தியையும் முக்கிய இலட்சனையாகப் பயன்படுத்தியுள்ளனர். *தக்ஷிண கைலாயபுராணம்* செகராசசேகரன் என்ற மன்னனை "இடப வான் கொடி எழுதிய பெருமான்" எனவருணிக்கிறது. சோதிட நூலும் சிங்கையாரியனுடைய விடைக்கொடிபற்றிக் கூறுகிறது (Pathmanathan 1980:412-413). இவற்றிலிருந்து சேது மொழியையும், நந்தியையும் இலட்சனையாகப் பொறித்த நாணயங்களை யாழ்ப்பாண மன்னர்களே வெளியிட்டனர் என உறுதிபடக் கூறலாம்.

இந்நாணயங்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து ஆராயப்பட்ட போதிலும் இவற்றை யாழ்ப்பாண மன்னர்களே வெளியிட்டனர் என்ற முடிவுக்கு யாரும் முன்வரவில்லை. முதன் முதலில் சேது நாணயங்கள் பற்றி ஆராய்ந்த பெருமை பிறின்செப், எலியட் என்ற அறிஞர்களையே சாரும். பிறின்செப் தனது இலங்கை நாணயங்கள் என்ற கட்டுரையில் இரு சேது நாணயங்களுக்குரிய படங்களைப் பிரசுரித்து அவற்றைத் தென்னிந்தியாவில் கிடைத்த நாணயங்களுடன் தொடர்புபடுத்தினார் (Prense's 1858 :419-424). இதேகாலப்பகுதியில் இந்நாணயங்களை ஆராய்ந்த எலியட் இவற்றைச் சோழ நாணயங்கள் எனக் குறிப்பிட்டார்

(Elliot 1970:152G, No.72c). இவர்களைத் தொடர்ந்து இந்நாணயங்களை ஆராய்ந்த றைஸ் டேவிட்ஸ் (Rhys Davids) பாண்டி நாட்டுப் புழக்கத்திற்காகச் சிங்கள மன்னன் முதலாம் பராக்கிரமபாகு வெளியிட்டதாகக் கூறினார். முதன்முதலில் திரேசு சுவாமியார் (Rev.Tracey) என்பவர் இராமநாதபுரத்துச் சேதுபதிகள் வெளியிட்ட சேதுபதி என்ற மொழி பொறித்த நாணயங்களுக்கும், சேது என்ற மொழி பொறித்த நாணயங்களுக்கும் இடையிலான வேறுபாடுகளைச் சுட்டிக்காட்டி சேது மொழி பொறித்த நாணயங்கள் இலங்கையில் சிறப்பாக வடஇலங்கையில் கிடைப்பதைக் கொண்டு இவை இலங்கையிலேயே வெளியிடப்பட்டதாகக் கூறினார் (Tracey 1889-94:1-12). சுவாமி ஞானப்பிரகாசர் தமக்குக் கிடைத்த 70 சேது நாணயங்களை ஆய்வுக்கு அடிப்படையாகக் கொண்டு இவற்றை நல்லூரைத் தலை நகராகக் கொண்டு ஆட்சி புரிந்த யாழ்ப்பாண மன்னர்களே வெளியிட்டனர் என்ற கருத்தைத் தக்க சான்றுகளுடன் வெளியிட்டார் (Gnana prakasar 1920: 172-179).

பிற்காலத்தில் இந்நாணயங்களை ஆராய்ந்தவர்களில் பேராசிரியர் பத்மநாதன் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். இவர் தமக்குக் கிடைத்த 80க்கு மேற்பட்ட சேதுநாணயங்களை கால அடிப்படையில் முதன்முறையாக அட்டவணைப்படுத்தியதோடு, நாணயங்களின் எடை, அளவு, குறியீடுகள், சின்னங்கள், கலைநயம் என்பவற்றின் பின்னணியில் அவற்றை ஆறு வகையாகப் பிரித்தார். அவற்றுள் சில நாணயங்களின் வடிவமைப்பு, அளவு, நிறை என்பனவற்றில் உள்ள வேறுபாட்டைக் கருதி உபபிரிவுளாகக் கணித்துள்ளார் (1980 :414-417). இந்நாணயங்கள் தொடர்பாகப் பல கட்டுரைகள் வெளிவந்திருப்பதால் நாணயங்களுக்கிடையிலான முக்கிய வேறுபாடுகள் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்.

1 )நாணயத்தின் வலது புறம் பார்த்த நிலையில் நிற்கும் மனித உருவம். வலதுகை உயர்த்தப்பட்ட நிலையில் நிறைகுடம் போன்ற ஏதோ ஒரு பொருளைத் தாங்கி நிற்கிறது. கீழே சந்திரன். இடப்புறம்

குத்துவிளக்கு. வழக்கமாக சேது நாணயங்களில் வரும் காளையுருவம் இதில் காணப்படவில்லை. நாணயத்தின் பின்புறத்தில் வலது புறம் பார்த்த நிலையில் அமர்ந்திருக்கும் மனிதவுருவம். அதனருகில் தமிழ் எழுத்துக்களில் சேது என்ற பெயர் காணப்படுகிறது.

2) இதில் இடப்புறம் பார்த்து நிற்கும் மனித உருவம். இருபுறமும் குத்து விளக்கு. பின்புறத்தில் இடப்புறமாக அமர்ந்த காளையுருவம். மேல் பகுதியில் பிறைச்சந்திரன். காளையின் கீழ் தமிழில் சேது என்ற பெயர் காணப்படுகிறது.

3) இந்த நாணயம் முதலிரு நாணயங்களைப் போல், ஆனால் வலப்புறம் நிற்கும் மனிதனுக்கு கீழே இடப்புறமாக பூரணகும்பம் போன்ற பொருள் காணப்படுகிறது.

4) நாணயத்தின் முன்புறத்தில் இடப்புறம் குத்துவிளக்கு. வலப்புறம் காளை. நடுவில் வலப்புறம் பார்த்த நிலையில் நிற்கும் மனித உருவம். பின்புறத்தில் வலப்புறம் பார்த்த நிலையில் அமர்ந்திருக்கும் மனித உருவம். வலப்புறம் தமிழில் சேது என்ற பெயர் உள்ளது.

5) முன்புறம் வலப்புறம் நிற்கும் மனிதஉருவம். இடப்புறமாக அமர்ந்த காளையுருவம். அதன் மேற்பகுதியில் பிறைச்சந்திரன். இந்த அம்சத்தை நான்காவது வகை நாணயங்களில் காணமுடியவில்லை. காளையின் வாற்பகுதியுடன் திரிசூலம் காணப்படுகிறது. இடப்புற த்தில் பீடத்துடன் கூடிய குத்துவிளக்கு உள்ளது. நாணயத்தின் பின்புறத்தில் இடப்புறம் அமர்ந்திருக்கும் மனித உருவம். வலப்புறம் தமிழில் சேது என்ற பெயர் காணப்படுகிறது

6)முன்புறம் வலப்புறம் நிற்கும் மனித உருவம். வலக்கைத் தோளுக்கு மேலே ஏதோ ஒரு பொருளை ஏந்தியவாறு உள்ளது. வலப்புறமாக குத்துவிளக்கு. இதற்குப் பக்கத்தில் வேல் காணப்படுகிறது. இடது கை கீழ்நோக்கி ஏதோ ஒரு பொருளைத்

தொட்டவாறு உள்ளது. அது கிளைகளுடன் கூடிய மரமாக அல்லது வச்சிராயுதமாக இருக்கலாம். பின்புறத்தில் மனித உருவத்திற்குப் பதிலாக இடப்புறமாக அமர்ந்திருக்கும் காளையுருவம். அதன் மேற்பக்கமாகப் பிறைச்சந்திரனும், சூரியனும் உள்ளன. காளையின் கீழ் தமிழில் சேது என்ற பெயர் காணப்படுகிறது. இவை மிகச் சிறியவை. மற்றைய நாணயங்களில் இடம் பெற்ற மனித உருவத்திற்குப் பதிலாக எட்டு இதழ் கொண்ட தாமரை மலரின் இதழ்கள் இடம் பெற்றுள்ளன. காளையுருவம் பீடத்தில் அமர்ந்திருப்பது இன்னொரு சிறப்பாகும்.

பிற்காலத்தில் மேலும் பலர் சேது நாணயங்களைக் கண்டுபிடித்து ஆராய்ந்துள்ளனர். அவையனைத்தும் மேற்கூறப்பட்ட வகையைச் சேர்ந்தவை. அண்மையில் எமது களஆய்வின்போது மேற்குறிப்பிட்ட நாணயங்களுடன் இதுவரை ஆய்வுக்கு உட்படுத்தாத நான்கு வகையான நாணயங்கள் கிடைத் துள்ளன. அவற்றுள் வெள்ளி நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன (படம்–1).



இதன் மூலம் செப்பு நாணயங்கள் மட்டுமன்றி வெள்ளி நாணயங்களும் வெளியிடப்பட்டமை தெரியவருகிறது.

மேலும் சில நாணயங்களுக்கு முன்னால் காளையின் முகத்தைப் பார்த்தவாறு தாமரை(படம்–2), மயில் (படம்–3), சிறிய வடிவில் மனிதன் (படம்–4) போன்ற சின்னங்கள் பொறிக்கப்பட்ட நாணயங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.



இவற்றில் இருந்து சேது மொழிபொறித்த நாணய வகைகள் மேலும் இருக்கலாம் என்பது தெரிகிறது.

### கந்தன் பெயரில் நாணயம்

நல்லூர் இராசதானி கால நாணயங்கள் பற்றி ஆராய்ந்த அறிஞர்கள் சேது என்னும் பெயர் பொறித்த நாணயத்தையே இக்கால மன்னர்கள் வெளியிட்டார்கள் எனக் கூறிவந்துள்ளனர். ஆனால் எமது களஆய்வின் போது இந்நாணயங்களுடன் "கந்தன்", ஆரியச்சக்கரவர்த்திகள் என்ற பொருள் தரும் இருவகை நாணயங்கள் கிடைத்துள்ளன. இவ்வகை நாணயங்கள் வடஇலங்கையில் மேலும் சிலரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சில நாணயங்கள் யாழ்ப்பாணத்தில் திருநெல்வேலியில் உள்ள ஈவிலின் பண்பாட்டு நிறுவனத்தில் வைக்கப்பட்டிருந்தன. தமிழ் நாட்டில் கரூரில் இவை அரிதாகக் கிடைத்துள்ளது. வடஇலங்கையில் கிடைத்த சில

நாணயங்கள் அங்குள்ள ஒருவர் தமிழ் நாடு இராசபாளையத்தைச் சேர்ந்த ஒருவர் மூலம் விற்பனை செய்த நாணயங்களில் சில சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளன. இந்நாணயங்கள் யாழ்ப்பாண மன்னர்களால் வெளியிடப்பட்டதென்பதற்கு உறுதியான காரணங்களைக் காட்டலாம். அவற்றுள் "கங்" என்ற பெயர் பொறித்த நாணயத்தை முதலில் நோக்கலாம்(படம்–5).





| | |
|---|---|
| இடம் | : மண்ணித்தலை(பூநகரி) |
| உலோகம் | : செப்பு |
| அளவு | : 1.5செ.மீ |
| எடை | : 2.0 கிராம். |

முன்புறம்

விளிம்பைச்சுற்றி இருவட்டங்கள். இருவட்டதிற்குள்ளும் தடித்த புள்ளிகள். இரண்டாவது வட்டத்திற்குள் இடப்புறம் பார்த்த நிலையில் மயில் சின்னம். இதன் தோகைகள் சுருங்கிய நிலையில் அதன் கொண்டை மிக உயரமாக உள்ளது. ஏனைய நாணயங்களில் மயிலின் வாயில் பாம்புச் சின்னம் காணப்படுகிறது. ஆனால் இந்நாணயத்தில் உள்ள சின்னம் பாம்பு உருவத்திலிருந்து சற்று வேறுபட்ட உருவமாக உள்ளது. மயிலுக்கு மேலே விளிம்பை ஒட்டியவாறு பிறைச்சந்திரன், சூரியன் காணப்படுகின்றன.

**பின்புறம் :**

முன்புறம் போல் விளிம்பைச் சுற்றி இரு வட்டங்கள், வட்டத்திற்குள் தடித்த புள்ளிகள். ஆனால் இவை விளிம்பிலிருந்து சற்று விலகி முடிவுறாத நிலையில் உள்ளன. இடப்புறமாக வேல். அதன் கீழ் பெட்டி வடிவில் சதுரக் கோடு. அதற்குள் சக அடையாளம். மையத்தில் மேற்புறமாக தமிழில் "கங்" என்ற பெயர் காணப்படுகிறது. இதன் கீழ் இரு கால்களைக் குறிக்கும் உருவங்கள். இடப்புறமாக முக்கோண வடிவில் முடிவுறாத நிலையில் உள்ள வடிவம். இது குறியீடாக இருக்கலாம். இச்சின்னங்களைச் சுற்றி வட்டமான சிறு புள்ளிகள் உள்ளன.

இந்நாணயத்தில் மயில் ஒரு முக்கிய சின்னமாக இடம்பெற்றுள்ளது. மயிலை ஒரு சின்னமாக நாணயங்களில் பயன்படுத்தும் மரபு இந்தியாவில் மிகத் தொன்மையானது. கி.மு. 4ஆம், 3ஆம், நூற்றாண்டில் இருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை வெளியிடப்பட்ட வடஇந்திய, தென்னிந்திய, தமிழக நாணயங்கள் பலவற்றில் மயில் ஒரு சின்னமாக இடம்பெற்றுள்ளது. வடஇந்திய நாணயங்கள் சிலவற்றில் மயில் சின்னத்துடன் வேலும் முருகனைக் குறிக்கும் கார்த்திகேய, குமார போன்ற பெயர்களும் பொறிக் கப்பட்டுள்ளது (Gupta 1969:187). தமிழ் நாட்டில் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் பல்லவர் வெளியிட்ட நாணயங்களில் முன்புறம் காளையுருவமும் அதன் மேற்புறத்தில் பல்லவர் கால எழுத்தில் "தம்" என்ற சொல்லும், பின்புறத்தில் இடப்புறம் நோக்கி நிற்கும் மயில் சின்னமும் இடம் பெற்றுள்ளன (சீதாராமன் 1998). கி.பி.17ஆம் நூற்றாண்டில் இருந்து தமிழகத்தில் ஆட்சி புரிந்த மன்னர்கள் பலரும் மயில் சின்னத்துடன் பெயரையும் பொறித்தனர். இதற்கு இராமநாதபுரச் சேதுபதிகள், மதுரைநாயக்கர், ஆர்க்காடு நவாப்பு என்போரால் வெளியிடப்பட்ட நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. மதுரையில் கிடைத்த நாணயம் ஒன்றின் முன்புறத்தில் இடப்புறம் நோக்கிய மயிலும், அதற்கு மேலே வேல் சின்னமொன்றும்

இடம்பெற்றுள்ளன. பின்புறத்தில் இருவரிகளில் தமிழில் குமரன்து(ணை) என்று எழுதப்பட்டுள்ளது (ஆறுமுக சீதாராமன் 1998:39). திருநெல்வேலியில் கிடைத்த இதே காலப்பகுதிக்குரிய இன்னொரு நாணயத்தில் மயில் மீது ஆறு தலைகளுடன் இருக்கும் முருகன் உருவமும், பின்புறத்தில் தமிழில் சேதுபதி என்ற பெயரும் காணப்படுகிறது (சீதாராமன் 1997). இலங்கையில் கி.மு.2 ஆம் நூற்றாண்டிலிருந்து வெளியிடப்பட்ட லக்ஷ்மி நாணயங்களில் பிற சின்னங்களுடன் மயில், வேல், சேவல் போன்ற சின்னங்கள் இடம்பெற்றுள்ளன. இதன் பின்னர் யாழ்ப்பாணமன்னர் வெளியிட்ட சேதுமொழி பொறித்த நாணயங்களில் பிற சின்னங்களுடன் மயில் சின்னமும் காணப்படுகின்றது.

மேற்கூறப்பட்ட நாணயத்திலிருந்து பண்டு தொட்டு இந்தியாவிலும், இலங்கையிலும் முருகனின் உருவத்தோடு அவனின் வாகனமாகிய மயில், ஆயுதமாகிய வேல் என்பவற்றோடு அவன் பெயர்களையும் நாணயங்களில் பொறிக்கும் மரபு இருந்ததைக் காணமுடிகிறது. இப்பின்னணியில் வைத்து நாம் ஆய்வுக்கு உட்படுத்திய மேற்குறிப்பிட்ட நாணயங்களை நோக்கும் போது அவற்றில் இடம் பெற்றுள்ள மயில் சின்னம் நாணயங்களை வெளியிட்ட மன்னனுக்கு கந்தன்(முருகன்) வழிபாட்டில் உள்ள ஈடுபாடு தெரிகிறது. இதை நாணயத்தில் உள்ள வேல் சின்னத்துடன் "கங்" என்ற பெயரும் உறுதிப்படுத்துகிறது. இந்நாணயங்களில் இருந்து அறியப்படும் பல்வேறு அம்சங்கள் இந்தியாவில் இதுவரை கிடைத்த மயில் சின்னம் பொறித்த நாணயங்களில் இருந்து வேறுபடுகின்றன. அவற்றின் அடிப்படையில் இந்நாணயத்தை யாழ்ப்பாண மன்னர்கள் வெளியிட்டனர் எனக் கூறமுடிகிறது.

நாணயத்தில் உள்ள எழுத்துக்கள் கி.பி.14ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவை என்பதை அவற்றின் எழுத்தமைதி கொண்டு கணிப்பிடமுடிகிறது. அதில் வரும் "கங்" என்ற பெயர் இந்நாணயங்களை தமிழ் மன்னர்கள் அல்லது தமிழ் மக்களை ஆட்சி

புரிந்த மன்னர்கள் வெளியிட்டுள்ளார்கள் என்பதைக் காட்டுகின்றன. சமகாலத்தில் தமிழ் நாட்டு மன்னர்கள் இவ்வகை நாணயங்களை வெளியிட்டதற்கோ அல்லது வேறு வடிவங்களில் மயில் சின்னத்துடன் தமிழில் பெயர் பொறித்த நாணயங்களை வெளியிட்டதற்கோ இதுவரை சான்றுகள் கிடைத்ததாகத் தெரியவில்லை. மாறாக யாழ்ப்பாண மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களில் இம்மரபு காணப்படுகிறது. மேலும் மேற்குறிப்பிட்ட நாணயங்கள் வடஇலங்கையில் கிடைத்த அளவிற்கு தமிழகத்தில் கிடைத்ததாகவும் தெரியவில்லை. அத்துடன் இந்தியா குறிப்பாக தமிழக நாணயங்கள் தொடர்பாக வெளிவந்த எந்த நூலிலும் இவ்வகை நாணயம் பற்றிக் குறிப்பிடப்பட்டதாகவும் தெரியவில்லை.

யாழ்ப்பாண மன்னர்கள் வெளியிட்ட சேது மொழி பொறித்த சில நாணயங்களில் பிற சமயச் சின்னங்களுடன் வேல், மயில் ஆகிய சின்னங்களும் இடம்பெற்றுள்ளன. இவற்றில் இடப்புறம் நோக்கி அமர்ந்திருக்கும் நந்தியின் முகத்திற்கு நேரெதிரே வலப்புறம் பார்த்த நிலையில் மயில் காணப்படுகிறது (பக்.148). இம்மயில் சின்னத்திற்கும் மேலே குறிப்பிட்ட நாணயத்தில் வரும் மயில் சின்னத்திற்கும் இடையே தோற்ற அமைப்பில் நெருங்கிய ஒற்றுமை காணப்படுகிறது. இரண்டிலும் மயிலின் தோகை சுருங்கிய நிலையிற் காணப்படுகிறது. ஆனால் இந்திய நாணயங்களில் இடம்பெற்றுள்ள மயில்கள் பெரும்பாலும் தோகையை விரித்து ஆடும் நிலையில் காணப்படுகின்றன.

யாழ்ப்பாண மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களில் வரும் "சேது" என்ற சொல்லின் விரிந்த வடிவமே அம்மன்னர்கள் பயன்படுத்திய *சேதுகாவலன்* என்ற விருதுப் பெயராகும் என்பது பேராசிரியர் பத்மநாதனின் கருத்தாகும் ( 1980). *செகராசசேகரமாலை* எனும் நூல் யாழ்ப்பாண மன்னர்களில் ஒருவனான செகராசசேகரனை *கந்தமலையாரியர்கோன்* என வருணிக்கிறது (பத்மநாதன் 1992317). கந்தமலை எனப்படுவது தென்னிந்தியாவின் தென்மூலையிலுள்ள கந்தமாதனம் என்பதாகும். சேது எனும் தலம் கந்தமாதனத்தில்

உள்ளதாகச் சேதுபுராணம் கூறுகிறது. இது ஆரியச்சக்கரவர்த்திகளது பூர்விக இடங்களில் ஒன்று. எனவே சேதுகாவலன் என்ற விருதுப் பெயரின் சுருக்கமே நாணயங்களில் வரும் "சேது" எனக் கொண்டால், செகராசசேகரமாலையில் வரும் *கந்தமலையாரியர்கோன்* என்ற விருதுப்பெயரின் சுருக்கமாக நாணயங்களில் வரும் "கந்த" என்ற பெயரைக் கொள்வது முற்றிலும் பொருத்தமாகும். ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்கள் சேது எனும் சொல்லைக் குலச்சின்னமாக, அரசசின்னமாகப் பயன்படுத்திய அதேவேளை அச்சொல்லை மங்கல மொழியாகவும், தெய்வீக மொழியாகவும் நாணயங்களில் பயன்படுத்தியுள்ளனர். இதற்கு ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்கள் சைவசமயததின் மீது கொண்ட ஈடுபாடு காரணமாகும். அதேபோல் நாணயங்களில் வரும் "கங்", என்ற பெயரும் "கந்தமலையாரியர்கோன்" என்ற விருதுப் பெயரும் ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்கள் முருகவழிபாட்டுடன் கொண்ட ஈடுபாட்டைக் காட்டுகிறது எனக் கூறலாம்.

ஆரியச்சக்கரவர்த்தி பெயரில் நாணயம் (படம்–6)



| | | |
|---|---|---|
| இடம் | : | வீரபாண்டியன்முனை(பூநகரி). |
| உலோகம் | : | செப்பு. |
| அளவு | : | 1.3 செ.மீ. |
| எடை | : | 1.9 கிராம். |

## முன்புறம்

விளிம்பைச்சுற்றி இருவட்டங்கள். இருவட்டதிற்குள்ளும் தடித்த புள்ளிகள். இதில் காணப்படும் மயில் உருவம் முதல் கூறப்பட்ட நாணயத்தில் காணப்படும் மயில் உருவத்தைப் பெருமளவு ஒத்திருந்தாலும் சில அம்சங்களில் வேறுபடுகின்றன. முதலாவது நாணயத்தில் இடப்புறம் பார்த்த நிலையில் உள்ள மயில் இந்நாணயத்தில் வலப்புறம் பார்த்த நிலையில் காணப்படுகிறது. அத்துடன் இதன்வாயில் காணப்படும் சின்னம் பாம்பு எனத் தெளிவாகத் தெரிகிறது. இந்நாணயத்தில் உள்ள பிறைச்சந்திரனும், சூரியனும் பெருமளவு தேய்வடைந்த நிலையில் உள்ளன.

## பின்புறம்

விளிம்பைச் சுற்றி வட்டம். இதில் வேல் சின்னம் காணப்படவில்லை. முதலாவது நாணயத்தில் "கங்" என எழுதப்பட்ட இடத்தில் இங்கு "ஆ" என்ற எழுத்துக் காணப்படுகிறது. இதனுடன் இணைந்த நிலையில் முதலாவது நாணயத்தில் வருவது போல் மனித வடிவில் அமைந்த கால் உருவங்கள் காணப்படுகின்றன. இதற்கு இடது, வலது புறமாக முதலாவது நாணயத்தில் வரும் சின்னங்கள் காணப்படுகின்றன.

இந்நாணயம் "கங்' என்ற பெயர் பொறித்த நாணய அமைப்பைப் பெரிதும் ஒத்துள்ளது. ஆனால் "கங்" என்ற பெயருக்குப் பதிலாக இதில் "ஆ" என்ற எழுத்து மட்டும் காணப்படுகிறது. இரு நாணயங்களில் உள்ள மயிலின் தோற்ற அமைப்பு, சின்னங்களிடையே காணப்படும் ஒற்றுமைகள், நாணயங்களின் வடிவமைப்பு, எழுத்துக்களின் கால ஒற்றுமை என்பவற்றை நோக்கும் போது இவை குறிப்பிட்ட காலப் பகுதியில் குறிப்பிட்ட ஒரு வம்சத்தால் அல்லது மன்னர்களால் வெளியிடப்பட்டவை என்பது தெரிகிறது. இருவகை நாணயங்களிலும் உள்ள சின்னங்களில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. இந்த வேறுபாடுகள் குறிப்பிட்டகாலப் பகுதிக்குள் வெளியிடப்பட்ட எல்லா நாட்டு நாணயங்களிலும் காணக் கூடிய ஒன்றாகும்.

இந்நாணயத்தில் வரும் "ஆ" என்ற எழுத்துப் பல நிலையில் ஆராயப்பட வேண்டிய ஒன்று. இடைக்காலத்தில் தென்னிந்தியாவில் வெளியிடப்பட்ட நாணயங்களை ஆராய்ந்தால் அவற்றுள் சிலவற்றில் மன்னன் பெயருக்குப் பதிலாக அவன் அல்லது அவனது வம்சத்தின் முதலெழுத்தை நாணயங்களில் பயன்படுத்தும் முறை காணப்பட்டது. இதற்கு சேரமன்னர் நாணயங்களில் பயன்படுத்திய "ச" என்ற எழுத்தையும் (Mitchiner1998:160-61), தமிழ் நாட்டிலுள்ள கொங்கு நாட்டை மூன்றாம் பல்லளா மன்னன் ஆட்சி செய்த போது (கி.பி. 1292–1345) வெளியிட்ட நாணயங்களில் வரும் "ப" என்ற எழுத்தையும் குறிப்பிடலாம். இதேபோல் இக்காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்களில் மன்னனின் அல்லது வம்சத்தின் பெயருக்குரிய முதலெழுத்தை மன்னனின் தலையாகக் கொண்டு உடலின் கீழ்ப் பாகங்களை நாணயங்களில் பொறிக்கும் மரபு காணப்பட்டது. இதற்கு மூன்றாம் பல்லாளன் வெளியிட்ட நாணயங்களே சிறந்த சான்றாகும் (ஆறுமுக சீதாராமன் 1996: 89-97). இங்கே "கங" என்ற எழுத்திற்கு கீழே இருப்பது போல் "ஆ" என்ற எழுத்திற்கு கீழேயும் மனிதனின் இடுப்புடன் இணைந்த காற்பகுதி காணப்படுகிறது. இதை "ஆ" எழுத்துப் பொறித்த நாணயங்களில் தெளிவாகக் காணமுடிகிறது. இங்கே "கங" என்ற பெயரின் விரிந்த வடிவமாக "கங்கமலை யாரியர்கோன்" கொள்ளப்படும் போது "கங" என்ற எழுத்திற்கு கீழேயுள்ள மனித உருவம் அப்பெயருக்குரிய மன்னனைக் குறித்ததெனக் கூறுவதுமிகையல்ல. அப்படியானால் "ஆ" என்ற எழுத்திற்கு கீழேயுள்ள மன்னன் யார் என்ற கேள்வி எழுகின்றது. தமிழ்ப்பேரகராதியில் "ஆ" என்பதற்கு இடபம் என்ற பொருள் உண்டு (T.L.V:201). யாழ்ப்பாண மன்னர்கள் நந்தியை நாணயங்களில் பயன்படுத்தியதால் அவ்வாறு கொள்ளவும் இடமுண்டு. ஆனால் "ஆ" என்ற எழுத்திற்கு கீழே இருகால் மட்டுமே காணப்படுவதால் இதை ஒரு மன்னனைக் குறித்த உருவமாகக் கொள்வதே பொருத்தமாகும். இதனால் "ஆ" என்ற எழுத்து ஒரு மன்னனுக்குரிய பெயரையே சுட்டி நிற்பதாக எடுத்துக் கொள்ளலாம். யாழ்ப்பாணத்தில் ஆட்சி புரிந்த ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்கள் தமது பெயருக்குப்

பதிலாக தமது குலத்தை அல்லது பூர்வீகத்தைக் குறிக்கும் "சேது" என்ற பெயரையே நாணயங்களில் பயன்படுத்தியுள்ளனர். இதனால் நாணயங்களில் வரும் "ஆ" என்ற எழுத்து ஆரியச்சக்கரவர்த்திகள் என்ற வம்சப்பெயரைக் குறிக்கும் "ஆ" என்ற முதலெழுத்து எனக் கூறுவது முற்றிலும் பொருத்தமாகும்.

இதுவரை கூறப்பட்டவற்றிலிருந்து நல்லூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்களே சேது என்ற பெயருடன் கந்தன், ஆரியச்சக்கரவர்த்தி என்ற பெயர்களிலும் நாணயங்கள் வெளியிட்டுள்ளார்கள் என்பது தெரிகிறது. இவை நல்லூர் இராசதானி பற்றிய வரலாற்று ஆய்வுக்கு கிடைத்த மேலும் ஒரு முக்கிய சான்று என்பதில் சந்தேகமில்லை. இவ்வரசைப் பல்வேறு மன்னர்கள் ஆட்சி புரிந்துள்ளனர். ஆயினும் எந்தெந்த காலப்பகுதியில் எந்தெந்த மன்னன் ஆட்சிபுரிந்தான் என்பதை அறுதியிட்டுக் கூறுவதற்கு இதுவரை தக்க சான்றுகள் கிடைக்கவில்லை. முறைப்படி ஆராயப்பட்டதென்ற வகையில் பேராசிரியர் பத்மநாதனின் யாழ்ப்பாண இராச்சியம் என்ற நூலைச் சிறப்பாகக் குறிப்பிடலாம் (1972). அதில் கூட சான்றுகள் அற்ற நிலையில் சில மன்னர்கள் பற்றியும், அவர்களின் ஆட்சிக் காலம் பற்றியும் ஐயங்கள் எழுப்பப்பட்டுள்ளதைக் காணலாம். இந்நிலையில் மேற்கூறப்பட்ட இரு நாணயங்களை எந்த மன்னர்கள் வெளியிட்டார்கள் என அறுதியிட்டுக் கூறுவது கடினமாகும். ஆனால் நாணயங்களில் இடம்பெற்றுள்ள "கந்" என்ற பெயருக்கும், இராசதானியின் தலைநகராக இருந்த நல்லூரில் கந்தன் ஆலயத்தைக் கட்டிய மன்னனுக்கும் மற்றும் "கந்தமலையாரியர்கோன்" என்ற விருதுப்பெயரைத் தாங்கிய மன்னனுக்குமிடையே ஒருவித தொடர்பு இருப்பது போலக் காணப்படுகிறது.

கைலாயமாலையில் வரும் தனிச் செய்யுள் நல்லூரில் கந்தன் ஆலயத்தையும், யாழ்ப்பாண நகரத்தையும் அமைத்தவன் புவனேகபாகு எனக் கூறுகிறது.

"இலக்கிய சகாப்த மெண்ணூற்றெழுபதா மாண்ட தெல்லை

அலர்பொலி மாலை மார்பனாம்புவ னேக வாகு
நலம்மிகும் யாழ்ப்பாணத்து
நகரிகட்டுவித்து நல்லைக்
குலவிய கந்த வேட்குக்கோயிலும் கட்டுவித் தானே"

இச்செய்யுள் குறிக்கும் காலத்தை சகவருடம் எண்ணூற்றெழுபதாக எடுத்துக் கொண்டு பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ் மந்திரி புவனேகபாகு காலத்தில் அரசும், கந்தன் ஆலயமும் தோன்றியதாகக் கூறுகின்றனர். ஆனால் பத்தாம் நூற்றாண்டில் யாழ்ப்பாணத்தில் உள்ள நல்லூரில் இராசதானி இருந்ததற்கோ, புவனேகபாகு என்ற பெயரில் மந்திரி ஆட்சி புரிந்ததற்கோ சான்றுகள் இல்லை. இலங்கையில் புவனேகபாகு என்ற பெயரில் 7மன்னர்கள் ஆட்சி புரிந்துள்ளனர். இவர்களுள் 6ஆம் பராக்கிரமபாகு தென்னிலங்கையில் ஆட்சி செய்த காலத்தில் அவன் வளர்ப்பு மகனாகிய *சபுமால்குமர* என்ற செண்பகப்பெருமாள் கி.பி.1540 இல் நல்லூர் இராசதானியைக் கைப்பற்றி 18ஆண்டுகள் புனேகபாகு என்ற பெயருடன் ஆட்சிபுரிந்துள்ளான். இதை யாழ்ப்பாணத்தில் கிடைத்த இவன்காலக் கல்வெட்டே உறுதிப்படுத்துகிறது (Indrapala 1971:29-31). இவனே மேற்படி செய்யுளில் வரும் புவனேகபாகு என்பதையும், அவனே ஏற்கனவே இருந்த கந்தன் ஆலயத்தைப் புதுப்பித்துக் கட்டினான் என்பதையும் வரலாற்றறிஞர்கள் தக்கசான்றுகளுடன் நிறுவியுள்ளனர். இன்றும் நல்லூர் கட்டியத்தில் ஓதப்படும் சபுமால், ஸ்ரீசங்கபோதி, புவனேகபாகு போன்ற பெயர்கள் இவனையே குறிக்கிறது. இவன் கஜவல்லி, மகாவல்லி, சுப்பிரமணியர் (கந்தன்) போன்ற கடவுளடரிடம் மிகுந்த பக்தியுடையவன் என்று அக்கட்டியம் மேலும் கூறுகிறது (பத்மநாதன் 1972:57).

கந்தன் ஆலயத்தோடு இவனுக்குள்ள தொடர்பை நோக்கும் போது மயில் மற்றும் "கந்" என்ற பெயர் பொறித்த நாணயங்களை இம்மன்னன் வெளியிட்டானா? என்ற கேள்வி எழுகின்றது. நந்தி உருவம் பொறித்த அனைத்து நாணயங்களிலும் சேது மொழி

இடம்பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. இதற்கு ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்களின் குலமரபுச் சின்னமாக சேது இருந்ததே காரணமாகும். புவனேகபாகு ஆரியச்சக்கரவர்த்தி குலமரபைச் சாராத மன்னன். இதனால் இம்மன்னன் சேதுவுக்குப் பதிலாக "கங்" என்ற பெயரையும், நந்திக்குப் பதிலாக சேது நாணயங்களில் பயன்படுத்தப்பட்ட மயில் சின்னத்தையும் தான்வெளியிட்ட நாணயங்களில் முக்கிய சின்னமாகப் பொறிப்பித்தான் என தொடர்புபடுத்திப் பார்க்க இடமுண்டு. ஆனால் ஆரியச்சக்கரவர்த்தி வம்சத்தைக் குறிக்கும் "ஆ" என்ற முதலெழுத்தும், இம்மன்னர்கள் பயன்படுத்திய" கந்தமலையாரியர் கோன்" என்ற விருதுப்பெயரின் சுருக்கத்தைக் குறிக்கும் "கங்" என்ற பெயரும் மயில் உருவம் பொறித்த நாணயங்களில் வருவதால் இந்நாணயங்களைப் புவனேகபாகு மன்னனுடன் தொடர்புபடுத்திப் பார்ப்பது முரண்பாடாகத் தோன்றுகிறது. இதனால் இவற்றை ஆரியச்சக்கரவர்த்தி மன்னர்களுடன் தொடர்புபடுத்துவதே பொருத்தமாகும்.

பொதுவாக இவர்கள் வெளியிட்ட நாணயங்கள் அனைத்திலும் நந்தியும், சேது என்ற மொழியும் முக்கிய சின்னங்களாகக் காணப்பட்டுள்ளன. ஆனால் எல்லா நாணயங்களிலும் இவை ஒரே முக்கியத்துவத்தைப் பெற்றதாகக் கூறமுடியாது. சில நாணயங்களில் வழக்கமாக நந்தி பொறிக்கப்பட்ட இடத்தில் அமர்ந்த அல்லது நிற்கும் நிலையில் மன்னன் உருவமும், இதற்கு இடப்புறமாக பக்கவாட்டில் சிறிய நந்தி உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. வேறு சில நாணயங்களில் சேது மொழி பொறிக்கப்பட்ட இடத்தில் அமர்ந்த அல்லது நிற்கும் நிலையில் மன்னன் உருவமும், இதற்கு இடப்புறமாக பக்கவாட்டில் சேது மொழியும் பொறிக்கப்பட்டுள்ளன. இதில் சிறப்பாகக் சுட்டிக்காட்டக் கூடிய அம்சம் சில நாணயங்களில் நந்தியுடன் கந்தன் வழிபாட்டைக் குறிக்கும் வேல் சின்னமும் மயில் சின்னமும் இடம்பெற்றிருப்பதாகும். இது மயிலைத் தனியொரு சின்னமாக நாணயங்களில் பொறிக்கும் முன்னரே அதை நந்தியுடன் பொறிக்கும் மரபு இருந்ததைக் காட்டுகிறது. இது ஒருவகையில் இந்நாணயங்களை வெளியிட்ட மன்னர்கள் சிவ வழிபாட்டுடன்

கந்தன் வழிபாட்டிலும் ஈடுபாடு கொண்டிருந்ததை எடுத்துக் காட்டுவதாகக் கொள்ளலாம். இதன் இன்னொரு கட்டத்தைத்தான் இக்கால நாணயங்களில் வழக்கமாக இடம்பெற்ற நந்தி, சேது மொழிக்குப் பதிலாக கந்தன் வழிபாட்டுடன் தொடர்புடைய மயில், வேல் சின்னங்களுடன் "கந்" என்ற பெயரும் இடம்பெற்றுள்ளதைக் காட்டுகிறது எனலாம். இந்த வேறுபாடுகள் ஒருவகையில் இந்நாணயங்களை வெளியிட்ட மன்னனுக்கு ஏனைய மன்னர்களை விட கந்தன் வழிபாட்டோடு மிகுந்த ஈடுபாடு இருந்ததை இவை காட்டுவதாக எடுத்துக் கொள்ளலாம். இதன் காரணமாகவே *ஆரியச்சக்கரவர்த்தி* மன்னர்களுள் ஒருவன் *கந்தமலையாரியர்கோன்* என்ற விருதுப் பெயரைப்பெறக் காரணம் எனக் கருதலாம்.

செகராசசேகரமாலை என்ற நூல் "கந்தமலையாரியர்கோன்" என்ற விருதுப் பெயரைத்தாங்கியவன் செகராசசேகர மன்னன் எனக் கூறுகிறது. *செகராசசேகரம், பரராசசேகரம்* என்பது யாழ்ப்பாண மன்னர்கள் மாறிமாறிச் சூடிக் கொண்ட சிம்மாசனப் பெயர்களாகும். இதில் *கந்தமலையாரியர்கோன்* என்ற விருதுப் பெயரைத் தாங்கிய செகராசசேகர மன்னன் யார் என்பது தெரியவில்லை. ஆனால் கந்தமலையாரியர்கோன் என்ற விருதுப்பெயர் பற்றிக் கூறும் செகராசசேகரமாலை என்ற நூல் 14ஆம் நூற்றாண்டில் *வரோதய சிங்கையாரியன்* காலத்தில் எழுதப்பட்டதாகும். இவனும் செகராசசேகரன் என்ற சிம்மாசனப் பெயரைப் பெற்றிருந்தான். இதனால் இவனும் "கந்தம லையாரியர்கோன்" என்ற விருதுப்பெயரைப் பெற்றிருக்கலாம் எனக் கருதவும் இடமுண்டு. இவன் ஆட்சியில்தான் யாழ்ப்பாண இராச்சியம் அரசியல், பொருளாதாரம், வெளிநாட்டு வர்த்தகம் என்பவற்றில் உன்னதநிலையில் இருந்ததை பல்வேறு வரலாற்று மூலங்களில் இருந்து அறியமுடிகிறது. இவன் தென்னிலங்கை மன்னர்களிடம் திறைபெற்றான் எனவும், முஸ்லிம் படையெடுப்பால் பலவீனமுற்ற பாண்டியப் பேரரசுக்கு ஆதரவாக பொன்னையும், யானைகளையும் கொடுத்தான் எனவும் வரலாற்றிலக்கியங்கள் கூறுவது இம்மன்னனின் ஆட்சிக்காலச்

சிறப்பைக் காட்டுகிறது. இவன் தமிழையும் வடமொழியையும் வளர்க்க உள்ளூர் மற்றும் தமிழகத்திலிருந்து வந்த புலவர்களுக்கு பொன் னாலான பல பொருட்களைப் பரிசாகக் கொடுத்தது பற்றி செகராசசேகரமாலைகூறுகிறது (1942:10). இம்மன்னன் பற்றி யாழ்ப்பாண அரசு கால இலக்கியங்கள் கூறுகின்றவற்றைச் சிங்கள இலக்கியங்களுடனும், சமகால பாண்டிய, சிங்களக் கல்வெட்டுக் களுடனும் ஒப்பிட்டு இவனின் ஆட்சிக்காலம் 14ஆம் நூற்றாண்டெனப் பேராசிரியர் பத்மநாதன் கணித்துள்ளார் (1972:44-247). ஏறத்தாழ இதே காலத்தோடு "கங்" என்ற பெயர் பொறித்த நாணயங்களையும் தொடர்புபடுத்தக் கூடியதாக இருக்குமாயின் இவனே இந்நாணயங்களை வெளியிட்டான் எனக் கூறுவது பெருமளவு பொருத்தமாகத் தோன்றுகிறது. ஆனால் மேற்குறித்த சின்னங்களுடன் ஆரியச்சக்கரவர்த்திகளைக் குறிக்கும் "ஆ" என்ற எழுத்துப் பொறித்த நாணயங்களும் இக்காலத்தில் வெளியிடப்பட்டதால் இவ்வகை நாணயங்கள் இவன் ஆட்சிக்காலத்தில் மட்டும் தான் வெளியிடப் பட்டதா? என்பதை அறிஞர்கள் மேலும் ஆராய இடமுண்டு.

# நாணயங்களால் அறியப்படும் தமிழர் வரலாறு

பண்டைய கால வரலாற்றை அறிய உதவும் நம்பகமான வரலாற்று மூலாதாரங்களில் நாணயங்களும் ஒன்றாகும். இவற்றை வரலாற்றாய்வுக்குப் பயன்படுத்தும் மரபு ஐரோப்பியரிடையே பதினெட்டாம் நூற்றாண்டளவில் உணரப்பட்டாலும், இந்தியாவில் அதிலும் குறிப்பாக இலங்கையில் இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இருந்தே ஏற்பட்டதெனக் கூறலாம். ஒரு நாட்டில் அல்லது வட்டாரத்தில் சுதேச நாணயங்கள் மட்டுமன்றி, வணிகத்தொடர்பால் அயல் நாட்டு நாணயங்களும் புழக்கத்தில் இருந்ததற்கு சான்றுகள் உண்டு. இதில் அயல் நாட்டு நாணயங்கள் பெரும்பாலும் அவை கண்டெடுக்கப்பட்ட இடத்திற்கும் அயல் நாடுகளுக்கும் இடையில் இருந்திருக்கக் கூடிய அரசியல், வர்த்தகத் தொடர்புகளை அறியவே பெரிதும் உதவுகின்றன. சுதேச நாணயங்கள் அவை கண்டெடுக்கப்பட்ட வட்டாரத்தின் அல்லது அந்த நாட்டில் வாழ்ந்த மக்களின் குடியிருப்பு, மொழி, எழுத்து, மதம், பண்பாடு என்பவற்றைக் கால அடிப்படையில் கண்டு கொள்ளப் பெரிதும் உதவுகின்றன. அண்மைக் காலத்தில் இலங்கைத் தமிழர் வரலாற்றை ஆராய்ந்த அறிஞர்கள் பலரும் இலங்கையில் கிடைத்த நாணயங்களையும் ஒரு சான்றாகப் பயன்படுத்தியுள்ளனர். ஆயினும் கி.பி.13ஆம் நூற்றாண்டுக்கு முன் இலங்கையில் புழக்கத்திலிருந்த அனைத்து தமிழ் நாணயங்களும் தமிழகத்தில் இருந்து வந்தவை என்ற கண்ணோட்டத்திலேயே அவற்றை இலங்கைத் தமிழர் வரலாற்றோடு இணைத்துப் பார்த்துள்ளனர். இதில் தப்பான வரலாற்று முடிவுகள் ஏற்படவும் இடமுண்டு. இந்நிலையில் பண்டு தொட்டு

இலங்கைத் தமிழர்கள் நாணயங்கள் வெளியிட்டு வந்ததற்கான சான்றுகள் கிடைத்திருப்பது தமிழரின் பூர்வீக வரலாற்றுக்கு இவை புது வெளிச்சம் ஊட்டும் என்பதில் சந்தேகமில்லை.

## நாணயங்களின் எழுத்தும் மொழியும்

ஒரு நாட்டில் அல்லது வட்டாரத்தில் புழக்கத்தில் இருந்த எழுத்தையும், மொழியையும் அடையாளம் காண்பதில் கல்வெட்டுக்களைப் போல் நாணயங்களும் முக்கியத்துவம் பெறுகின்றன. இலங்கையில் இவற்றை அறிய உதவும் தொடக்க காலச் சான்றுகளாகக் கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கும் பிராமிக் கல்வெட்டுக்கள் விளங்குகின்றன (Paranavithana 1970, 1983). இவை சமகால இந்தியப் பிராமிக் கல்வெட்டுக்களைப் போல் பிராகிருத மொழியில் பௌத்த மதம் தொடர்பான செய்திகளைக் கூறுவதாக இருந்தாலும், அதில் தமிழ்ப் பிராமி எழுத்துக்களும், தமிழ் மொழிப் பெயர்களின் செல்வாக்கும் கலந்து காணப்படுகின்றன (Karanaratne 1960, Veluppillai 1980, Sitrampalam 1980, Ragupathy 1991). அந்த அம்சம் கி.மு.2.ஆம் நூற்றாண்டிலிருந்து வெளியிடப் பட்ட நாணயங்களிலும் காணப்படுகின்றது. இந்நாணயங்களில் தமிழ்ப் பிராமி எழுத்து, தமிழ் மொழி தொடர்பாக மூன்று அம்சங்களை அவதானிக்க முடிகிறது.1) தமிழ்ப் பிராமியில், தமிழ் மொழியில் வெளியிடப்பட்ட நாணயங்கள். 2) "அன்" என முடியும் தமிழ்ப் பெயர் கொண்ட நாணயங்களில் சில வடபிராமி எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டிருத்தல். 3) பிராகிருதப்பெயர் கொண்ட நாணயங்களில் சில தமிழ்ப் பிராமி எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டமை. இதற்கு உதாரணமாக தமிழ் மொழிக்குரிய "ள", தமிழ்ப் பிராமி எழுத்துக்கே சிறப்பான "ம" போன்ற எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் குறிப்பிடலாம் (Bopearachchi 1999:58, 63). இவற்றின் மூலம் இலங்கையில் கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழ்ப் பிராமி எழுத்தும், தமிழ் மொழியும் புழக்கத்தில் இருந்ததெனக் கூறமுடியும். எழுத்துக்கு முன் மொழி தோன்றியதால் இங்கு தமிழ்

மொழியின் பயன்பாடு மிகத் தொன்மையானதெனக் கூறலாம். இடைக்கால நாணயங்களில் தமிழோடு தேவநாகரி எழுத்தும் பயன்படுத்தப்பட்டதைச் *சாவக* என்ற பெயர் பொறித்த நாணயங்களில் அறியமுடிகிறது. சமகாலத்தில் சிங்கள மன்னர்களும், தமிழ் நாட்டு வம்சங்களும் நாணயங்களை தேவநாகரி எழுத்தில் வெளியிட்டுள்ளனர். இதற்கு சர்வதேச வர்த்தகம் காரணமாக இருக்கலாம். அந்த நோக்குடன் வடஇலங்கையிலும் நாணயங்கள் வெளியிடப்பட்டிருக்கலாம். ஆனால் வடஇலங்கை மன்னர் தமிழோடு வட மொழியையும் வளர்க்கப் பல பணிகள் ஆற்றியதாகத் தமிழ் அரசு தொடர்பாகத் தோன்றிய இலக்கியங்கள் கூறுவதையும் இங்கு நினைவுபடுத்தலாம்.

## நாணயங்களும் தமிழர் குடியிருப்புக்களும்

நாணயங்களை மட்டும் அடிப்படையாக வைத்து ஒரு இடத்தில் வாழ்ந்த மக்களை அடையாளம் காணமுடியாது. ஏனெனில் ஒரு இடத்தில் அல்லது நாட்டில் வெளியிடப்பட்ட நாணயங்கள் வர்த்தகம் போன்ற பல காரணங்களால் பிற இடங்களுக்குச் செல்லவும், பயன்படுத்தப்படவும் அதிக வாய்ப்புண்டு. ஆனால் குறிப்பிட்ட நாணயங்கள் குறிப்பிட்ட வட்டாரங்களில் கூடுதலாகக் காணப்படும் போது அங்கு வாழ்ந்த மற்றும் வாழுகின்ற மக்கள் தொடர்பான வரலாற்றுச் சான்றுகளை நாணயங்களோடு தொடர்புபடுத்தி அங்கு வாழ்ந்த மக்களை யார் என அடையாளம் காணலாம் எனக் கூறுவதில் தவறில்லை. பொதுவாக இலங்கைத் தமிழரின் தொடக்க காலக் குடியிருப்புக்களை பெருங்கற்காலக் குடியிருப்புச் சின்னங்கள் காணப்படும் மையங்களோடு தொடர்புபடுத்திப் பார்க்கும் மரபு காணப்படுகிறது. இதற்கு இப்பண்பாட்டுச் சின்னங்களுக்கும், தமிழகப் பெருங்கற்காலப் பண்பாட்டுச் சின்னங்களுக்கும் இடையிலான ஒற்றுமை சான்றாகக் காட்டப்படுகிறது. ஆனால் இப்பண்பாட்டு வழிவந்த மக்களே காலப்போக்கில் மொழியடிப்படையில் தமிழ், சிங்களம் எனப் பிரிந்து சென்றதால் இச்சின்னங்கள் காணப்படும் இடங்களில்

எல்லாம் தமிழ்க் குடியிருப்புக்களே இருந்தன எனக் கூறமுடியாது. பௌத்த மதம் பரவிய போது இப்பண்பாட்டு வழிவந்த மக்களில் ஒரு பிரிவினர் அம்மதத்தைப் பின்பற்றியதையும், ஆதரவு கொடுத்ததையும் இப்பண்பாட்டு மையங்களோடு காணப்படும் பிராமிக் கல்வெட்டுக்கள் உறுதி செய்கின்றன. இவை பிராகிருத மொழியில் எழுதப்பட்டாலும், அவற்றில் தமிழரோடு தொடர்பான ஆட்பெயர்கள், உறவுப் பெயர்கள், பட்டப்பெயர்கள், சமூகப் பெயர்கள், இடப்பெயர்கள் காணப்படுகின்றன. இவ்வரலாற்று மையங்களை அண்டியே பெரும்பாலும் பண்டைய கால நாணயங்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இதற்கு வணிகம் மற்றும் பண்பாட்டுத் தொடர்புகள் காரணமாக இருந்துள்ளன. இவற்றுள் இங்கு வாழ்ந்த மக்களுக்குரிய நாணயங்களும் உள்ளடங்குகின்றன. இவற்றில் தமிழ் நாணயங்கள் செறிவாகக் காணப்படும் இடங்களைப் பெருங்கற்காலக் குடியிருப்புக்குரிய சின்னங்கள், கல்வெட்டுக்கள், பிராமி எழுத்துப் பொறித்த மட்பாண்டங்கள் என்பவற்றோடு தொடர்புபடுத்தி தமிழர் குடியிருப்புக்கள் இருந்த முக்கிய சில இடங்களை அடையாளம் காணமுடிகிறது .

கி.பி.6ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் நாணயங்கள் காணப்படும் இடங்களுள் தென்னிலங்கையில் திசமாறம (Tissamarama), அம்பாந்தோட்டை, அநுராதபுரம், வடஇலங்கையில் மாதோட்டம், முல்லைத்தீவு, பூநகரி, கந்தரோடை, வல்லிபுரம் போன்ற இடங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவற்றுள் தென்னிலங்கையில் திசமாறம, மொனறாகலை, அம்பாந்தோட்டை போன்ற வட்டாரத்தில் எண்ணிக்கையில் அதிகமான உள்நாட்டு, வெளிநாட்டு நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இதற்கு பண்டு தொட்டு இங்கு அரசமரபு தோன்றி வளர்ந்தது மட்டுமன்றி கடல்சார் வர்த்தகத்திற்குரிய துறைமுகங்களைக் கொண்டிருந்தமையும் முக்கிய காரணங்களாகும். இவ்வட்டாரத்தில் செறிவான தமிழர் குடியிருப்புக்கள் இருந்ததை பரவலாகக் கண்டுபிடிக்கப்பட்ட பெருங்கற்காலக் குடியிருப்புகளுக்குரிய மையங்களில்

கண்டுபிடிக்கப்பட்ட அதிக எண்ணிக்கையுடைய பிராமிக் கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன. இக்கல்வெட்டுக்களில் தமிழ்ப் பிராமிக்கே உரிய "ற", "ள", "ழ", "ன" போன்ற எழுத்துக்கள் காணப்படுவதுடன்(புஷ்பரட்ணம் 2000) பரத என்ற சமூகப் பெயரும் (I.C.No.643), வேள், பருமக(பெருமன்), பருமகள் என்ற பட்டப்பெயர்களும் (I.C.Nos.612, 647,745,795,61043), மகள், மருக, மருமான், மருமகன் என்ற உறவுப்பெயர்களும் (புஷ்பரட்ணம் 2000ஆ:1 – 10) வயல், மடு, நகர் என்ற பின்னொட்டுச் சொல்லுடன் முடியும் இடப்பெயர்களும் (I.C.Nos. 794,656,538) மற்றும் தனிநபர் பெயர்களும் உறுதிப்படுத்துகின்றன.

இவ்வட்டாரங்களில் கண்டுபிடிக்கப்பட்ட பதினாறு கல்வெட்டுக்களில் வரும் மீன் அரசன் (மஜிமஹாராஜ) பற்றிய செய்திகளும், அவற்றில் இடம்பெற்ற மீன் கோட்டுருவங்களும் இங்கு வாழ்ந்த தமிழர்கள் சிங்கள மன்னர்களுக்கு கட்டுப்படமால் சுதந்திரமாக ஆட்சி புரிந்ததைக் காட்டுவதாக அறிஞர்கள் கூறுகின்றனர் (மெண்டிஷ் கருத்து– பார்க்க வேங்கடசாமி 1983:610). பாளி இலக்கியங்கள் கூட அநுராதபுரத்தில் ஆட்சி புரிந்த எல்லாள என்ற தமிழ் மன்னன் மீது படையெடுத்த துட்டகாமினி அதற்கு முன்னோடியாக தென்னிலங்கையில் ஆட்சி புரிந்த முப்பத்திரண்டு தமிழ் மன்னர்களை வெற்றி கொள்ளப் பல மாதங்கள் சென்றதாகக் கூறுகிறது (C.V.XXV:75). இதில் மிகைப்படுத்தப்பட்ட செய்திகள் இருப்பினும் இக்காலத்தில் தென்னிலங்கையில் தமிழர்கள் வாழ்ந்தார்கள் என்பதற்கு இதை ஒரு முக்கிய சான்றாகக் கொள்ளலாம். கி.பி.7ஆம் நூற்றாண்டின் பின்னர் இலங்கையில் கட்டப்பட்ட ஆலயங்களில் தென்னிலங்கையில் தெவிநுவரை என்ற இடத்தில் அமைக்கப்பட்ட விஸ்ணு ஆலயமும் ஒன்றாகும் (இந்திரபாலா 1999). இவை பண்டு தொட்டுத் தமிழர்கள் இங்கு வாழ்ந்ததற்குச் சான்றாகும். இதை இங்கு கிடைத்த பண்டைய தமிழ் நாணயங்கள் மேலும் உறுதிப்படுத்துகின்றன. அநுராதபுரம் கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து சோழர் வெற்றி கொள்ளும் வரை இலங்கையின்

பலம்மிக்க அரசாகத் திகழ்ந்தது. இவ்வரசைத் தமிழ் மன்னர்கள் பல தடவைகள் ஆட்சி புரிந்துள்ளனர். இதன் ஆரம்ப கால மக்கள் தென்னிந்தியாவை ஒத்த நுண்கற்கால, பெருங்கற்காலப் பண்பாட்டிற்குரியவர்கள். இலங்கையில் மிகக் கூடுதலான பிராமிக் கல்வெட்டுக்கள் இவ்வட்டாரத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இதனால் தென்னிலங்கையைக் காட்டிலும் தமிழர் தொடர்பான சான்றுகள் இக்கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. இங்கு கிடைத்த கல்வெட்டொன்று தமிழர்கள் ஒன்று சேர்ந்து ஒரு குழுவாக வெளிநாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டது பற்றிக் கூறுகின்றது (I.C.1970.No .94). இதனால் இங்கு தமிழ் நாணயங்கள் காணப்பட்டமைக்கு தமிழர் குடியிருப்புக்கள் மட்டுமன்றி, வர்த்தகமும் ஒரு காரணம் எனக் கூறஇடமுண்டு.

வடஇலங்கையைப் பொறுத்தவரை வவுனியா மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்ட 59 குகைப் பிராமிக் கல்வெட்டுக்களைத் தவிர வேறு எங்கும் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை (Paranavithana 1970.Nos.222-275). ஆனால் தமிழ் நாணயங்கள் காண்டெடுக்கப்பட்ட இடங்களில் எல்லாம் பெருங்கற்கால மற்றும் வரலாற்றுத் தொடக்க காலக் குடியிருப்புக்களுக்குரிய சான்றுகள் பரவலாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன (Seneviratne1984, Ragupathy 1987, புஷ்பரட்ணம் 1993). மாதோட்டத்தில் தமிழ் நாணயங்களுடன் பலவகையான உள்நாட்டு, வெளிநாட்டு நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன (Carswell1984). இதற்கு இலங்கையின் முக்கிய பண்டைய காலத் துறை முகமாக இது விளங்கியது ஒரு காரணமாகும். ஆயினும் தொன்மையான குடியிருப்புக்கள் கொண்ட வட்டாரமாக இது விளங்கியதைத் தெற்கே பொம்பரிப்பு தொட்டு வடக்கே கந்தரோடை வரை கண்டுபிடிக்கப்பட்ட பெருங்கற்காலச் சின்னங்கள் சான்றுபகர்கின்றன. இச்சான்றுகள் இதற்கு எதிரே தமிழ் நாட்டில் உள்ள அரிக்கமேடு, ஆதிச்சநல்லூர் பெருங்கற்காலப் பண்பாட்டுடன் நெருங்கிய ஒற்றுமை கொண்டுள்ளது (Sitrampalam 1980:112-155). இங்கு தமிழ் மொழி பேசிய மக்கள் கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்தில்

இருந்து வாழ்ந்துள்ளனர் என்பதையும், சுதேச தமிழ் அரச மரபு தோன்றியிருக்கலாம் என்பதையும் பூநகரி வட்டாரத்தில் பெறப்பட்ட தமிழ்ப் பிராமி எழுத்துக்களுடன் கூடிய மட்பாண்ட ஓடுகளும், வேள், ஈழம் பற்றிய மட்பாண்ட சாசனங்களும் (புஷ்பரட்ணம் 1993:38–41) ஆனைக்கோட்டையில் பெறப்பட்ட கோவேத என்ற பெயர் பொறித்த முத்திரையும் (Ragupathy 1987::202-203) உறுதிப்படுத்துகின்றன. இப்பின்னணியில் வைத்து நோக்கும் போது எண்ணிக்கையில் அதிகமான பண்டைய தமிழ் நாணயங்கள் வடஇலங்கையில் கிடைத்தமைக்கு தமிழ்க் குடியிருப்புக்கள் செறிவாக இருந்ததே காரணம் எனலாம்.

கி.பி.7ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கும் தமிழ் நாணயங்கள் தொண்ணூறு விழுக்காட்டிற்கு மேல் வடஇலங்கையில் கிடைத்துள்ளன என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது. இவற்றில் கி.பி.10 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதெனக் கணிக்கப்பட்டுள்ள நாணயங்கள் வடஇலங்கையைத் தவிர வேறு எந்த இடத்திலும் கிடைத்ததாகத் தெரியவில்லை. கி.பி.10ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவற்றுள் ஒரு சில நாணயங்கள் அநுராதபுரத்திலும், தென்னி லங்கையிலும், அரிதாகத் தமிழ் நாட்டிலும் கிடைத்துள்ளன. இதனால் வடஇலங்கையில் கிடைத்த அனைத்துவகை நாணயங்களும் வடஇலங்கைக்கு வெளியே கிடைத்ததெனக் கூறமுடியாது. நல்லூரைத் தலைநகராகக் கொண்ட அரசு 350 ஆண்டுகள் ஆட்சியில் இருந்தும் அக்காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்கள் மிக அரிதாகவே வடஇலங்கைக்கு வெளியே கிடைத்திருப்பதையும் இங்கு நினைவுபடுத்தலாம். இவற்றில் இருந்து கி.பி.7ஆம் நூற்றாண்டின் பின்னர் வடஇலங்கையில் தமிழ்க் குடியிருப்புக்களின் எண்ணிக்கை அதிகரித்தன எனக் கூறலாம். இதனால் வடஇலங்கைக்கு வெளியே இக்காலத்தில் தமிழ் மக்கள் வாழவில்லை என அர்த்தம் கொள்ள முடியாது. கி.பி.8ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டுக்களில் பெரும்பான்மையானவை வடஇலங்கைக்கு வெளியே அநுராதபுரம், பொலநறுவை, குருநாகல், பண்டுவஸ்சுவரை,

திருகோணமலை, பதவியா, நிலாவெளி, குச்சவெளி போன்ற இடங்களில் கிடைத்த கல்வெட்டுக்களை உதாரணமாகக் குறிப்பிடலாம் (Veluppillai 1972, பத்மநாதன் 1971-72:13-36, குணசிங்கம 1973, சுப்பராயலு, சண்முகம், 1998:32-43, 1999:11-12). இவற்றுள் பெரும்பாலான கல்வெட்டுக்கள் தமிழ் மக்கள் பெரும்பான்மையாக வாழும் கிழக்கிலங்கையில் கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கன. வடஇலங்கையில் மாதோட்டம், ஊர்காவற்றுறை, யாழ்ப்பாணம், உரும்பிராய் போன்ற இடங்களில் ஒரு சில கல்வெட்டுக்களே கிடைத்துள்ளன (இந்திரபாலா 1969:8-12). இதற்கு எழுத்துப் பொறிப் பதற்குரிய கற்கள் கிடைக்காமை ஒரு காரணமாக காட்டப்பட்டாலும், கல்வெட்டுக்கள் கிடைக்கக் கூடிய வன்னிப் பிராந்தியத்தில் முறையான களஆய்வு மேற் கொள்ளப்படாததையும் ஒரு காரணமாகக் கூறலாம். இவ்வாறு வேறுபட்ட மூலாதாரக் கண்டுபிடிப்புக்கள் மத்தியில் பல வகையான தமிழ் நாணயங்கள் வடஇலங்கையில் கிடைத்திருப்பது இங்கு செறிவான தமிழர் குடியிருப்புக்கள் இருந்ததை மட்டுமன்றி தமிழ் அரச உருவாக்கம் ஒன்று ஏற்பட்டதையும் இந்நாணயங்கள் உறுதிப்படுத்துவதாகக் கூறலாம்.

## நாணயங்களும் தமிழர் அரச உருவாக்கமும்

நாணயங்களுக்கும் அரச உருவாக்கத்திற்கும் இடையில் நெருங்கிய தொடர்பு காணப்படுகின்றது. இதை வடஇந்தியாவின் மகாஜனபதங்கள் என அழைக்கப்பட்ட அரசுகளால் வெளியிடப்பட்ட முத்திரை நாணயங்களின் காலத்திலிருந்து காணமுடிகிறது. இவற்றில் எழுத்துக்களோ, அரச சின்னங்களோ இடம்பெற்றிருக்கவில்லை. ஆனால் 200க்கு மேற்பட்ட குறியீடுகள் பயன்படுத்தப்பட்டுள்ளமை அடையாளம் காணப்பட்டுள்ளன (Gupta 1969). இலங்கையின் நகரமயமாக்கமும், அரச உருவாக்கமும் வடஇந்தியாவிலிருந்து கி. மு.5.ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட வடஇந்தியக் குடியேற்றத்துடன் ஏற்பட்டதாகப் பாளி நூல்கள் கூறுகின்றன (M.V.:VI-VII). ஆனால் இக்காலத்தில் நாணயங்கள் வெளியிடப்பட்டதற்கோ அல்லது அரச

ஒன்று தோன்றியதற்கோ உறுதியான சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால் பெருங்கற்காலப் பண்பாட்டுடன் ஏற்பட்ட நீர்ப்பாசன விவசாயம், இரும்பின் உபயோகம், சிறுதொழில்நுட்ப அறிவு, அயல் நாட்டு வணிகத் தொடர்பு போன்றவற்றுடன் நகரமயமாக்கமும், அரச உருவாக்கமும் ஏற்பட்டதெனக் கூறலாம். இதை இப்பண்பாட்டு மையங்களில் கிடைத்த பிராமிக் கல்வெட்டுக்களில் இருந்து காணமுடிகிறது. இக்கல்வெட்டுக்களில் *ரஜா, மஹாராஜா, கமணி, கபதி, பருமக, வேள்* போன்ற பட்டங்கள் வருகின்றன. இப்பட்டங்கள் ஆட்சியாளர்களோடு மட்டுமன்றி சமூகத்தில் உயர் நிலையில் இருந்த பலரும் பயன்படுத்திக் கொண்டதை அவர்களின் பதவி, தொழில், சமூக அந்தஸ்து என்பன எடுத்துக்காட்டுகின்றன. இப்பட்டங்களில் பல இலங்கையில் குருசில்கள், குறுநில மன்னர்கள் எனக் கூறக்கூடிய சிற்றரசுகள் தோன்றியதற்குரிய சான்றாக அறிஞர்களால் பார்க்கப்படுகிறது. ஆனால் இவற்றுள் பலவற்றை இனக்குழு நிலையில் இருந்து அரசு தோன்றுவதற்கு இடைக்கட்டமாக இருந்து ஆட்சி புரிந்த தலைவர்களுக்குரிய பட்டமாகக் கொள்ளலாம்.

இவற்றுள் *வேள், பருமக* என்பவை தமிழ் மொழிக்குரிய பட்டங்கள் எனலாம். வேள் என்ற பட்டம் ஒரு இனகுழுவுக்குரிய பெயராகப் பார்க்கப்பட்டாலும் ஆரம்ப காலங்களில் குறிப்பிட்ட இனக் குழுக்களிடையே தோன்றி வலிமைமிக்க தலைவனுக்குரிய பட்டமாகவே அது இருந்துள்ளது. வடமொழியில் *ராஜா* என்ற சொல்லுக்கு என்னென்ன பொருள் உண்டோ அதே பொருளையே வேள் என்ற பட்டமும் கொண்டுள்ளது (Thapar1984:24). இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் வரும் *வேள்* என்ற பட்டத்தை உடையவனின் சமூக நிலை பெருமளவுக்கு தமிழகப் பிராமிக் கல்வெட்டுக்கள், சங்க இலக்கியம் என்பவற்றில் வரும் *வேள், வேளிரின்* சமூக நிலையோடு ஒற்றுமை கொண்டு காணப்படுகிறது (புஷ்பரட்ணம் 2000:42–58). *பருமக* என்ற பட்டம் தமிழில் பெருகமன் என்ற சொல்லின் பிராகிருதவடிவமாகக் கூறப்படுப்படுகிறது (Sitrampalam1993:19-28). இதையுறுதிப்படுத்தும் வகையில் இதன் பெண்பால் வடிவம்

*பெருமகள்* எனச் சமகாலக் கல்வெட்டுக்களில் எழுதப்பட்டுள்ளது. அரசு ஏற்படுவதற்கு முற்பட்ட நிலையிலிருந்து அரசசமூகத்திற்கு மாறும் தமிழகத்தை (Prestate to state society) ஆய்வுசெய்த பேராசிரியர் சுதர்சன் செனிவரட்னா ஒருநிலைக்கு உட்பட்ட இடத்தில் தங்கும் குடும்பக் குழுக்களில் அக்குழுவின் தலைவன் வழிவரும் மகன் பெருமகன் என்ற சிறப்புப் பெறுவதும், அதனடிப்படையில் தலைவன் பெருமகன் என அழைக்கப்படுவதும் இயல்பு என்றார் (Seneviratne 1993:68-69). சங்க இலக்கியங்களில் *ஓரி, கொற்றன், பெருமான், பெருமகன், பேகன், எருமை* ஆகியோரின் பெயர்களின் பின்னொட்டுச் சொல்லாக இது வருகிறது. இதில் வரும் பெருமகன் என்ற சொல் பெருமான் என மாறுகிறது. இச்சொல் அண்மை விளியாக *பெருமக* எனப்பட்டது (இராசு 1995:23). இவ்வாறான அதிகார அடுக்கு நிலை இலங்கையிலும் ஏற்பட்டிருக்கலாம் என்பதைச் சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களில் வரும் மருமகன், மருமான் என்ற பெயரின் இறுதியில் வரும் *மகன், மான்* என்ற அடைமொழிகள் கோடிட்டுக் காட்டுகின்றன (புஷ்பரட்ணம் 2000அ:1-11). இவற்றிலிருந்து பண்டையகால இலங்கையில் சுதேச அரச மரபொன்று தோன்றியமை தெரிகிறது. இதை மேலும் உறுதிப்படுத்துவதாகவே இங்கு கிடைத்த தமிழர் நாணயங்கள் விளங்குகின்றன.

கி.மு.2ஆம் நூற்றாண்டிலிருந்து வெளியிடப்பட்டதாகக் கருதப்படும் நாணயங்களில் வரும் தொண்ணூறு விழுக்காட்டிற்கு மேற்பட்ட பெயர்கள் சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களில் வரும் பெயர்களை ஒத்துள்ளன. ஆனால் குடும்பத் தலைவனைக் குறிக்கும் *கபதி* என்ற பட்டத்தைத் தவிர கல்வெட்டுக்களில் வரும் வேறு எந்தப்பட்டமும் நாணயங்களில் இடம்பெறவில்லை. அநுராதபுரத்தில் கிடைத்த கி.மு.3ஆம்,2ஆம் நூற்றாண்டுக்குரிய அச்சினால் பதிக்கப்பட்ட களிமண் தட்டில் *மஹா பருமக* (Tisaputa mahaga °arumaka) என்ற பட்டப் பெயர் காணப்படுகிறது (Conningam 1999: 73-97). ஆயினும் இதுவரை கிடைத்த நாணயங்களில் இப்பட்டம் காணப்படவில்லை. இதனால் இந்நாணயங்களை குருசில்கள்,

குறுநிலத்தலைவர்கள் அல்லது சிற்றரசர்கள் ஆட்சியிலிருந்து வெளியிட்டார்கள் எனக் கூறுவதைவிட, வணிகர்கள் மற்றும் சமூகத்தில் உயர் நிலையில் இருந்தவர்கள் வெளியிட்டார்கள் எனக் கூறலாம். இது ஒருவகையில் அரசு தோன்றுவதற்கான ஆரம்ப நிலையைக் காட்டுவதாக எடுத்துக் கொள்ளலாம். சமகாலத்தில் எழுத்துப் பொறிப்பற்ற சதுரவடிவில் அமைந்த செப்பு, ஈய நாணயங்கள் புழக்கத்தில் இருந்துள்ளன. இவை சிற்றரசர்களால் அல்லது அநுராதபுரத்தில் ஆட்சிபுரிந்த மன்னர்களால் வெளியிடப்பட்டவை எனக் கருதலாம். இவ்விரு நாணயங்களும் இலங்கையின் பல வட்டாரங்களில் அதிலும் சிறப்பாகத் தென்னிலங்கையில் கிடைத்திருப்பதைப் பிற வரலாற்று மூலங்களுடன் ஒப்பிடும் போது முற்காலத்தில தமிழர்கள் பரந்துபட்ட வட்டாரங்களில் குழுவாக வாழ்ந்ததையும், அவர்களிடையே வலிமைமிக்க தலைவர்களின் கீழ் அரச மரபு உருவாகியதையும் இவை உறுதிப்படுத்துவதாக எடுத்துக் கொள்ளலாம். சமகால இலங்கைப் பிராமிக் கல்வெட்டில் "குடி" என்ற தமிழ்ச் சொல் பயன்பாட்டில் இருந்துள்ளது (I.C.1970.No1175). இது குறிப்பிட்ட இரத்த உறவுள்ள தமிழர்கள் இனம் அல்லது மொழி யடிப்படையில் குழுவாக வாழ்ந்ததைக் காட்டுகிறது. கி.மு.2ஆம் நூற்றாண்டில் தமிழ் சிங்கள மன்னர்களுக்கிடையிலான போராட்டம் பற்றிக் கூறும் மகாவம்சம் தென்னிலங்கையில் ஆட்சிபுரிந்த முப்பத் திரண்டு தமிழ் மன்னர்களைப் பற்றிக் கூறுகிறது (C.V.XXV:75). இது குழுவாக வாழ்ந்த தமிழர்களிடையே வலிமைமிக்க தலைவர்கள், குறுநிலத் தலைவர்கள் தோன்றியதைக் காட்டுகிறது எனக் கருத இடமளிக்கிறது.

கி.பி.7ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட பெரும்பாலான தமிழர் நாணயங்கள் வடஇலங்கையிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டுள் ளன. இந்த மாற்றம் இதுவரைகாலமும் பல வட்டாரங்களில் குறிப்பிட்ட இனக்குழு அடிப்படையில் தோன்றிய குறுநிலத் தலைவர்கள், குருசில்கள், சிற்றரசர்கள் என்ற நிலை மாறி ஒரு மன்னன் ஆழுகைக் குட்பட்ட அரசு ஒன்று வடஇலங்கையில் தோன்றியதைக் காட்டுவதாக

எடுத்துக்கொள்ளலாம். தமிழகத்தில் கி.பி.6ஆம் நூற்றாண்டோடு ஏற்பட்ட பத்தியியக்கத்தின் தோற்றம், வணிக கணங்களின் எழுச்சி, இலங்கைமீதான படையெடுப்பு என்பன இலங்கையில் இந்து, பௌத்த என்ற மதவேறுபாடு ஏற்படவும், தமிழர்கள் மதம், மொழி, இனம் போன்ற அடிப்படையில் தமது தனித்துவத்தை நிலைநாட்டவும் காரணம் என்பது பேராசிரியர் கே.எம்.டி. சில்வாவின் கருத்தாகும் (Silva 1981:20-21). இது பிரதேச தனித்துவத்திற்கும், அங்கு அரசு ஒன்று தோன்றவும் காரணமாக இருந்திருக்கலாம் என்பதை பெரும் பாலான தமிழர் நாணயங்கள் வடஇலங்கையில் கிடைத்திருப்பதன் மூலம் உறுதிப்படுத்தலாம்.

## நாணயங்களும் தமிழர் வர்த்தகமும்

நாணயங்களின் தோற்றத்திற்கு வர்த்தகம் அடிப்படைக் காரணமாக இருந்ததால் வர்த்தகத்தில் இதன் பயன்பாடு முக்கியத்துவம் பெறுகிறது. ஆரம்ப காலங்களில் மன்னனின் அனுமதி பெற்று வணிகர்களும் நாணயங்கள் வெளியிட்டதற்குச் சான்றுகள் உண்டு. இலங்கையின் பண்டைய அரச பொருளாதாரத்தில் வெளிநாட்டு வர்த்தம் கணிசமான பங்கு வகித்ததால் பண்டு தொட்டு இலங்கைக்கும் அயல் நாடுகளுக்கும் இடையே நெருங்கிய வர்த்தக, கலாசார உறவுகள் ஏற்பட்டன. இதை இலங்கையில் கிடைத்த பல்வேறு நாடுகளுக்குரிய நாணயங்கள் மற்றும் தொல்பொருட் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. இந்த உறவு ஒருபக்க உறவாக இல்லாது இருபக்க உறவாக இருந்தது. அயல் நாடுகளில் சிறப்பாகத் தமிழகத்தில் பெறப்பட்ட நாணயங்கள், பிராமி எழுத்துப் பொறித்த மட்பாண்டங்கள், தொல்பொருட் சின்னங்கள் உறுதிப்படுத்துகின்றன (Rajan 1994). இவ்வர்த்தகத்தில் தமிழர்களே அதிகம் பங்கெடுத்ததாகப் பாளி இலக்கியங்களும், சமகாலப் பிராமிக் கல்வெட்டுக்களும் கூறுகின்றன (M.VXXI:10, I.C.1970 Nos 94, 356, 357). இதற்கு இலங்கையின் அமைவிடம், இலகுவாக இங்கு கிடைத்த வர்த்தகப் பொருட்கள், வடஇலங்கையிலும், தென்னிலங்கையிலும்

அமைந்திருந்த இயற்கைத் துறைமுகங்கள் என்பன முக்கிய காரணங் களாக இருந்தன.

இவ்வர்த்தகத்தில் நாணயங்கள் பொருட்களின் மாற்றீடாகப் பயன்படுத்தப்பட்ட போதிலும், இலங்கையில் வெளியிடப்பட்ட நாணயங்கள் உள்நாட்டு வர்த்தகத்திற்குப் பயன்படுத்தப்பட்டது போன்று வெளி நாட்டு வர்த்தகத்திற்கு பயன்படுத்தப்பட்டதற்கு அதிகச் சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை. குறிப்பாகப் பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்கள் முக்கிய வர்த்தக மையங்களில் கண்டுபிடிக்கப் பட்டும் அவை இலங்கைக்கு வெளியே இதுவரை கிடைக்கவில்லை. இதற்கு இந்நாணயங்களை வெளியிட்டதன் நோக்கம் பௌத்த மதத்திற்குக் கொடையளிப்பதாகவும், உள்நாட்டு வர்த்தகத்திற்குப் பயன்படுத்துவதாகவும் இருக்கலாம். இருப்பினும் இது குறித்து மேலும் ஆராயப்பட வேண்டியுள்ளது. இலங்கைக்கு வெளியே குறிப்பாகத் தமிழகத்தில் கிடைத்த நாணயங்களில் லக்ஷ்மி உருவம் பொறித்த நாணயங்களும், சிங்க உருவம் பொறித்த நாணயங்களும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவற்றுள் லக்ஷ்மி நாணயங்கள் சங்க காலச் சேரரின் தலைநகரான கரூரில் கிடைத்திருப்பது இலங்கைத் தமிழர்களுக்கும், தமிழகத் தமிழர்களுக்கும் இடையிலான வர்த்தகத் தொடர்புகளுக்குச் சிறந்த சான்றாகும். கி.பி.7ஆம் நூற்றாண் டுக்குப்பின் வெளியிடப்பட்ட நாணயங்களில் காளையுருவம், மீன்சின்னம் கொண்ட நாணயங்களும், சேது மொழி பொறித்த நாணயங்களும் தமிழகத்தில் ஒரு சில இடங்களில் கிடைத்துள்ளன. இவை வடஇலங் கைக்கும் தமிழகத்திற்கும் இடையிலான வர்த்தகத் தொடர்பைக் காட்டுகின்றன. ஆயினும் ஒப்பீட்டளவில் சமகாலத் தமிழ் நாட்டு நாணயங்கள் இலங்கையில் கிடைத்த அளவுக்கு வடஇலங்கைத் தமிழ் அரசுகளின் நாணயங்கள் தமிழகத்தில் இதுவரை கிடைக்கவில்லை. இதற்கான காரணங்கள் மேலும் ஆராயப்படக் கூடியன.

## நாணயங்களும் தமிழர் சமயங்களும்

தொன்று தொட்டு நிலவிய சமயங்கள், தெய்வங்கள், தெய்வவடிவங்கள், அவற்றின் கலை மரபுகள் போன்ற அம்சங்களைக் கால அடிப்படையில் எடுத்துக்கூறும் வரலாற்று மூலாதாரங்களில் நாணயங்களுக்கு முக்கிய பங்குண்டு. இந்தியாவில் நாணயங்களை மட்டும் அடிப்படையாகக் கொண்டு ஒரு வட்டாரத்தின், ஒரு அரசின் அல்லது ஒரு காலப்பகுதியின் சமய வரலாற்றை ஆராயும் போக்கு காணப்படுகிறது (Sarma1990, Mansuhlal 1968, நாகசாமி 1992, சீதாராமன் 1998). இலங்கையைப் பொறுத்த வரை அதன் பொது வான வரலாறு அல்லது அதன் சமயவரலாறு பற்றிய ஆய்வில் இலங்கையில் கிடைத்த நாணயங்கள் ஒரு சான்றாகப் பயன்படுத் தப்பட்ட போது, அவை வெளிப்படுத்துகின்ற சமயங்களும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன (Parkar 1981:459-521, சிவசாமி 1975:32 37, பத்மநாதன் 1985, சிற்றம்பலம் 1995:398-408). இந்நிலையில் இலங்கைத் தமிழருக்கேயுரிய நாணயங்களை மட்டும் வைத்து இலங்கைத் தமிழருக்குரிய சமயங்களின் வரலாற்றைப் பார்ப்பது பல வகையில் முக்கியத்துவம் உடையன என்பதில் சந்தேகமில்லை.

இந்திய நாணயங்கள் பற்றி ஆராய்ந்தோர் அவற்றில் முன்னூறுக்கு மேற்பட்ட சின்னங்கள், குறியீடுகள் இருப்பதாகக் கணித்துள்ளனர் (Mansuhlal 1968). அவற்றுள் பெரும்பாலானவற்றின் தொடக்கம் ஹரப்பா நாகரீக கால முத்திரைகளுடனும், இந்து சமயத்துடனும் தொடர்புடையவையாகக் காட்டப்பட்டுள்ளன. இவற்றுட் பல பிற்காலத்தில் பௌத்த, சமண மதங்களுக்குரிய சின்னங்களாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன (Sarma 1990). வட இந்திய, தென்னிந்திய நாணயங்களில் வரும் சமயச் சின்னங்கள் பற்றி ஆராய்ந்த மன்சுக்லால் பௌத்த, சமண, இந்து மதங்களுக்குப் பொதுவான பன்னிரண்டு சின்னங்கள பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். குறிப்பிட்ட ஒரு மதத்தில் குறிப்பிட்ட தெய்வத்துடன் தொடர்புடைய சின்னம் பிற தெய்வங்களுடனும் தொடர்புபடுகின்றன. இதனால் நாணயங்களில்

உள்ள சின்னங்களை வைத்து தெய்வங்களை அடையாளம் காணும் போது அவற்றோடு தொடர்புடைய பிற சின்னங்களையும் கவனத்தில் எடுக்க வேண்டியுள்ளது.

இலங்கைத் தமிழர் நாணயங்களில் காணப்படும் சமயச் சின்னங்களுள் சிவலிங்கம், நந்திபாதம், நந்தி, காளை, திரிசூலம், அம்பு, மழு, வேல், மயில், சேவல், ஸ்ரீவத்ஸம், லக்ஷ்மி, தாமரை, யானை, ஆமை, மீன், குதிரை, சங்கு, சக்கரம், வேலியிடப்பட்டமரம், சுவஸ்திகா, சந்திரன், சூரியன் என்பவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவை சைவ, வைஷ்ணவ சமயங்கள் இலங்கைத் தமிழர்களுடன் நன்கு வேரூன்றி இருந்ததைக் காட்டுகின்றன. இலங்கையில் பௌத்த மதம் அரச ஆதரவுடன் வளர்க்கப்பட்டாலும், பௌத்தத்திற்கு முன் இங்கு நிலைத்திருந்த இந்து மதம் அதன் தனித்துவத்தை முற்றாக இழக்கவில்லை என்பதை பௌத்த மதவரலாறு கூறும் பாளி இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், தொல்பொருட் சின்னங்கள் என்பவற்றிலிருந்து அறிய முடிகிறது. இதன் தொடக்க காலச் சான்றாகப் பெருங்கற்காலப் பண்பாட்டில் பெறப்பட்ட சுடுமண்பா வைகள் (Deraniyagala1953:133-138), வேல், சேவல் போன்ற சின்னங் கள்(புஷ்பரட்ணம் 1993:27–31), மட்பாண்டங்களில் பெறப்பட்ட இருதலை, முத்தலைச் சூலங்கள் (சிற்றம்பலம் 1995) விளங்குகின்றன. இவற்றின் தொடர்ச்சியை நாணயங்களில் வரும் சின்னங்களும் உறுதிப்படுத்துகின்றன.

இலங்கைத் தமிழரின் வழிபாடுகளுள் சிவ வழிபாடு மிகத் தொன்மையானது. கி.மு.4ஆம் நூற்றாண்டிலிருந்து இலங்கையில் ஆட்சி புரிந்த மன்னர்கள் சிலரின் பெயரில் "சிவ" என்ற சொல் முதன்மைப்படுத்தப்பட்டுள்ளது (M.V.X:29,XXI:1). கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கும் 80 கல்வெட்டுக்களில் அக்காலச் சமூகத்தின் பலதரப்பட்ட மக்கள் சிவ என்ற பெயரைப் பயன்படுத்தி யுள்ளனர் (சிற்றம்பலம் 1995:169). இதற்கு இம்மக்கள் சிவ வழிபாட்டுடன் கொண்டிருந்த ஈடுபாடே காரணம் எனக்

கூறப்படுகிறது. சமகாலத்தில் இலங்கையில் வெளியிடப்பட்ட எழுத்துப்பொறிப்புள்ள நாணயங்கள் சிலவற்றில் சிவ என்ற பெயர் காணப்படுகிறது. இதை வெளியிட்டவர்கள் சிவ வழிபாட்டுடன் தொடர்புடையவர்களாக இருக்கலாம் என்பதற்கு தென்னிலங்கையில் கிடைத்த நாணயத்தின் முன்புறத்தில் சிவனுக்குரிய நந்தி பாதமும், நாணயத்தின் பின்புறத்தில் *ஸிவஹ* என்ற பெயரும் காணப்படுவதிலிருந்து கண்டுகொள்ளமுடிகிறது (Bopearachchi 1999:54, No13). சிவனைக் குறிக்கும் ஆயுதங்களில் திரிசூலம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இந்தியாவில் வெளியிடப்பட்ட முத்திரை நாணயங்களில் இவை காணப்படாது, பிற்காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்களிலேயே காணப்படுகின்றது (Sarma 1990:13). இலங்கையில் இவற்றின் தொடக்கத்தைப் பெருங்கற்கால மட்பாண்டங்களில் குறியீடாகக் காணமுடிகிறது. காலப் போக்கில் இவற்றின் தொடர்ச்சியைப் பல்வேறு காலகட்டத்திற்குரிய நாணயங்களிலும் காணமுடிகிறது. தென்னிலங்கையில் கிடைத்த கி.மு.2ஆம் நூற்றாண்டுக்குரிய நாணயம் ஒன்றின் பின்புறத்தில் *மல்லக திஸஹ* என்ற பெயரும் அதன் முன்புறத்தில் இடப்புறம் பார்த்து நிற்கும் மனிதனுக்கு முன்னால் திரிசூலமும் காணப்படுகின்றன (Bopearachchi 1999:53, No11). சமகாலத்திற்குரிய லக்ஷ்மி நாணயங்கள் சிலற்றில் லக்ஷ்சுமியின் இடப்புறத்தில் தாமரைத்தண்டுக்குப் பதிலாகத் திரிசூலம் காணப்படுகிறது. பிற்காலத்தில் நல்லூார் இராசதானி கால நாணயங்கள் சிலவற்றில் சிவனுக்குரிய பிற சின்னங்களுடன் திரிசூலமும் இடம்பெற்றுள்ளது.

பண்டைய தமிழ் நாணயங்களில் வரும் சிவனுக்குரிய சின்னங்களுள் சிவலிங்கம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இதுவே சிவவடிவங்களுள் மிகத் தொன்மையானதெனக் கூறப்படுகிறது. இது குணமும், குறியும் கடந்த பேரொளியாகிய சிவனை ஒரு குறியின் கண் வைத்து வழிபடும் பொருட்டு தோன்றிய குறியீடாகும் (சிவகுருநாதபிள்ளை 1991:4). இச்சின்னத்தை லக்ஷ்மி உருவம் பொறித்த நாணயங்கள் சிலவற்றில் சிறப்பாகக் காணலாம்.

இந்நாணயங்களின் பின்புறத்தில் சுவஸ்திகா சின்னமும் இதற்கு இடப்புறமாகக் காளையும், வலப்புறமாக ஆவுடையுடன் கூடிய லிங்கமும் காணப்படுகின்றன (புஷ்பரட்ணம் 1998:1-13). சில நாணயங்களில் லிங்கத்திற்குப் பதிலாக பூரணகும்பமும் (Parkar 1981:480), வேறு சில நாணயங்களில் சிவனுக்குரிய திரிசூலமும், மழுவும் காணப்படுகின்றன. இவையிரண்டும் சிவனுக்குரிய முக்கிய படைக்கலன்களாகும். புறநானூறு சிவபிரானை "ஏற்றுவன் உயரிய எரிமருள் அவிர்சடை மாற்றருங்கணிச்சி மணிமிடற்றோன்" என்றும், சீற்றம் நிறைந்த கூற்றம் என்றும், ஒரே கணை கொண்டு முப்புரத்தை எரித்துஅமரர்க்கு வெற்றி தந்த கறைமிடற்று அண்ணல், என்றும் கூறுகிறது (புறம் 54-55). சிவனுக்குரிய வாகனமாகக் காளை காணப்படுகிறது. இந்திய நாணயங்கள் பலவற்றில் தனித்தும், பிற சின்னங்களுடன் சேர்த்தும் காளை பொறிக்கப்பட்டுள்ளது. சங்க கால மூவேந்தர் வெளியிட்ட நாணயங்கள் பலவற்றில் காளை முக்கிய இடம்பெற்றது. இம்மரபு இலங்கைத் தமிழர் வெளியிட்ட நாணயங்களிலும் காணப்படுகிறது. கி.மு.2ஆம் நூற்றாண்டுக்குரிய நாணயங்கள் சிலவற்றில் நிற்கும் நிலையிலும், அமர்ந்த நிலையிலும் காளை உருவம் காணப்படுகிறது. லக்ஷ்மி நாணயங்களின் பின்புறத்தில் சுவஸ்திகாவுக்கு வலப்புறமாகக் காளை அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. சமகாலத்தில் வெளியிடப்பட்ட சில சதுர நாணயங்களில் பூரணகும்பம் அல்லது தொட்டி போன்ற சின்னத்திற்கு முன்னால் நிற்கும் நிலையில் காளை காணப்படுகிறது.

இடைக்காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்களில் ஏனைய சின்னங்களை விடக் காளை முக்கியத்துவம் பெற்றது. இதில் பீடத்தின் மேல் இடம் அல்லது வலப்புறம் பார்த்த நிலையில் காளை அமர்ந் திருக்க இதன் இருபுறமும் குத்துவிளக்கும், மேலே சூரியனும், பிறைச் சந்திரனும் காணப்படுகின்றன. ஆரம்ப காலங்களில் தனித்தனி தெய்வங்களாக வழிபடப்பட்ட சூரியனும், சந்திரனும் இங்கு சிவ வழிபாட்டுடன் இணைந்து கொண்டதைக் காணமுடிகிறது. நல்லூர் இராசதானி கால நாணயங்கள் பலவற்றில் காளைக்கு கீழே சேது என்ற மொழி பொறிக்கப்பட்டதுடன், சில நாணயங்களில்

காளைக்குப்பதிலாக மன்னன் உருவமும் அதற்கு இடப்புறமாகச் சிறிய காளையும், அருகில் சிவனுக்குரிய திரிசூலமும் காணப்படுகின்றன. இக்கால மன்னர்கள் சிவ வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர் என்பதற்கு காளையை நாணயங்களில் மட்டுமன்றி அரச கொடிகளிலும், ஆவணங்களிலும் அரச இலட்சனையாகப் பயன்படுத்தியமை சான்றாகும். அத்துடன் இக்கால மன்னர்களுள் ஒருவனை தக்ஷினகைலாசபுராணம் "இடபவான் கொடி எழுதிய பெருமான்" என வருணிக்கின்றது. இதைச் சோதிட நூலும் உறுதிப்படுத்துகிறது (Pathmanathan 1980:412-413).

சிவ வழிபாட்டை போல் முருக வழிபாடும் இலங்கைத் தமிழரிடையே முக்கியத்துவம் பெற்றிருக்கலாம் என்பதை நாணயங்களில் வரும் சின்னங்கள் எடுத்துக்காட்டுகின்றன. இதில் முருகனுக்குரிய சின்னமாக நாணயங்களில் வரும் வேலும், மயிலும் விளங்குகின்றன. இதில் முருக வழிபாட்டின் ஆரம்ப தோற்றமாக வேல்வழிபாடு இருந்தது (Zvelebel 1981). தமிழகத்தில் வேல் வழிபாடு சிறப்புற்றிருந்ததைச் சங்க இலக்கியங்களில் ஒன்றான *குறுந்தொகையிலும்* (குறு.111:1-2), *மதுரைக்காஞ்சியிலும்* (மதுரை: 613-615) வரும் அடிகள் உறுதிப்படுத்துகின்றன. இலங்கையிலும் இவ்வழிபாடு இருந்ததென்பதற்கு பிராமிக் கல்வெட்டுக்களில் வரும் வேலே, வேலா என்ற பெயர்கள் சான்றாகும். இம்முருக வழிபாடே வடஇந்தியாவில் குமரன், சுப்பிரமணியன், கார்த்திகேயன் என வழிபடப் படுகிறது. இலங்கைப் பிராமிக்கல்வெட்டுக்களில் *குமார, விசாக* என்ற பெயர்கள் பல கல்வெட்டுக்களில் வருகின்றன (I.C.1970:Nos 575,582,356,357). இதில் *விசாக* என்ற பெயர் தமிழருக்குரிய பெயரா கக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுகிறது. இப்பெயர்கள் முருக வழிபாடு இலங்கையில் இருந்ததற்கான சான்றாகக் கூறப்படுகிறது (சிற்றம்பலம் 1995:181-225). இதை உறுதிப்படுத்தும் வகையில் பண்டைய நாணயங்கள் சிலவற்றில் முருகனுக்குரிய சின்னங்கள் காணப்படுகின்றன. தென்னிலங்கையில் கிடைத்த *மஹாசாத்தன்* என்ற பெயர் பொறித்த கி.மு.2ஆம் நூற்றாண்டுக்குரிய நாணயம் ஒன்றின் முன்புறத்தில் மயில் முக்கிய சின்னமாக இடம்பெற்றுள்ளது. இலங்கைத் தமிழரின் புராதன முருக வழிபாட்டுத்தலமான கதிர்காமம்

அமைந்த வட்டாரத்தில் இந்நாணயம் கிடைத்துள்ளமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. சமகாலத்தில் வெளியிடப்பட்ட லக்ஷ்மி நாணயங்களின் முன்புறத்தில் வேலும், பின்புறத்தில் மயிலும் ஒரு முக்கிய சின்னமாக இடம்பெற்றுள்ளது. முருக வழிபாட்டுடன் இணைந்த தொன்றாகக் கடம்பமர வழிபாடு விளங்கியது. இதன் காரணமாக முருகன் "கடம்பமர்ந்த செல்வன்" எனப் பரிபாடலில் விளிக்கப்படுகிறான் (பரி 8:126). லக்ஷ்மி உருவம் பொறித்த நாணயங்களில் குறிப்பாகப் பூநகரி, நிந்தவூர் ஆகிய இடங்களில் கிடைத்த நாணயங்களின் பின்புறத்தில் சுவஸ்திகாவுக்குப் பதிலாக வேலியிடப்பட்ட மரம் காணப்படுகிறது. இதில் வரும் வேலியிடப்பட்ட மரத்தைச் சங்க இலக்கியத்தில் வரும் முருகனுக்குரிய கடம்ப மரத்துடன் தொடர்பு படுத்திப் பார்க்கலாம்.

நல்லூர் இராசதானி காலத்தில் சிவ வழிபாட்டுடன் முருக வழிபாடும் முக்கியத்துவம் பெற்றதற்கான சான்றுகள் நாணயங்களிலேயே காணப்படுகின்றன. குறிப்பாகச் சேது மொழி பொறித்த நாணயங்கள் சிலவற்றில் வலப்புறம் பார்த்து அமர்ந்துள்ள காளைக்கு எதிரே இடப்புறம் பார்த்த நிலையில் மயிலும், வேலும் காணப்படுகின்றன. வேறு சில நாணயங்களில் காளை பெற்ற முக்கியத்து வத்தை மயில் பெற்றதுடன், அவற்றில் வேலும், முருகனைக் குறிக்கும் கந்தன் என்ற பெயரின் சுருக்கமாக "கந்" என்ற பெயரும் காணப்படுகின்றன. இது இக்கால மன்னர்கள் பயன்படுத்திய *கந்தமலையாரியர்கோன்* என்ற விருதுப்பெயரின் சுருக்கம் எனலாம். இச்சான்றுகள் இடைக்காலத்தில் இலங்கைத் தமிழர்கள் பலர் முருகனைக் கந்தனாக வழிபட்டதற்குச் சான்றாகும். இன்றும் இலங்கையிலுள்ள முருக ஆலயங்களில் மூன்றில் ஒரு பங்கு கந்தன் ஆலயங்கள் என்ற பெயரில் அழைக்கப்படுகின்றன. தமிழ் நாட்டில் வரலாற்றுப் பழமைவாய்ந்த முருகன் ஆலயங்கள் உள்ள பழனி, திருச்செந்தூர் போன்ற இடங்கள் கந்தமலை என இலக்கியங்களில் அழைக்கப்பட்டாலும் நடைமுறையில் முருகன் ஆலயங்கள் என அழைக்கப்படும் மரபே பெரும்பாலும் காணப்படுகிறது. இலங்கையில்

சிறப்பாக யாழ்ப்பாணத்தில் கந்தன் வழிபாடு சிறப்புப் பெற்றதற்கு கந்தபுராணமே உதவியிருக்க வேண்டும் எனக் கூறும் பேராசிரியர் வேலுப்பிள்ளை இது அருணகிரிநாதர் காலத்திற்கு முன்பாக கி.பி.14ஆம் நூற்றாண்டளவில் காஞ்சியில் கச்சியப்ப சிவாச்சாரியாரால் பாடப்பட்டது என்கிறார் (1985: 231). கி.பி15ஆம் நூற்றாண்டில் ஈழத்து முருகத்தலங்கள் பற்றிக் கூறும் அருணகிரிநாதரின் திருப்புகளில் கதிர்காமத்துடன் யாழ்ப்பாணமும் குறிப்பிடப்பட்டுள்ளமை அக்காலத்திலேயே கந்தன் ஆலயங்கள் சிறப்புற்றிருந்ததைக் காட்டுகிறது. இதற்கு மேற்குறிப்பிட்ட நாணயங்கள் மேலும் சான்றாக அமைகின்றது எனக் கூறினால் மிகையாகாது.

சைவ சமயத்தைப் போல் விஸ்ணுவைப் பிரதான கடவுளாகக் கொண்ட வைஷ்ணவ சமயமும் பண்டு தொட்டு இலங்கைத் தமிழரிடையே செல்வாக்குப் பெற்ற சமயமாக இருந்ததை நாணயங்கள் ஊடாக அறிய முடிகிறது. இலங்கை இந்து மதம் பற்றிய ஆய்வில் வைஷ்ணவ மதத்திற்குரிய ஆரம்ப காலச் சான்றுகளாகப் பாளி இலக்கியங்களிலும், பிராமிக் கல்வெட்டுக்களிலும் வரும் சில செய்திகள் சான்றாதாரமாகக் காட்டப்படுகின்றன. கல்வெட்டுக்களில் இரு இடங்களில் *விணு* என்ற பெயரும் (I.C.1970:Nos.1217,1218), வேறு சில கல்வெட்டுக்களில் *ராம* (I.C.1970:Nos.347,843), *கொபல* (I.C. 1970:Nos.1217,1218), *நரய* (I.C.1970:Nos.990) போன்ற பெயர்களும் காணப்படுகின்றன. இவற்றுள் *விணு* என்ற பெயர் விஸ்ணுவையும், மற்றைய பெயர்கள் *ராம, கோபால, நாராயண* போன்ற விஸ்ணுவின் அவதாரங்களையும் குறிப்பதாகக் கூறப்படுகிறது (சிற்றம்பலம் 1995:339-340). கந்தரோடையில் கிடைத்த கி.பி.4ஆம் நூற்றாண்டுக்குரிய கார்னியன் கல்மணி முத்திரை ஒன்றில் "விஸ்ணு பூதிஸய" என்ற வாசகம் காணப்படுகிறது (இந்திரபாலா 1972: 31). இது விஸ்ணு வழிபாட்டுடன் தொடர்புடையதாகக் கருதப்படுகிறது.

நாணயங்களைப் பொறுத்தவரை விஸ்ணுவின் தேவியார் லக்ஷ்மியினதும், அவருடன் தொடர்புடைய சின்னங்களுமே அதிகமாகக்

காணப்படுகின்றன. தென்னிலங்கையிலும், வடஇலங்கையிலும் கிடைத்த பிராமி எழுத்துப் பொறித்த நாணயங்களிலும், லக்ஷ்மி நாணயங்களிலும் ஸ்ரீவத்ஸ முக்கிய சின்னமாகக் காணப்படுகிறது. இது வளம், விருத்தி, நீரின் சிறப்பு என்பவற்றைக் குறிக்கும் சின்னமாகக் கூறப்படுகிறது (Mansukhlal 1968). இதுவே லக்ஷ்மியின் ஆரம்ப தோற்றமாகும். இதன் ஆரம்ப தோற்றம் இந்தியாவில் செம்புக் கலாசாரத்திலும், தமிழ் நாட்டில் பெருங்கற்காலப் பண்பாட்டிலும் கல் உருவமாகப் பெறப்பட்டுள்ளது. பிற்காலத்தில் இந்து, பௌத்த, சமண ஆலயங்களில் சிற்பமாக வடிக்கப்பட்டன. இலங்கையில் இதன் ஆரம்ப தோற்றம் பிராமிக் கல்வெட்டில் கோட்டுருவமாகக் காணப்படுகிறது (I.C.1970:No268). வடஇலங்கையில் கந்தரோடையிலும் (Seyone 1998:84,No.3), தென்னிலங்கையில் அக்குறுகொட என்ற இடத்திலும் (Bopearachchi 1999:53, 67. Nos. A11, E17,18) கிடைத்த கி.மு.2ஆம் நூற்றாண்டுக்குரிய தமிழ் நாணயங்களின் முன்புறத்தில் இவ் உருவம் முக்கிய சின்னமாக இடம் பெற்றுள்ளது. இதே வடிவம் லக்ஷ்மி நாணயங்களின் பின்புறத்தில் காணப்படுகிறது. இவ்வடிவம் எவ்வாறு லக்ஷ்மி வடிவமாக படிப்படியாக வளர்ச்சியடைந்ததென்பதை வேறுபட்ட வடிவில் உள்ள லக்ஷ்மி நாணயங்களை ஒப்பிட்டு ஆராய்வதன் மூலம் கண்டு கொள்ளலாம் (புஷ்பரட்ணம் 1998: 1-12). இதன் முழுமையான வடிவத்தை கி.பி.11 ஆம் நூற்றாண்டில் வடஇலங்கையில் வெளியிடப்பட்ட ஸ்ரீலக்ஷ்மி என்ற பெயர் பொறித்த நாணயங்களில் காணலாம்.

லக்ஷ்மி நாணயத்தில் இருபுறமும் தாமரை மலர்மீதிருந்து இரு யானைகள் லக்ஷ்மி மீது நீர்சொரிவது போல் காட்டப்பட்டுள்ளது. இதில் வரும் யானைகள் இந்திரனுடைய ஐராவதத்தைக் குறிக்கிறது எனக் கூறலாம். இந்திரன் தேவர்களுக்கெல்லாம் அரசன். அதே போல் இந்நாணயத்தை வெளியிட்ட மன்னனும் தேவேந்திரன் என திகழ்வான் என்பது பொருள். பண்டைய கால மன்னர்கள் மகேந்திரபராக்கிரமன்" எனக் கூறிக் கொள்ளும் மரபுண்டு.

அதை இரணயத்தில் வரும் யானைச் சின்னங்கள் நினைவுபடுத்துவதாக எடுத்துக்கொள்ளலாம். நாணயத்தில் வரும் தாமரை பல மதங்களுக்குப் பொதுவாக இருப்பினும் அது லக்ஷ்மி நாணயத்தோடு வருவது சிறப்பாக நோக்கத்தக்கது. இந்நாணயத்தில் வரும் மற்றொரு சின்னமான சுவஸ்திகாவின் தோற்றம் ஹரப்பா நாகரிகத்துடன் தொடர்புபடுத்தப்படுகிறது. இது சூரியனைப் பிரதிநிதிப்படுத்துவதாகவும், அதிட்டம், நீண்ட ஆயுளைக் குறிப்பதாகவும் கருதப்படுகிறது (Sarma 1990:72). ஆரம்ப காலங்களில் இந்து மதத்துடன் தொடர்புடைய இச்சின்னம் பிற்காலத்தில் பௌத்த, சமண மதங்களுக்கும் உரிய சின்னமாகக் காணப்படுகிறது. இந்திய நாணயங்கள் பலவற்றில் இச்சின்னம் இடம்பெற்றிருந்தாலும் இலங்கை நாணயங்களில் மட்டுமே பீடத்துடன் கூடிய சுவஸ்திகா காணப்படுகிறது. சில எழுத்துப்பொறித்த நாணயங்களில் ஆமையும், மீனும் முக்கிய சின்னங்களாக இடம்பெற்றுள்ளன (Bopearachchi 1999:59-60). பிற்கால வடஇலங்கை அரசுகால நாணயங்களில் மீன் முக்கிய சின்னமாக இடம்பெற்றுள்ளது. இவ்விரு சின்னங்களும் விஸ்ணுவின் மச்ச அவதாரமாக வைஷ்ணவக் கோவில்களில் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது (Mansukhlal 1968). இதனால் நாணயங்களில் வரும் இச்சின்னங்கள் விஸ்ணுவழிபாட்டுடன் தொடர்புடையவை எனக் கூறலாம். இதை நாணயங்களில் வரும் சங்கும் உறுதிப்படுத்துகிறது.

மேற்கூறப்பட்டவற்றைத் தவிர மேலும் சில சின்னங்கள் நாணயங்களில் காணப்படுகின்றன. அவற்றுள் சூரியன், சந்திரன், குத்துவிளக்கு, பூரணகும்பம், முத்து, சங்குபோன்றவை குறிப்பிடத் தக்கன. இதில் தனி வழிபாடாக இருந்த சூரியனும், சந்திரனும் பிற்காலத்தில் சிவ வழிபாட்டுடன் இணைந்து கொண்டதை நாணயங்களில் காணலாம். விளக்கு, பூரணகும்பம் பிற மதங்களில் காணப்பட்டாலும் சைவ, வைஷ்ணவ மதங்களில் முக்கிய மங்கலச் சின்னங்களாக இடம்பெறுகின்றன. சங்கும், முத்தும் நாணயங்களை வெளியிட்டவர்களின் வர்த்தக நோக்கத்தைப் புலப்படுத்துவதாக

இருக்கலாம். ஏனெனில் வடஇலங்கையின் பொருளாதார வளம் பண்டைய காலத்தில் சங்கு, முத்துக் குளித்தலுடன் தொடர்பு கொண்டிருந்ததற்குப் பல சான்றுகள் உண்டு. ஆயினும் இதில் சங்கு விஸ்ணுவுடன் தொடர்புடைய சின்னமாக இருப்பதுடன் அதற்கு மங்கலம், தூய்மை என்ற கருத்தும் இருப்பதால் அதற்கு சமய முக்கியத்துவம் கூடுதலாக இருந்திருக்கலாம். இலங்கைத் தமிழரின் வழிபாட்டில் பெரிதும் முக்கியத்துவம் பெற்ற *நாக* வழிபாட்டிற்குரிய சின்னங்கள் நாணயங்களில் அதிகம் இடம்பெறவில்லை. ஆயினும் பல நாணயங்களில் நாக என்ற பெயர் இடம் பெற்றுள்ளமை அவற்றை வெளியிட்டவர்கள் நாக வழிபாட்டுடன் தொடர்புடையவர்களாக இருக்கலாம் என்பதைக் காட்டுகிறது. மீன் சின்னம் கொண்ட நாணயங்களின் முன்பக்கத்தில் ஐந்து தூண்கள் கொண்ட கூரைக் கோயில் காணப்படுகிறது. இது இலங்கைத் தமிழரின் பண்டைய காலக் கோயில் அமைப்பாக இருக்கலாம்.

இதுவரை கூறப்பட்ட நாணய ஆதாரங்களிலிருந்து இலங்கைத் தமிழரின் பண்டைய கால எழுத்து, மொழி, குடிப்பரம்பல், அரசு உருவாக்கம், மதம் தொடர்பான சில வரலாற்று உண்மைகளை அறியமுடிகிறது. ஆயினும் இவை ஒட்டுமொத்த தமிழ் மக்களுடைய வரலாற்றுத் தரவுகளையும் தருவதாக எடுத்துக்கொள்ள முடியாது. ஆய்வுக்குப் பயன்படுத்திய நாணயங்கள் இலங்கை நாணயங்கள் தொடர்பாக வெளிவந்த நூல்கள், கட்டுரைகள் என்பவற்றில் எமக்குத் தெரியவந்தவையும், களஆய்வின் போது யாம் கண்டுபிடித்தவையும் என்பது இவ்விடத்தில் சுட்டிக்காட்டத்தக்கது. தமிழ் மக்கள் பெரும்பான்மையாக வாழ்ந்து வரும் வட்டாரங்களில் ஒன்றான கிழக்கிலங்கையில் லக்ஷ்மி நாணயம் தொட்டு வடஇலங்கை அரசு காலத்தில் வெளியிட்ட சேது நாணயங்கள் வரை கண்டுபிடிக்கப்பட்டது பற்றிய ஒரு சில தகவல்கள் கொட்றிங்ரன் நூலில் காணப்பட்ட போதிலும், அவை வட்டார அடிப்படையிலோ அல்லது கால அடிப் படையிலோ இதுவரை அட்டவணைப்படுத்தப்படவில்லை. அத்துடன் வடஇலங்கையில் மேற்கொள்ளப்பட்ட குறைந்தளவிலான களஆய்வுகள்

கூட கிழக்கிலங்கையில் இதுவரை மேற்கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. அண்மைக் காலங்களில் களஆய்விலும், அகழ்வாய்விலும் கிடைத்த நாணயங்களை ஆராய்வதில் சிங்கள அறிஞர்கள் அதிக அக்கறை காட்டியுள்ளனர். அவர்களுள் பலர் சிங்கள மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களை ஆராய்ந்த அளவுக்குப் பிற நாணயங்களை ஆராய்வதில் அக்கறை காட்டவில்லை. இதனால் இவை கண்டெடுக்கப்பட்ட இடங்களும், அவற்றின் வகையும், தொகையும் தெரியாமலே போய்விடுகின்றது. இவை ஒன்று சேர ஆராயப்படுமானால் தமிழர் வரலாற்றில் மேலும் பல உண்மைகள் வெளிவர வாய்ப்புண்டு.

## பின்னிணைப்பு

### கல்வெட்டுக்கள் நாணயங்களில் வரும் பெயர் ஒற்றுமை

| நாணய இலக்கம் | கல்வெட்டில் வரும் பெயர் | நாணயங்களில் வரும் பெயர் | கல்வெட்டு இலக்கம் I.C.1970 |
|---|---|---|---|
| 1 | உதிரன் | உதி(த)ர | 643 |
| 2 | தஸபிஜன் | தச$_0$ | 389 |
| 3 | கபதி கஜபதிஅன் | ஹபதிகன்(ங்) | 94,406 |
| 4 | மஹாசாத்தன் | மஹா, ச$_0$த்தன்(ங்) | 423,896d |
| 5 | மல்லக திச$_0$ஹ | மல்லன்,மல்ல, மல்லஹ | 202,345 |
| 6 | அட ணகஸ | அட, [illegible] | 358,1172 |
| 7 | அட ச$_0$ சமணஹ | அட, சமணிய, ச$_0$மணஹ | 643,203 |
| 8 | பரத திச$_0$ஹ | பரத திச$_0$ | 330,270 |
| 9 | மஜிமஹ | மஜிம | 406 |
| 10 | குத்தஹ | குத்தஹ, குட்ட திச$_0$ஹ | 143 |
| 11 | சடணாக ராசன் | சத(ட)நாஹ? | 360 |
| 12 | உதிஹபன் | உதியஹ | 958 |

இலங்கைத் தமிழரோடு தொடர்புடைய பட்டம், வம்சம், உறவுமுறை, இடப்பெயர் என்பவற்றைக் காட்டும் கி.பி.1ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சில பிராமிக் கல்வெட்டுக்கள்.

| கல்வெட்டுப்பெயர் | தமிழ்வடிவம் | கல்வெட்டு இலக்கம் |
|---|---|---|
| 1)பருமக | பெருமகன் | 331 |
| 2)பறுமக | பெருமகன் | 148 |
| 3)பருமகள் | பெருமகள் | 331 |
| 4)பரத | பரதவர் | 270 |
| 5)வேள் | வேள் | 355 |
| 6)ஆய் | ஆய் | 424 |
| 7)புலய | புலையர் | 279 |
| 8)மருக | மருக(மருமகன்) | 83 |
| 9)மருமகன் | மருமகன் | 643 |
| 10)மறுமகன் | மருமகன் | 289 |
| 11)மருமான் | மருமான்(மருமகன்) | 1161 |
| 12)முகள்(மகள்?) | மகள் | 925 |
| 13)சஹல | சகலன் | 274 |

| | | |
|---|---|---|
| 14)மல்லன் | மல்லன் | 202 |
| 15)அடி | அடி(இடம்) | 925 |
| 16)ஈள | ஈழம் | 94 |
| 17)குடி | குடி(சமூகம்) | 1175 |
| 18)கர | கரை | 53 |
| 19)குடா | குடா | 656 |
| 20)குலி | குழி | 276 |
| 21)வய | வயல் | 794 |
| 22)காடு | காடு | 1142 |
| 23)தொட | தொடு(தொடுவாய்) | 86 |
| 24)மடு | மடு | 837 |
| 24)நகர் | நகர் | 1120 |

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | – | *அகநானூறு* |
| சிலப் | – | *சிலப்பதிகாரம்* |
| தொல் | – | *தொல்காப்பியம்* |
| நற் | – | *நற்றிணை* |
| பட்டினப் | – | *பட்டினப்பாலை* |
| பதிற் | – | *பதிற்றுப்பத்து* |
| புறம் | – | *புறநானூறு* |
| பெரும்பாண் | – | *பெரும்பாணாற்றுப்படை* |
| மணிமே | – | *மணிமேகலை* |
| மதுரை | – | *மதுரைக்காஞ்சி* |
| மலைபடு | – | *மலைபடுகடாம்* |
| C.V. | - | *Culavamsa* |
| D.E.D. | - | *Dravidian Etymological Dictionary* |
| D.V. | - | *Dipavamsa* |
| E.I. | - | *Epigraphia Indica* |
| E.Z. | - | *Epigraphia Zeylanica* |
| I.C. | - | *Inscriptions of Ceylon* |
| M.V. | - | *Mahavamsa* |
| S.S.I. | - | *South Indians Inscriptions* |
| S.S.I.C. | - | *Studies in South Indian Coins* |
| T.L | - | *Tamil Lexicon* |

## உசாத்துணை நூல்கள்


*அகநானூறு,* 1974,பெருமழைப்புலவர் உரை, கழகப்பதிப்பு, சென்னை, மூன்றாம் பதிப்பு.

*சங்கஇலக்கியம்,* 1967, வையாபுரிப் பிள்ளை,எ. (ப.ஆ), (இரண்டுதொகுதிகள்), பாரிநிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு.

*சிலப்பதிகாரம்,* 1927, சாமிநாதையர், உ.வே., பதிப்பு, சென்னை.

*செகராசசேகரம்,* 1932, இரகுநாதையா, இ.சி. (பதிப்பு), அச்சுவேலி.

*செகராசசேகர மாலை,* 1942, இரகுநாதையா, இ.சி. (பதிப்பு) யாழ்ப்பாணம்

*நற்றிணை,* 1976, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை, கழகப்பதிப்பு, ஐந்தாம் பதிப்பு.

*பத்துப்பாட்டு,* 1976, உ.வே.சா., நச்சினார்க்கினியர் உரை, பதிப்பு, சென்னை, ஐந்தாம் பதிப்பு.

*பதிற்றுப்பத்து,* 1904, உ. வே.சா., பழைய உரை, பதிப்பு, சென்னை.

*பல்லவ செப்பேடுகள் முப்பது,* 1999, உலகத் தமிழாராச்சி நிறுவன வெளியீடு.

*புறநானூறு,* 1971, உ.வே.சா., பழைய உரை, பதிப்பு, சென்னை, ஏழாம்பதிப்பு.

*மணிமேகலை,* 1971, சோமசுந்தரனார்,பொ.வே. சென்னை.,

*யாழ்ப்பாண வைபவமாலை,* 1953, சபாநாதன்,குல. (பதிப்பு), கொழும்பு.

*ஸ்ரீதக்ஷிண கைலாசபுராணம்,* 1942, இரகுநாதையர், இ.சி. யாழ்ப்பாணம் (பதிப்பு)

இந்திரபாலா, கா., 1972, *யாழ்ப்பாண இராச்சியத்தின் தோற்றம்,* கண்டி.

இந்திரபாலா, கா., 1999, *இலங்கையில் திராவிடக் கட்டிடக் கலை,* (இரண்டாம் பதிப்பு), குமரன்பப்ளிஸர், சென்னை.

இந்திரபாலா, கா, 1969, யாழ்ப்பாணத்துக் கல்வெட்டுக்கள் *சிந்தனை,* தொகுதி.2, இதழ்.4. பேராதனை.

இராசகோபால், சு. 1991, இலங்கை, தமிழக பிராமி எழுத்துக்கள்– ஓர் ஒப்பாய்வு, *தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நடந்த சாசனவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரை. தஞ்சாவூர்*

இராசவேலு, சு., 1995, செகனூர்பட்டி தமிழ் பிராமிக் கல்வெட்டு, சித்தன்னவாசல் களஆய்வு, *ஆவணம்,* தமிழகத் தொல்லியல் கழகம், 67-12.

இராசவேலு, சு 1999, பூம்புகாரில் சிங்களப் பிராமி எழுத்துப் பொறித்த மட்பாண்டத்துண்டு, *ஆவணம்,* 9:154.

இராசு, செ. 1983, *தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்,* தஞ்சாவூர்.

இராசு, செ. 1995, வெளிநாட்டில் புதிய தமிழக் கல்வெட்டுக்கள், *தமிழ்ப் பண்பாடு,* சென்னை : 22-28.

இராசு, செ. 1991, *கொங்கு நாட்டு ஆவணங்கள்,* தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

இராஜன், கா., 1994, *கொடுமணல் அகழாய்வு ஓர் அறிமுகம்,* மனோபதிப்பகம், தஞ்சாவூர்.

காசிநாதன், நடன., 1995, *தமிழர் காசு இயல்,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

கிருஷ்ணராசா, செ., 1983, யாழ்ப்பாணக் குடாநாட்டில் கிடைத்த நாணயங்கள், *சிந்தனை,* 1 : 71-84.

கிருஷ்ணராசா, செ., 1998, *தொல்லியலும் யாழ்ப்பாணத்*

*தமிழர் பண்பாட்டுத் தொன்மையும்*, பிறைநிலா வெளியீடு, யாழ்ப்பாணம்.

கிருஷ்ணமூர்த்தி, இரா., 1986, *சங்க காலச் சோழர் நாணயங்கள்*, சென்னை.

கிருஷ்ணமூர்த்தி, இரா., 1987, *சங்க காலப் பாண்டியர் பெருவழுதி நாணயங்கள்*, சென்னை.

கிருஷ்ணமூர்த்தி, இரா., 1990, *சங்க கால மலையமான் நாணயங்கள்*, சென்னை.

குணசிங்கம், செ. 1973, *கோணேஸ்வரம்*, பேராதனை.

சிவகுருநாதன், மா., 1991, *சிவவடிவங்கள்*, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

சிவசாமி, வி., 1974, யாழ்ப்பாணக் காசுகள், *நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு நிகழ்ச்சிகள்*, (ப.ஆ), வித்தியானந்தன், சு., அனைத்துலகத் தமிழாராய்ச்சி மன்ற இலங்கை கிளை, கொழும்பு : 26–36.

சிவசாமி, வி., 1975, யாழ்ப்பாணத்தில் இந்து சமயம்– சில வரலாற்றுக் குறிப்புகள், *வசந்தம்*, நெல்லியடி மத்திய மகா வித்தியாலயம் ஆண்டு மலர் : 32–37.

சிவசாமி, வி., 1998, *தமிழும் தமிழரும்*, குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை.

சிற்றம்பலம், சி.க., 1993, *யாழ்ப்பாணம் தொன்மை வரலாறு*, யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, திருநெல்வேலி.

சிற்றம்பலம், சி.க., 1996, *ஈழத்து இந்து சமய வரலாறு*, பாகம் 1, கி.பி. 500 வரை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, கொழும்பு.

சீதாராமன், ஆறுமுக, 1994, *தமிழகத் தொல்லியல் சான்றுகள் அண்மைக்காலக் கண்டு பிடிப்புகள்*, தொகுதி-1. தனலஷ்மி பதிப்பகம், தஞ்சாவூர்.

சீதாராமன், ஆறுமுக, 1995, பல்லவர் காசுகள், *Coins X 95 Madras*, Madras Coins Society, Madras.

சீதாராமன், ஆறுமுக, 1996, தஞ்சைமராட்டியர் காசுகள், *ஆவணம்*, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர்.

சீதாராமன், ஆறுமுக, 1996அ, தென்னிந்தியக் காசுகள் புதிய கண்டுபிடிப்புகள், *வரலாறு* , 6: 89–8,

சீதாராமன், ஆறுமுக, 1998, கடவுள் பெயரில் தமிழ்க் காசு, *Coins X 98 Madras*, Madras Coins Society, Madras.

சீதாராமன், ஆறுமுக, 1989, மறவர் நாணயங்கள், 9.12. *1989இல் சிவகங்கை வரலாற்றுப் பேரவையில் நடந்த வரலாற்றுக் கருத்தரங்கில் வாசிக்கப்பட்ட ஆய்வுக்கட்டுரை.*

சீதாராமன், ஆறுமுக, 1989, இராஜராஜனின் ஈழக்காசுகள், *தமிழ் நாடு நாணயவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்ட ஆய்வுக்கட்டுரை.*

சீதாராமன், ஆறுமுக, 1997, சேதுபதியின் தமிழ்க் காசுகள், *தினமணி* 14.5.1997.

சுப்பராயலு, எ., 1983, பொருளியலும் வணிகமும், *தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் – வாழ்வியல்,* தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை : 146–156.

சுப்பராயலு, எ. சண்முகம், ப, 1998, இலங்கையில் ஐந்நூற்றுவர் கல்வெட்டுகள், *ஆவணம்,* 9:32–34.

சுப்பராயலு, எ. சண்முகம், ப, 1999, அநுராதபுரத்தில் ஒரு தமிழ்க் கல்வெட்டு, *ஆவணம்,* 10 : 11–13.

சௌந்தரபாண்டியன்,சு., 1997, பாலி மொழி பெற்ற தமிழ்ச் சொற்கள், *கல்வெட்டு,* தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, 50–51

ஞானப்பிரகாசர், சுவாமி., 1928, *யாழ்ப்பாண வைபவவிமர்சனம்,* அச்சுவேலி.

பத்மநாதன், சி. 1992, ஆரியச்சக்கரவர்த்திகள் காலம், *யாழ்ப்பாண இராச்சியம்,* (ப.ஆ) சிற்றம்பலம், சி.க. யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, யாழ்ப்பாணம்.

பத்மநாதன், சி. 1972, தமிழ்ச் சாசனங்களும் ஈழ வரலாற்றாராய்ச்சியும், *இளந்தென்றல்,* கொழும்பு.

பத்மநாதன், சி. 1984, இலங்கையில் தமிழ் வணிக கணங்களும் நகரங்களும் (கி.பி.1000. 1200), *சிந்தனை,* தொகுதி. 2. யாழ்ப்பாணம்.

பத்மநாதன், சி. 1998, (ப.ஆ), *தக்ஷிணகைலாச புராணம்,* இலங்கை இந்து கலாசாரத் திணைக்கள வெளியீடு. கொழும்பு.

பாலசுந்தரம், இ., 1986, ஈழத்தில் கண்ணகி வழிபாடு பற்றிய ஆய்வில் வன்னிப் பிரதேச நாட்டார் பாடல்கள் பெறும் முக்கியத்துவம், *தமிழோசை,* யாழ்ப்பாணப் பல்கலைக்கழக தமிழ்மன்ற வெளியீடு.

பவானி, மா. 2000, இடைக்காலத் தமிழ் கல்வெட்டுக்களில் நாணயப் பெயர்களும் அவற்றின் புழக்கமும், *ஆவணம்,* 11 : 130-134.

பவானி, மா. 1999, இடைக்காலத் தமிழ் கல்வெட்டுக்களில் வட்டி வீதம், *ஆவணம்,* 10 : 133-136.

பவானி, மா. 1999, காலந்தோறும் பணம், *தமிழ் நாட்டு நாணயங்கள், அருங் காட்சியகங்கள்.* சென்னை. 47-51.

பாலசுப்பிரமணியம், குடவாயில். 1988, ஈழத்து வெற்றியும் ராஜராஜன் காசும், *தினமணி* (9.12.1988)

பாலசுப்பிரமணியம், குடவாயில். 1998, சோழனின் சாதனை காட்டும் சேந்தனின் காசு, *தமிழியல்,* Journal of Tamil Studies, June & December :145 -14-54

புலவர் குழந்தை, 1953, *கொங்கு நாடும் தமிழும்,* திருச்சிராப்பள்ளி.

புஷ்பரட்ணம், ப., 1993, *பூநகரி-தொல்பொருளாய்வு,* யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, யாழ்ப்பாணம்.

புஷ்பரட்ணம், ப., 1998, பூநகரியில் கிடைத்த அரிய சங்ககால நாணயங்கள், *ஆவணம்,* தமிழகத் தொல்லியல் கழகம், 9 : 114-119.

புஷ்பரட்ணம், ப., 1998, அண்மையில் வடஇலங்கையில் கிடைத்த லக்ஷ்மி நாணயங்கள் ஒரு மீள் பரிசீலனை, *ஒன்பதாவது தமிழக தொல்லியல் கழக ஆய்வரங்கு,* புதுக்கோட்டை. 1-12.

புஷ்பரட்ணம், ப., 1999அ, வடஇலங்கையில் அரசதோற்றமும் பாண்டியர் வெளியிட்டநாணயங்களும், *தமிழ் நாட்டு நாணயங்கள், அருங்காட்சியகங்க*ள் சென்னை. 6-9.

புஷ்பரட்ணம், ப., 1999ஆ, தென்னிலங்கையில் கிடைத்த பண்டைய தமிழ் நாணயங்களின் வரலாற்றுப் பின்னணி, *நாவாவின் ஆராய்ச்சி,* ஜூலை 49 : 55-70.

புஷ்பரட்ணம், ப., 2000அ, இலங்கைப் பிராமிக் கல்வெட்டுக்களில் மருமகனைக் குறிக்கும் உறவுப் பெயர்கள்- கல்வெட்டு மொழி பற்றிய ஒரு பார்வை, *பதினோராவது தமிழகத் தொல்லியல் கழகக் கருத்தரங்கில் வாசிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரை.*

புஷ்பரட்ணம், ப., 2000, *தொல்லியல் நோக்கில் இலங்கைத் தமிழர்* பண்பாடு, குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை.

பூங்குன்றன், ஆர்., 1999, பண்டைய தமிழகத்தில் அரசு உருவாக்கம், *முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பட்ட ஆய்வேடு*, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

மகாதேவன், ஐ., 2000, தென்னிலங்கையில் பழந்தமிழ் நாணயங்கள், *ஆவணம்*, 11 : 116-120.

வேங்கடசாமி, மயிலை. *சீனி.*, 1983, இலங்கையில் தமிழர், *தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் அரசியல்*, தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 592 -639.

வேலுப்பிள்ளை, ஆ, 1986, *தொடக்ககால ஈழத்து இலக்கியங்களும் அவற்றின் வரலாற்றுப் பின்னணியும்*, யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, யாழ்ப்பாணம்.

வேலுப்பிள்ளை, ஆ, 1985, *தமிழர் சமய வரலாறு*, பாரி புத்தகப் பண்ணை, சென்னை.

Begley, Vimala., 1973, Proto historic Material from Sri Lanka [Ceylon] and Indian Contacts

in Ecological Background of South Asian Prehistory, [E.d], Kennedy, A.R. and Possehl, L., *South Asian Occasional Papers and Thesis, South Asian Program,* Cornell University: 190 -196.

Begley, Vimala., 1996, The Ancient *Port of Arikamedu, [New Excavation and Researches 1989-1992],* De Ecole Francaise D'extreme -Orient, Pondicherry,1. Co-Cooperation in Sri Lanka

Biddulph, C.H. 1966, *Coins of Pandyas*, NNMno11 of the Numismatic Society of India.

Bopearachchi, O., 1998, *Archaeological Evidence on Changing Patterns of International Trade Relation of Ancient Sri Lanka in Origin and Circulation of Foreign Coins in the Indian Ocean,* [E.d], Bopearachchi, O. and Weerakkody, D.P.M, Sri Lanka Society for Numismatic Studies and French Mission of Archaeological Cooperation in Sri Lanka, New Delhi.

Bopearachchi, O. and Wickramesinhe, W. 1999, *Ruhuna an Ancient Civilization Revisited,* Nugegoda.

Burrow, T. and Emeneau, M.B., 1961, *Dravidian Etymologicalnary, Dictionary*, Oxford.

Carswell, John. and Martha, Prickett., 1984, Mantai 1980: A Preliminary Investigation in *Ancient Ceylon*, Journal of the Archaeo-logical Survey Department of Sri Lanka, 5 : 3-68.

Champakalakshmi, R., 1975, Archaeology and Tamil Literary Tradition in *Puratattva*,8 : 110-122.

Codrington, H.W. 1924, *Coins and Currency*, Memoirs of the Colombo Museum, Series A, No.3, Colombo.

Conningham,R.A.E., 1999, Passage to India- Anuradhapura and the Early Use of the Brahmi Script in *Cambridge Archaeological journal*, 6 [1] : 73-97.

*Culavamsa*, 1953, Geiger. W. [E.d], Ceylon Government Information Department Colombo.

*Dipavamsa*, 1959, Bimala Churn Law .,[E.d], The Ceylon Historical Journal Vol. III No. 1-4.

Desikachari, T 1933, *South Indian Coins*.

Elliot, W. — 1858, Numismatic Gleanings in *Madras Journal of Literary and Science*, New Series, 6 : 220-249,

Elliot, W. — 1858, Numismatic Gleanings in *Madras Journal of Literary and Science*, New Series,7 : 75-99.

Elliot, W. — 1970, *Coins of South India*, Prithivi Prakasan, Varanasi.

Fernando,P.E.E., — 1949, Paleographical Development of the Brahmi Script in Ceylon from 3rd Century B.C. to 7th Century A.D. in *University of Ceylon Review*, Colombo,III : 282-301.

Girijapthy, M. and Ganesh, K. — 1999, Peacock Motif Coins of Kalyani Chalukyas in *S.S.I.C*, IX : 82-*3*

Goonetilleke, S. — 1980, Sinhalisation-The Origin in *Lanka Guardian*, 3(1) : 22-29.

Gnanapragasar, S. — The forgotten Coinage of the Kings of Jaffna in *Ceylon Antiquary*, 5.

Gunawardana, R.A.L.H., 1977, Prelude to the State an Early Phase in the Evolution of Political Institution in Ancient Sri Lanka in *The Sri Lanka Journal of the*

| | |
|---|---|
| | *Humanities,* University of Peredeniya, VIII[1&2] :1-39. |
| Gunawardhene, W. | 1924, *Kokilasandesaya* (e.d), Colombo. |
| Gupta, P.L., | 1965, *The Early Coins from Kerala,* Department of Archaeology Government of Kerala, Trivandrum. |
| Gupta, P.L., | 1969, *Coins,* National Book Trust, India, New Delhi. |
| Havalaiah, N. | 1999, Two Unpublished Copper Coins of Mysore Wadeyars in *S.S.I.I,*IX: 130-2. |
| Hettiaratchi, D.P.E., | 1950, Numista Zeylanica on a Newly Discovered Type of Lakshmi Plagues in *Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society,* Colombo,1 : 04-22. |
| Hettiaratchi, D.P.E., | 1955, A Note on an Unpublished Pallava Coin in *Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society,* Colombo, IV [1] :72-76. |
| Hultzsch, F., | 1969, Inscriptions of Asoka in *Corpus Inscriptionum Indicarum,* Delhi,1. |
| Indrapala K | 1969, Early Tamil Settlements in |

Ceylon in *Journal of Royal Asiatic Society of Ceylon Branch,* XIII:43-61.

Indrapala, K., 1971, A Cola Inscription from the Jaffna Fort in *Epigraphia Tamilica,* Jaffna Archaeological Society, Jaffna,1[1] : 52-56.

James, E., 1887-88, Pandyan Coins in Southern India in *Madras Journal of Literary and Science,* New Series, 138-144.

Kasinathan, Natana., 1996, Archaic Tamil Inscription from Excavation in *Kalvettu*, Tamil Nadu Archaeological Department, 48 : 27-35.

Kannangara, K. T., 1984, *Jaffna and the Sinha Heritage,* Colombo.

Karunaratne, S.M., 1960, Brahmi Inscriptions of Ceylon in *Unpublished Ph.D Thesis,* University of Cambridge, Cambridge.

Krishnamurthy, R., 1997, *Sangam Age Tamil Coins,* Garnet Publications, Madras.

Krishnamurthy, R., 1991, Oblong Coin With a Mother

Goddess Symbol from Karur, Tamilnadu in *Journal of the Numismatic Society of India,* 53 : 59-61.

Loventhan, E., 1888, *The Coins of Tinnevelly,* Higginbotham and Co Madras.

Mahadevan, I., 1966, *Corpus of the Tamil- Brahmi Inscriptions,* Reprint of Seminar on Inscriptions, Department of Archaeology Government of Tamil Nadu, Madras.

Mahadevan, I., 1970, Some Rare Coins of Jaffna in *Damilica,* I : 111-120.

Mahadevan, I., 1994, Recent Epigraphical Evidence for Ancient Tamil Contacts Abroad in *Rev, Fr. Thaninayagam Memorial Lecture,* Thaninayagam Foundation Trust, Colombo, :1-26.

Mahadevan, I., 1994a, Old Sinhalese Inscriptions from Indian Ports: New Evidence for Ancient India- Sri Lanka Contacts, *Paper Presented at the Post-Graduate Institute of Archaeology,* Colombo,:1-19.

Mahadevan,I., 1995, Recent Trends in Early Tamil Epigraphy: An Overview in *Journal*

*of the Institute of Asian Studies*, XIII[1] : 1-31.

Mahadevan,I., 1996 Pottery Inscriptions in Brahmi and Tamil Brahmi in *The Ancient Port of Arikamedu,*(e.d) Begley, Vimala., [New Excavation and Researches 1989-1992], De Ecole Francaise D'extreme -Orient, Pondicherry,1. Co-Coope ration in Sri Lanka : 287-315.

Mahadevan,I., 2000, Ancient Tamil Coins From Sri Lanka, To be published in the *Journal of the Institute of Asiar Studies,* Madras.

Mahalingam, T.V., 1967, *Early South Indian Paleography*, University of Madras.

Mahalingam, T.V., 1988, *Inscriptions of Pallava,* Indians Council of Historical Research New Delhi.

*Mahavamsa,* 1950, (e.d) Geiger,W., The Ceylon Government Information Department, Colombo.

Maloney,C., 1969, The Paratavar : 2000 Years of Culture Dynamics of a Tamil Cast in *Man in India,* 49 : [1] : 224-240.

Mictchiner. M 1998, *The Coinage and History of Southern India* , Hawakins Publication.

Narasimha Murthy, A.V. 1975, *The Coins of Karnataka*, Geetha Book House, Mysore.

Naswamy, R., 1981, *Tamil Coins*, Madras.

Nagaswamy R. 1995, *Roman Karur*, Brahad Prakashan, Madras.

Nedumaran, S.D. and Ramachandran, S., 1999, The Velirs: Were the Velalas in *journal of the Epigraphical Society*, The Epigraphical Society of India, Mysore, XXV : 139-152.

Nedumaran, S.D. and Ramachandran, S., 2000, Ancient Tamil Monarchy and thy Sethupati Kings in *journal of the Epigraphical Society*, The Epigraphical Society of India, Mysore,XXVI : 158-172.

Nicholas, C.W., 1963, Historical Topography of Ancient and Medieval Ceylon in *Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society*, Colombo,VI.

Nilakanta Sastri, K.A., 1958, *A History of South India*,

2nd[revised] Edition, London.

Panneerselvam,R. 1969, Further Light on the Bilingual Coin of the SATAVAHANA in *Indo Dravidian Journal,* 11(4) : 281-288.

Paranavithana, S., 1928, Anuradhapura: Slab-Inscription of Khudda Parinda in *Epigraphia Zeylanica,* The Archaeological Department of Ceylon, II : 111 -114.

Paranavithana, S., 1961, The Arya Kingdom of Northern Sri Lanka in *Journal of Royal Asiatic Society of Ceylon Branch,*VII:174-224.

Paranavithana, S., 1970, *Inscription of Ceylon:* Early Brahmi Inscriptions, The Depart ment of Archaeology Ceylon, Colombo,I.

Paranavithana, S., 1983, *Inscription of Ceylon:*Late Brahmi Inscriptions, The Department of Archaeology Sri Lanka, Moratuwa, II[1].

Parkar, H., 1981, *Ancient Ceylon,* Asian Educational Services, New Delhi.

Pathmanathan, S., 1978, *The Kingdom of Jaffna,* Arul M.Rajendran, Colom-bo.

Pathmanathan, S., 1980, Coins of Medieval Sri Lanka: The Coins of the Kings of Jaffna, in *Spolia Zylanica*, Vol. 35, part I and II : 409-417

Peris, P.E., 1922, Nagadipa and Buddhist Remains in Jaffna Part.I in *journal of the Royal Asiatic Society Ceylon Branch*, 11-20.

Peris, P.E., 1925, Nagadipa and Buddhist Remains in Jaffna Part. II in *Journal of the Royal Asiatic Society Ceylon Branch*, 40-67.

Peyatissa Senanayake, 2000, Reference to Kahavana in Early Historic Inscriptions of SriLanka in *Studies in Indian Epigraphy*, XXVI: 84-95

Pillai, K.K., 1975, *South India and Ceylon*, [Sir William Meyer Lectures [1958-59] University of Madras, Madras.

Prensep's 1858, Ceylon Coins, *Essays on Indians Antiquities*, London.

Ragupathy, P., 1987, *Early Settlements in Jaffna: An Archaeological Survey*, Mrs.Thillimalar Ragupathy, Madras.

Ragupathy, P., 1991 , The Language of the Early Brahmi Inscription in Sri Lanka, [Unpublished].

Rajan, K., 1994, *Archaeology of Tamil Nadu:* (Kongu Country,) Book India Publishing Co,Delhi.

Rajan, K., 2000, Mani, Kacu and Kanam- A Explanation *S.S.I.C.*, X:114-118.

*Rajavaliya,* 1959, (e.d) Pemananda Bhikhu, Colombo.

Ramchandramurthy, S.S., 1985, *A Study of the Telungu Place Names*, Agamkala Prakasan, Delhi.

Rasanayagam, C., 1926, *Ancient Jaffna,* A.S., Everyman's Publishers Ltd, Madras.

Ray, H.C., 1960, (e.d) *University of Ceylon History of Ceylon,* Vol.1, Part.II. Colombo.

Schoff, W.H., 1912, [E.d], The Periplus of Erythraean Sea, New York.

Seneviratne, S., 1984, The Archaeology of the Megalithic-Black and Red Ware Complex in Sri Lanka in *Ancient*

*Ceylon*, Journal of the Archaeological Survey of Sri Lanka,5:237-307.

Seneviratne, S., 1985, The Baratas: A Case of Community Integration in Early Historic Sri Lanka in *Festschrift 1985 James Thevathasan Ratnam*,[E.d], Amerasinghe, A.R.B., Colombo : 49-56.

Seneviratne, S., 1993, From Kudi to Nadu: A Suggested Framework for Study pre State political Formations in Early Iron Age South India in *The Sri Lanka Journal of the Humanities*, XIX [1&2] : 57-77.

Seyon, K.N.V. 1998, *Some Old Coins Found in Early Ceylon*, Nawala. Sri Lanka.

Shanmugam, P., 1994, Two Coins of the Tamil Origin from Thailand in *S.S.I.C.*, IV : 95-100.

Sharma, S., 1990, *Early Indian Symbols-Numismatic Evidence*, Agam Kala Prakashan, Delhi.

Silva, K. M.D., 1981, *History of Sri Lanka*, Colombo.

Singaravelu, S., 1966, *Social Life of the Tamils -The Classical Period*, University of Malaya, Kula Lumpur.

Sircar, D.C., 1968, *Studies in Indian Coins,* Motilal Banarsidass, Delhi.

Sircar, D.C., 1971, [e.d], *Early Indian Indigenous Coins*, Sri Sibendranath Kanjilal, Calcutta.

Sivasamy, V., 1985, *Some Aspects of Early South Asian Epigraphy,* Thirunelvely.

Srinivasan, C.R. 1969, Ilakkasu in Journal of Numis matic Society of India, XXXI:171-175.

Srinivasa Iyenger, P.T., 1995, *History of Tamils from the Earliest Times to 600 A.D,* Asian Education Service, Newdelhi.

Srinivasan, K.R., 1946, The Megalithic Burial and Urn Field of South India in the Light of Tamil Literature and Tradition in *Ancient India,* 2:9-6.

Sitrampalam, S.K., 1980, The Megalithic Culture of Sri Lanka in Unpublished Ph.D. Thesis Deccan College, University of Poona, Poona.

Sitrampalam, S.K., 1990, Proto Historic Sri Lanka: An Interdisciplinary Perspective in *Journal of the Institute of Asian Studies,* VIII [1] : 1-8.

Sitrampalam, S.K., 1992, A Note on the Lakshmi Plaques of Sri Lanka in *S.S.I.C,* Madras, II : 151-158.

Sitrampalam, S.K., 1993, The Parumakas of the Sri Lankan Brahmi Inscriptions in *Kalvettu,* Tamil Nadu Archaeological Department, 29:19-28.

Sivathamby, K., 1998, *Studies in Ancient Tamil Society*, New Century Book House, Chennai.

*South Indian Inscription,* 1986, [Vol.-26] Archaeological Survey of India, New Delhi.

Subbarayalu,Y., 1991, Kodumanal, Excavation 1985-1990 [unpublished Interim Report], Tamil University, Thanjavur.

Subbarayalu,Y.,. Brahmi Graffiti on Potshes From Kodumanal Excavation (unpublished article).

Tracey, J.E. 1889-94, Setupathi Coins in *Madras Journal of Literature and Science.*

Tufnel,R.H.C., 1886-87, Hints to Coins- Collectors in Southern India in *Madras Journal of Literary and Science New Series,* 33-196.

Thapar, Romila., 1995, [e.d], *Recent Perspectives of Early Indian History,* Popular Prakashan, Bombay.

Thaplyal,K.K., 1972, *Studies in Ancient Indian Seals,* Akhila Sharatiya Sanskrit Parishad, Lucknow.

Vasudeva Rao, B. 1998, Peacock-type Mysore Wadeyars Coins in, *S.S.I.C.* V.I.I.I.: 114-6.

Veluppillai, A., 1980, Tamil Influence in Ancient Sri Lanka with Special Reference to Early Brahmi Inscriptions in *Journal of Tamil Studies,* 17:6 -19.

Veluppillai, A., 1980a, *Epigraphical Evidences for Tamil Studies*, Publisher International Institute of Tamil Studies Madras.

Zvelebil,V.Kamil., 1997, *Dravidian Linguistics An Introduction*, Pondicherry Institute of Linguistics and Culture, Pondicherry.

Zvelebil,V.Kamil., 1981, *Tiru Murukan,* Madras.

# இந்நூல்

இலங்கைத் தமிழரிடையே அரசு உருவாக்கமும், நாணயங்களும் கி.பி.13 ஆம் நூற்றாண்டின் பின்னர் தோன்றியதென்ற நீண்டகாலக் கருத்துக்கு முன்னால் இந்நூல் கி.மு.2 ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழ் அரசு மரபும், நாணயங்களும் தோன்றின என்ற கருத்தை தக்க சான்றாதாரங்களுடன் விளக்குகிறது. அவற்றின் அடிப்படையில் இலங்கைத் தமிழரின் பண்டைய கால மொழி, எழுத்து, குடியிருப்பு, அரசு உருவாக்கம், வர்த்தகம், அயல் நாட்டு உறவு, சமயம் போன்ற அம்சங்களும் பார்க்கப்பட்டுள்ளன. நாணயங்களை அடிப்படை மூலாதாரமாகக் கொண்டு ஒரு நாட்டின் அல்லது வட்டாரத்தின் பண்டைய கால வரலாறு பார்க்கப்படலாம் என்ற தொல்லியல் அறிஞர்கள் பலரது நீண்ட காலக் கருத்திற்கு முன்னுதாரணமாக வெளிவந்த முதல் தமிழ் நூல் என்ற சிறப்பு இதற்குண்டு.

இந்நூலாசிரியர் ஈழத்தில் கிடைத்த பல நாணயங்கள் தமிழ் நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டன என்ற பலருடைய பழங்கருத்துகளை வன்மையாக மறுத்து அவை ஈழத் தமிழரால் கி.மு. 2ஆம் நூற்றாண்டிலிருந்து வெளியிடப்பட்டன என்பதை அசைக்க முடியாத ஆதாரங்களுடன் ஏற்ற முறையில் இந்நூலில் விளக்கியுள்ளார்.

**பேராசிரியர் புலவர் செ.இராசு**

இலங்கைத் தமிழர் நாணயவியலுக்கு ஒரு தொல்மரபைக் காட்டும் இந்நூல் இலங்கை மற்றும் தமிழக நாணயவியலுக்குக் கிடைத்த நல்லதொரு மூலநூல் என்று சுருங்கக் கூறலாம்.

***கலாநிதி சு. இராசகோபால்.***